# புதுமைப் பொலிவையும் வனப்பையும் உங்களுக்களிப்பது ஹிமாலயா புக்கே

இளமையும் குளுமையும் தரும் இந்த ஸ்நோவைத் தடவிக் கொண்டு, அதன் மணம் கமழும் புதுமை இன்பத்தை அனுபவியுங்கள் !

## ஹிமாலயா புக்கே ஸ்நோ




மிருதுவான இந்த வாசனைப் பவுடரைப் பூசிக் கொண்ட பின், பூர்த்தி பெறும் உங்கள் பொலிவைப் பாருங்கள் !

## ஹிமாலயா புக்கே டால்கம் பவுடர்

HB514-30 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

தண்ணீர் சப்ளை விஷயமாக உங்கள் தேவை எதுவானாலும் சரி.

# அதற்கென்றே டெமிங் பம்புகள் உள்ளன.



டெமிங் மார்வெல்
வீடுகளுக்கு



டெமிங் ஆயில்ரைட்
தொழிற்சாலைகளுக்கு



டெமிங் டூப்ளே
கிராம தண்ணீர் சப்ளைக்கு

- வீடு, தொழிற்சாலை, ஹோட்டல், ஆஸ்பத்திரி அல்லது கிராம தண்ணீர் தேவைகளுக்கு நம்பகரமான உழைப்புடன் நயமான விலையில் பம்பு செட்டுகள் உள்ளன.
- கைவசம் உள்ள ஸ்டாக்கிலிருந்தும், வந்துகொண்டிருக்கும் ஸ்டாக்கிலிருந்தும் எந்த மாடல்களையும் விரைவில் சப்ளை செய்யமுடியும்.
- ஸ்பேர் சாமான்களுக்கு நீங்கள் கவலைப்படவேண்டியதே இல்லை. அவை எப்பொழுதும் கிடைக்கும்.
- எங்கள் பொறுப்பு, சப்ளை செய்த பம்புகளை பொருத்துவதுடன் நின்றுவிடுவதில்லை. உள்ளூரானாலும் சரி, வெளியூரானாலும் சரி, பம்புகளை அவ்வப்போது சரிபார்த்து ஓடச்செய்வதும் எங்கள் பொறுப்பே. இதற்குவேண்டிய எல்லா வசதிகளும் எங்களிடம் உண்டு.
- ஒரு முறை எங்கள் கம்பெனிக்கு விஜயம் செய்து நேரில் எல்லா பம்பு செட்டுகளையும் பார்க்கவும். டெமிங் பம்புகளைப்பற்றிய ஆலோசனை எப்பொழுதும் எங்களிடம் எளிதில் கிடைக்கும்.




*தண்ணீர் சப்ளை விஷயங்களை சுலபமாக தீர்த்துவைக்கக்கூடிய நிபுணர்கள்*

## ஈஸன் என்ஜினியரிங் கம்பெனி லிமிடெட்.

5-7 செகண்ட் லைன் பீச், மதராஸ்.

## பயனீர் சைக்கிள் ஹவுஸ்

மேலக் கோபுர வீதி, மதுரை



மலர் 17 | இதழ் 42 — தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார் — விளம்பி௵ வைகாசி 5

# வியாதிக்கு மருந்து!

ஜவாஹர்லால் நேரு அவர்கள், காங்கிரசுக்குள் ஜாதி உணர்ச்சி, லஞ்ச ஊழல், குறுகியமனப்பான்மையெல்லாம் புகுந்துவிட்டன; இதனல் காங்கிரஸ் கெட்டுப் போவ தன்றித் தேசமே சீரழிந்து வருகிறது. இதுதான் எனக்கு வேதனை பளிக்கிறது என்று சொன்னர். உடனே காங்கிரஸிலுள்ள மற்றத் தலைவர்களும் அதே பாட்டையே மீண்டும் பாடினர்கள்.

தில்லியில் சமீபத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் மகா நாட்டில் காங்கிரஸ் அக்கிராசனர் திரு தேபர், காங்கிரஸில் புகுந்துவிட்ட ஊழல்களின் ஜாபிதாவைச் சமர்ப்பித்து விட்டு, "காங்கிரஸ்காரர்கள், காங்கிரஸ் கொள்கைகளைக் கடைப்பிடித்து நடக்க முடியவில்லை யென்றால் காங்கிரஸ் கடையையே கட்டி விடலாம்!" என்று வீராவேசத்தோடு பேசியிருக்கிறர்.

அதே போல் ஒவ்வொருவரும் பேசினர்கள்.

மொரார்ஜி தேசாய் அவர்களும், அ. இ. கா. க. கூட்டத்தில் பெரும்பான்மையாக உள்ள சமூகத்தினர் சிறுபான்மையாக உள்ள சமூகத்தினரின் உணர்ச்சிகளை மதித்து நடக்க வேண்டும் என்று தர்மம் பேசினர்! மொரார்ஜி தேசாய் தமிழ் நாட்டிலும் வங்கத்திலும் நடைபெறும் மாபெரும் இந்தி எதிர்ப்பைப் பற்றி மிகுந்த அருவருக்கத் தக்க முறையில் பேசி வருகிறர் என்பதை நேயர்கள் அறிவார்கள். இவருக்கு நாட்டி லுள்ள இந்தி பேசாத சிறுபான்மை சமூகங்களைப்பற்றி ஏதாகிலும் அக்கறையிருப்பதாகக் கொள்ள முடியுமா? ஒருநாளும் கொள்ள முடியாது.

பின் இது என்ன பிதற்றல்! ஏன் இந்த வறட்டுப் பேச்சு என்று புரியவில்லை.

காங்கிரஸில் ஊழல் புகுந்தது இன்று? இல்லை; அது புகுந்து எத்தனையோ ஆண்டுகளாகி விட்டனவே! அதை நாட்டிலுள்ள பெரியோர்களெல்லாம் எத்தனையோ முறை எடுத்துச் சொல்லி விட்டார்களே! இன்றுதான் கண்டு பிடித்தாற்போல் பேசுவது உள்ளத்தின் உண்மையை எடுத்துக் காட்ட வில்லை.

அது மட்டுமல்ல! இந்த ஊழல்களைத் திரும்பத் திரும்ப இப்பொழுது சொல்வ தால் நீக்கிவிட முடியுமா என்ன?

அது அது அந்த அந்தக் காலம் அறிந்து செய்தால்தான் காரியம் நிறைவேறும்.

காங்கிரஸில் புகுந்துவிட்ட ஊழல்களைக் களைவதற்கு முயற்சி சென்ற தேர்தலுக்கு முன்பே எடுத்துக் கொண்டிருக்க வேண்டும்! அப்பொழுதே நாம் பல முறையும் எச்சரிக்கை செய்தோம். அப்பொழுதே காங்கிரஸ் அபேட்சகர்களாக நிறுத்தும் நபர் களைப் பற்றி நமது ஐயங்களைத் தெரிவித்திருந்தோம்.

ராஜ்யக் காங்கிரஸ் தலைமைப் பீடத்தினர் வகுப்புவாதிகளுடன் இணைந்து வேலை செய்வதையும், நாடறிந்த வகுப்புவாதிகளைக் காங்கிரஸ் அபேட்சகர்களாக நிறுத்துவதைப் பற்றியும் எச்சரிக்கை செய்தோம்.

அப்பொழுது தில்லியிலுள்ள காங்கிரஸ் தலைமைப் பீடத்தினர் கண்ணை மூடிக் கொண்டிருந்து விட்டு, வகுப்புவாதிகளோடு இணைந்து கொள்வது வோட்டுப் பெற லாப கரமாக இருந்தால் தடுப்பானேன் என்று இருந்து விட்டு, இப்பொழுது கரடியாகக் கத்துவ தில் எவ்விதப் பயனுமில்லை. இதைக் கேட்டுப் பொது மக்கள் ஏமாந்துவிட மாட்டார்கள்.

நாம் அப்போதே காங்கிரஸிலுள்ள ஊழல்களைக் களைவதற்கு ஒரே மார்க்கம்தான் உண்டு என்று கூறியிருந்தோம்.

தொழில் செய்து வாழத் தெரியாத காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்களாலும், காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களாலுமே காங்கிரசுக்கு இவ்வளவு அவப் பெயர். இவர்கள் காங்கிரசுக்குள் புகுந்து, காங்கிரஸின் செல்வாக்கைத் தங்கள் சொந்தநலன்களுக்காகவும், நண்பர்கள் உறவினர்களின் . நலன்களுக்காகவும் பயன்படுத்திக் கொள்வதாலேயே இவ்வளவு புகார்கள் வந்துள்ளன. இவர்கள் கோஷ்டிகள் சேர்த்துக்கொண்டு ஒருவரையொருவர் கவிழ்க்கச் சதி செய்வதாலேயே இவ்வளவு பூசல்களும் சண்டைகளும் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஏற்பட்டிருக்கின்றன.

காங்கிரஸின் கொள்கைகளைப்பரிபூரணமாக ஒப்புக் கொண்டு, 1920ம் வருஷம் காந்தி மகானின் அழைப்புக்குச் செவி சாய்த்து, உத்தியோகங்களையும், தொழில்களையும் கோர்ட்டுகளையும் துறந்து தேச விடுதலைப் போரில் சேர்ந்தவர்களைத் தவிர மற்ற எந்த ''முழு நேர காங்கிரஸ்'' நபரையும் அபேட்சகர்களாக நிறுத்தக் கூடாது. தங்கள் வயிற்றுப் பிழைப்புக்குக் காங்கிரஸை நம்பாமல் தொழில்களை நம்பி வாழ்பவர்களையே காங்கிரஸ் அபேட்சகர்களாக நிறுத்த வேண்டும்.

காங்கிரஸ் ஸ்தாபனத்தில் எந்தப் பதவியாயினும், — கிராமக் கமிட்டி அங்கத்தினர் பதவியிலிருந்து பார்லிமெண்ட் அங்கத்தினர் பதவி வரை — யாருக்கு வழங்கினாலும், காங்கிரஸை ஒரு சோம்பேறி மடமாகச் செய்து காங்கிரஸின் வருமானத்தில் வாழும் நபர்களை ஒதுக்கி, பகிரங்கமாகத் தொழில்செய்துபிழைக்கும் யோக்கியர்களுக்கே வழங்கவேண்டும்.

காங்கிரஸ் கட்சியை நல்ல முறையில் வைத்துக் காப்பாற்றக் கூடியது உண்மையில் நல்ல நேரான பலமான எதிர்க் கட்சிதான்.

அது ஏற்படும் வரையில், காங்கிரஸ் தலைவர்கள், முழு நேர காங்கிரஸ் புல்லுருவிகளுக்கு விட்டுக் கொடுக்காமல் யோக்கியமாகத் தொழில் புரிந்து குடும்பம் நடத்தி வாழும் நபர்களுக்கே பதவிகளும் உத்தியோகங்களும் வழங்ினால் காங்கிரஸ் நல்ல பெயர் சம்பாதிக்கும். காங்கிரஸ் உருப்பட்டால் தேசமும் சீர்திருந்தி உன்னத நிலையை அடையும்!

யோக்யமான குடும்பங்களின் இல்வாழ்க்கைதான் ஒன்றுகூடித் தேசத்தின் வாழ்க்கையாகிறது. அரசியல் வாழ்க்கையும் அதுவே ஆகும். அப்படியின்றித் தொழில் செய்யாமல் அண்டிப் பிழைக்கும் கூட்டத்தின் சாமர்த்தியமாக அரசியலைச் செய்து விடலாகாது.

## அன்றும் இன்றும்!



# ஹிந்திப் பிரச்னை

**ராஜாஜி**

தமிழ் பேசும் ஐ. ஏ. எஸ். உத்தியோகஸ்தர்கள் ஹிந்தி உயர்தரப் பரீட்சையில் தேற வேண்டும் என்று சென்னை சர்க்கார் சென்ற வாரம் உத்தரவிட்டு விட்டார்கள். இத்துடன் சென்னை சர்க்காரின் ஹிந்தி எதிர்ப்பு முடிவடைந்ததாக வைத்துக் கொள்ளலாம். ''ஹிந்தியும் இங்கிலீஷும் இரண்டும் மத்திய ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்று நாம் வாதாடுவோம்; தமிழ் மக்களை விட்டுக் கொடுக்க மாட்டோம்'' என்றெல்லாம் வீரம் பேசினது வெறும் ஏமாற்றம் என்பது இப்போது வெளியாயிற்று.

நம்முடைய இளைஞர்களின் சார்பில் இந்தப் போராட்டத்தை இனி மக்கள்தான் கவனிக்க வேண்டும். சென்னை சர்க்கார் ஏதோ செய்வார்கள் என்று எதிர்பார்ப்பது வீண்.

சென்னை சர்க்காரைப் பிடித்துக் கொண்டு கரைக்காய் நீச்சல் நீந்துவதைக் காட்டிலும், உருதுவின் மகாத்மியத்தை உணர்ந்து அதற்காக ஆவேசத்துடன் பிரவசனம் செய்த ஜவாஹர்லால் அவர்களையாவது நம்பி நீந்துவது நலம். மொகலாயர் காலத்தில் சமீபத்தில் தோன்றிய மிசிர பாஷையாகிய உருதுவின் நியாயத்தை உணர்ந்த நேரு அவர்கள் அகஸ்தியர் காலம் முதல் வளர்ந்து வந்து ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடிய தமிழ் — ஔவையும் திருவள்ளுவரும் போற்றிய தமிழ் — இதைப் பற்றி அவர் நன்கு அறிவார். அவருக்குச் சொல்ல வேண்டியதில்லை. சொல்லாமலே அறிவார்.

நேற்று வந்த உருதுவுக்கு இவ்வளவு பேசியவர் 'ஆதிசிவன் தந்த தமிழ்' பேசும் மக்களையும் அவர்களின் உரிமைகளையும் மறப்பது தகாது. தமிழ்மொழியைப் பற்றி நமக்குக் கவலையில்லை. அதற்குத் தன்னைத் தானே காத்துக் கொள்ளும் ஆற்றல் உண்டு. ஒரு நாளும் சேதப்படாது. ஹிந்தி என்னும் அரிவாளைக் கொண்டு தமிழ் என்னும் ஆச்சா மரத்தை வெட்ட முடியாது. ஆனால் தமிழ் பேசும் மக்களின் அகில பாரத — உரிமைகளைப் பறிக்கலாகாது. உருது பேசுவோர் ஹிந்திப் பரீட்சையில் தேற முடியாது. அதற்காக அவர்களை அதிகாரத்திலிருந்தும் உத்தியோகங்களிலிருந்தும் நீக்கவோ உள்ளே பிரவேசிக்க மறுக்கவோ கூடாது என்று — நீதியுணர்ந்த நேரு அவர்கள் சரமாரியாகப் பேசினதைப் படித்தோம். அதே நீதியை ஹிந்தியைக் கொஞ்சமும் அறியாத திராவிட மொழியாகிய தமிழ் பேசும் தென்னவர்களின் கஷ்டங்களை உணர்ந்து, அவர்கள் எப்படி ஹிந்தியில் போட்டி போட முடியும் என்று கண்டு, இது வரையில் வழங்கி வந்த ஆங்கிலத்தை நீக்காமல் அதையே பாரத பொது காரியாலய மொழியாக வைத்துக் கொள்ள வேண்டும். அவர் இதை ஒப்புக் கொண்டால் மற்றக் கிளிப்பிள்ளைகளும் ஒப்புக் கொள்ளும்.

ராஜாஜி மண்டபத்தில் ஹிந்தி போதிக்கும் காரியாலயத்தாரும் அதன் வழி ஊதியம் பெற்றுப் பிழைக்கும் பிரசாரகர்களும் சேர்ந்து தேநீர் விருந்து வைத்துக் கூட்டம் கூட்டினார்கள்.

கோஹாட்டி தீர்மானமே வேதவாக்கு என்று கூட்டத்தில் ஒரு தீர்மானம் செய்து விட்டார்கள். அது அர்த்தமற்ற தீர்மானம். வேதத்தில் இரு பட்சமும் இருக்கிறது. வேதத்தைத் தமிழ்ப்படுத்தி, பேசும் மொழியில் எடுத்துரைத்தாலேதான் உண்மையானது விளக்கம் பெறும்.

இந்தக் கூட்டத்தில் சர்தார் வேதரத்தினமும் சந்தானம் அவர்களும் சொன்னது என்ன? 1980 வரையில் தள்ளிப் போடுங்கள் என்றார்கள். அது மட்டுமல்ல, 2080 வரையில் தள்ளிப் போட்டாலும் இந்தியை அரசியல் மொழியாக்கு முன் இந்தியைக் கட்டாயப் படிப்பாக்குங்கள் என்றார்கள்.

ஆங்கிலம், இந்தி, சம்ஸ்கிருதம் எல்லாவற்றையும் அரசாங்க நிர்ப்பந்தத்தால் கட்டாயமாக்கலாம். ஆனால் படித்து ஓரளவு தேர்ச்சி பெறுவது வேறு; போட்டி வேறு. போட்டியில் தமிழர் வெற்றி பெற முடியாது. ஹிந்தி பேசும் மக்களுக்கும் தமிழ் பேசும் மக்களுக்கும் உள்ள வேறுபாடு இருந்தே தீரும். அநீதி விளையும்.

வேதரத்தினம் அவர்கள் சொல்லும் கட்டாயப் படிப்புக்குச் சென்னை சர்க்கார் ஒருநாளும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஒப்புக் கொண்டால் ஆட்சி பீடம் சந்தேகமாகும் என்பது அவர்களுக்குத் தெரியாதா? தெற்கே முழுவதும் காங்கிரஸ் தோல்வி பெற்றால் பாரத அகில காங்கிரஸ் சுகமாக இருக்க முடியுமா? ஆனபடியால் கட்டாயப் படிப்புப் பேச்சு நடக்காத காரியம். கட்டாயப் படிப்பு இல்லாவிடில் சத்தியத்துக்குப் பயந்த இரு சந்தானமும் வேதரத்தினமும் ஒத்துக் கொள்ள வேண்டியதாகும், ஹிந்தி பொது அரசியலுக்கு உதவாது என்று. வேண்டாம் என்று சொல்வதற்குப் பதில் 1980, 2080 என்றெல்லாம் தள்ளிப் போடச் சொல்வதில் என்ன அர்த்தம்?

## ஸ்ரீ சௌடய்யாவின் யோசனை

பிடில் வித்வான் சௌடய்யா ஒரு யோசனை கூறியிருக்கிறார். வரப்பில் உட்கார்ந்து பிடில் வாசித்தே நிலத்தின் வெள்ளாமையை உயர்த்தலாம்; உரம் கூட வேண்டியதில்லை என்று யோசனை கூறினார். இது, காங்கிரஸ் தலைவர்கள் தாங்கள் செய்யும் உபதேசத்தினாலேயே காங்கிரஸ் சீர்ப்பட்டு விடும் என்று எதிர்பார்ப்பதுபோல் இருக்கிறது. நல்ல விதையாக இருந்தால்தான் உற்பத்தி அதிகரிக்கும். அதைக் கவனிக்காமல் ராகங்கள் பாடுவதினாலேயே வெள்ளாமை எடுத்து விடலாம் என்று இந்த யுகத்தில் எதிர்பார்க்கலாகாது!

# என். ஜி. ஓ. வேலை நிறுத்தம்

**மே** மாதம் 15-ம் தேதி தொடங்குவதாக இருந்த அடையாளவேலைநிறுத்தத்தை வாபஸ் செய்யத் தீர்மானித்ததற்காகச் சென்னை என்.ஜி.ஓ.க்களைப் பாராட்டுகிறோம். அவர்களுக்குத் தலைமை வகித்த, நிர்வாகிகளும் நிலைமை கட்டுக்கு அடங்காமல் போகும்படி விடாது, உரிய காலத்தில் அதிகாரிகளுடன் சாதுர்யமாகப் பேசி, சரியானபடி என். ஜி. ஓ.க்களுக்கு ஆலோசனை வழங்கி அமைதியை நிலைநாட்டியதற்குப் பாராட்டுகிறோம்.

அடையாள வேலைநிறுத்தம் தொடங்குமுன் என். ஜி. ஓ. தலைவர்கள் முதன் மந்திரியைப் பேட்டி காண விரும்புவதாகச் செய்தி கேட்டவுடனே டில்லியிலிருந்து விரைந்து வந்து அவர்கள் குறைகளைக் கேட்டுச் சமாதானமளித்து நிலைமையைச் சாமர்த்தியமாகவே சமாளித்துவிட்டார் திரு காமராஜர்.

என்.ஜி.ஓ.வினர்களின் கோரிக்கைகள் எவ்வளவுதூரம் கவனிக்கப்படும், எவ்வளவுதூரம் அவற்றுக்குப் பரிகாரம் அளிக்கப்படும் என்பதைப்பற்றி இரு சாராரும் எதுவும் சொல்லவில்லை. நிதிநிலைமை நெருக்கடியாக இருப்பதால் அதிகப்படியாக மக்கள்மீது வரி வசூலிக்காமல் மேலும் சலுகைகள் அளிப்பது கடினம் என்று நிதி மந்திரி சொல்லி விட்டார். முதன் மந்திரியும் ஏறக்குறைய அதே பாட்டைத்தான் பாடினார். ஆனால் மத்திய அரசாங்க சம்பளக் கமிஷன் அறிக்கை வெளியானதும் இவ்விஷயத்தைப் புனராலோசனை செய்யலாம் என்ற ஒரு நம்பிக்கையை ஊட்டினார். இது வெறும் வார்த்தைகளாக இப்போது தோன்றலாம். ஆனாலும் இதைக் கண்ணியத்துடனே ஏற்றுக் கொண்ட என். ஜி. ஓ.வினர் தங்கள் குறைகளை அதிகாரிகள் கவனத்துக்குக் கொண்டு வந்து விட்டதால் ஸ்ட்ரைக்கின் முதல் நோக்கம் நிறைவேறிவிட்டது என்று பெருந்தன்மையுடனேயே வேலை நிறுத்தத்தை வாபஸ் பெற்று விட்டனர். அவர்களுடைய பெருந்தன்மையைத் தோல்வியின் அறிகுறியாகக் கொள்ளுவது அறிவீனமாகும். வெற்றி தோல்விகளை ஆராய்வதே இது போன்ற கட்டங்களில் அசட்டுத்தனமாகும். ஆனாலும் அரசாங்கம் தங்கள் கௌரவத்தையும் அதிகாரத்தையும் மட்டும் நிலைநாட்டி வெற்றி பெற்று விட்டோம் என்று வாளாயிராமல் உண்மையிலேயே கூடுமான வரையில் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் என். ஜி. ஓ.வினர்களின் குறைகளைக் கவனித்துப் பரிகாரம் தேடுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். அப்போதுதான் அரசாங்கத்தின் மதிப்பும் உயரும். என். ஜி. ஓ.வினர் காட்டிய தாராள மனப்பான்மை வீண் போகவில்லை என்ற நன்றி உணர்ச்சியும் அவர்களிடம் பெருகும்.

---

## கண்ணுறங்கு !



அட்டைப்பட விளக்கம்

# கனவே, வா!

கண்கள் உறங்காவோ—அக்குறை
கனவைக் கண்டிடேனே
—பேராசிரியர் கல்கி

நனவு என்று ஒரு வாழ்வும், கனவு என்று ஒரு வாழ்வும் இயற்கையன்னை மக்களுக்கு அளித்திருக்கிறாள்.

நனவில் விரும்புவதெல்லாம் கைகூடுவதில்லை. கந்தர்வலோகத்துக்குப் போக வேண்டுமென்று ஆசைப்படுவோம். அது நடக்கிற காரியமா? ஆனால் கனவில் கந்தர்வலோகம் என்ன, ஈரேழு பதினாலு உலகங்களையுமே சஞ்சரித்து விட்டு வந்து விடுவோம்.

கனவு என்பது பெரும்பாலும், மனத்தின் ஆசாபாசங்களின் அடிப்படையில் நிகழ்வன. நனவில் விரும்பும் நடக்க முடியாதனவற்றையெல்லாம் கனவு ஓரளவு நிறைவேற்றி வைத்து மனத்தின் தாபத்தைத் தணிக்கவே செய்கிறது. ஆகையால் கனவு ஒரு விதத்தில் பெற்ற அன்னையைப்போல் இதம் அளிக்கவே செய்கிறது.

காதல் நோயினாலும், பிரிவாற்றாமையாலும் பீடிக்கப்பட்டுள்ள காரிகைகளுக்குக் கனவைப்போல் இன்பம் அளிப்பது எது உண்டு?

காதலன் கடல் கடந்து சென்றிருந்தாலும் கனவு உலகத்தில் புகுந்து விட்டால், அவனுடன் கை கோத்துக் கொண்டு குற்றால அருவியின் அருகிலே மதி மயங்கி நிற்கலாம். அருவி கொட்டும் முத்து நீரை, காதலன் அவளுடைய வெண்ணகையோடு ஒப்பிட்டுப் பேசுவதை உள்ளம் குளிரக் கேட்கலாமே!

அவளுடைய நடையின் சாயலையும் அழகையும் தோகை மயிலோடு ஒப்பிட்டுக் கவிதைச் சுவை தோன்றப் பேசுவதை அப்படியே கேட்டுக் கொண்டு மெய் புளகிக்கலாம்!

இப்படி எத்தனை எத்தனை இன்பச் சல்லாபங்கள் காதலனுடன் புரியலாம்!

ஆனால் இவ்வளவும் நனவு என்று நினைத்துக் கண் விழித்து விட்டாலோ, அடாடா! எவ்வளவு ஏமாற்றம்!

மீண்டும் அந்தக் கனவைக் காணமாட்டோமா? மீண்டும் தூங்கிப் போய் அந்த விட்ட கனவைத் தொட்டுவிட மாட்டோமா என்ற ஏக்கமே எழும்! அதற்காகத் தூங்க முயற்சிகளும் நடக்கும்!

இப்படி இழந்த கனவை மீண்டும் பிடிக்க முயலும் ஓர் அணங்கையே இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார், ஓவியர் வினு.

அவள் கனவில் கண்ட காட்சிகளையும் காண்பித்திருக்கிறார். அக் காட்சிகளை மீண்டும் காண அவள் தலையில் கையை வைத்துத் தூக்கம் வரச் செய்யும் முயற்சி பாவம் அழகாக அமைந்திருக்கிறது.

# டாக்டர் கான்சாகிபின் மறைவு

**டா**க்டர் கான்சாகிப் குத்துண்டு இறந்து போய் விட்டார் என்ற செய்தியைக் கேட்டதும் இந்தியமக்கள் பெரும் துயரமடைந்தனர்.

இந்திய சுதந்திரத்துக்காக காந்தி மகானுடன் தோள் சேர்ந்து நின்று போராடியவர்கள் வடமேற்கு பிராந்தியத்தைச் சேர்ந்த தலைவர் டாக்டர் கான்சாகிபும் அவருடைய தம்பி ''எல்லைப்புற காந்தி'' என்று இந்திய மக்களால் அன்புடன் போற்றி வந்த அப்துல் கபார் கான் அவர்களும். இவர்கள் இந்திய மக்களின் உள்ளத்தில் நிரந்தரமான இடம் பெற்று விட்டார்கள். சற்றும் வேற்றுமை உணர்ச்சியின்றிக் காந்தி மகானுடன் பாரதத்தின் சுதந்திரத்துக்காகப் போராடிச் சிறைவாசம் செய்து பல இன்னல்களை அனுபவித்தார்கள்.

பாரதம் பிரிந்து, பாகிஸ்தான் ஏற்பட்டு நாட்டுக்குச் சுதந்திரம் கிடைத்த பின்னரும், அவர்களது உயரிய கொள்கைக்காக, பாகிஸ்தான் சிறையில் கிடந்து வாடும்படி நேர்ந்தது. இவ்வளவு இன்னலுற்றும், கான்சாகிப் பாகிஸ்தானுக்கு உண்மையோடும் விசுவாசத்தோடும் இருந்தார். அதனாலேயே அவர் பாகிஸ்தான் பிரதமராக முடிந்தது. அவர் பாகிஸ்தான் பிரதமராக இருந்து நல்ல நிர்வாகம் நடத்தியதே அவர் உயிருக்கு வினையாக வந்து முடிந்துள்ளதை நினைக்கும்போது நெஞ்சம் பொருமுகிறது. வேலையிலிருந்து நீக்கப்பட்ட ஒரு குமாஸ்தா அவரிடம் தன் குறையைச் சொல்லியதாகவும் அதற்கு அவர் சாந்தமாகப் பதில் சொல்லாததால் கோபம் மேலிட்டு மதியிழந்த குமாஸ்தா குத்தி விட்டதாகவும் பத்திரிகைச் செய்தி. இது எவ்வளவு தூரம் உண்மையோ! அல்லது வேறு சதிகாரர்களின் ஆளாக இருந்து இக்குமாஸ்தா செய்தானோ என்பது இனிதான் விசாரணையின் மேல் தெரிய வேண்டும். பாகிஸ்தானில் எத்தனையோ மந்திரி சபைகள் ஏற்பட்டுக் கவிழ்ந்திருக்கின்றன. ஆனால் டாக்டர் கான் சாகிப் மந்திரி சபைதான் சிறிது காலம் நீடித்து நின்று மக்களுக்கு நல்ல சேவை செய்தது.

மொத்தத்தில் பாகிஸ்தான் அரசியல் குழப்பத்தின் நிலைக்களனாக இருந்து வருகிறது. அதில் சத்தியத்துக்கும் நேர்மைக்கும் கட்டுப்பட்டவர்கள் இந்த இரு சகோதரர்கள். அவர்களில் தம்பியை மறுபடியும் சிறையில் அடைத்து விட்டார்கள், தமையனும் கொல்லப் பட்டார். இனி பாகிஸ்தான் 'வாய்மைக்கு யாருளரே' என்று தான் ஏங்குகிறது!

# அருள்வாக்கு

சனாதன தர்மத்தின் அடிப்படை சித்த சுத்திதான். நமது தர்மத்தைப் பற்றி நாம் வெகுவாகப் பெருமைப் பட்டுக் கொள்கிறோமே தவிர, வெகு சிலர்தான் அதன் கொள்கைகளைக் கடைப்பிடிக்கின்றனர். சித்த சுத்திக்குப் பல அம்சங்கள் காரணமாக உள்ளன. அவைகளில் "சுத்த அல்லது தூய உணவு" முக்கியமானது. பல நற்பண்புகள் ஏற்படுவதற்குச் சுத்த உணவு முக்கிய காரணமெனப் பல மகரிஷிகள் உபதேசித்துள்ளனர். சாப்பிடும் உணவுக்கும், சித்த சுத்திக்கும் என்ன, எப்படி சம்பந்தம் இருக்குமெனக் கேட்கலாம். உதாரணமாக, மதுவை எடுத்துக் கொள்ளலாம். அது புத்தியைப் பாதித்து மனிதனை நிலை தவறச் செய்கிறது. இம்மாதிரியான சில உணவு வகைகள், மனிதனை நிலைகுலையச் செய்கின்றன. ஆகவே உட்கொள்ளும் உணவுக்கும் மனநிலைக்கும் சம்பந்தம் இருக்கிறது என்பதை மறுக்க முடியாது. அதனால்தான் நம் நாட்டில் உணவு சம்பந்தமான கட்டுப்பாடும் நியதியும் இருந்து வருகின்றன.

நல்ல ரக உணவு வகைகள், சித்த சுத்தியை ஏற்படுத்துகின்றன. இதனால் பக்தி, ஞானம், மேதை ஆகியவை பிறக்கின்றன. சுத்தமான உணவைத் தயாரிப்பதற்கு, நாம் கையாளக் கூடிய வழி, அவ்வுணவை நாமே தயாரிப்பதுதானாகும். நம் நாட்டின் அநேகம் பேர், உணவைத் தாமே தயாரித்து, பகவானுக்கு நைவேத்யம் செய்து, பின்னர் அதை உட்கொள்ளும் பழக்கத்தில் ஈடுபட்டுள்ளனர். மாணவரும், ஆசிரியரும் "சுயம் பாகம்" முறையைப் பின்பற்றுவது நல்லது. ஞாயிற்றுக்கிழமைகளிலும், இதர விடுமுறை தினங்களிலும் இதைக் கற்கலாம். இதை அனுஷ்டித்தால் 'சனாதன' தர்மத்தில் ஒரு முக்கிய கொள்கையை அனுஷ்டிப்பதாகக் கொள்ளலாம். மரத்தின் அடிவேருக்கு நல்ல ஈரம் படும்படி நீர் விட்டால்தான், மரம் செழித்துப் பெரிதாக வளரும்; நல்ல பலனையும் தரும். இலைக்கும் தண்டுக்கும் மேலிருந்து தண்ணீர் ஊற்றிவிட்டால் மட்டும் போதாது: பலன் கிடைக்காது. நல்ல வாழ்க்கை நடத்த பலமான அஸ்திவாரம் "தூய உணவு"தான்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# உரிமையில் தலையிடுவானேன்?

இந்தியாவின் அரசியல் அமைப்பு சமஷ்டி முறையைச் சேர்ந்தது என்பது எல்லோரும் அறிந்ததே. பல மாகாணங்கள், அல்லது ராஜ்யங்கள் ஒன்றுசேர்ந்து நாடு முழுமைக்கும் அரசியல் முறையை வகுத்து அதன்படி மத்திய அரசாங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது. ராஜ்யங்களின் உரிமைகளும் மத்திய அரசாங்கத்தின் உரிமைகளும், அவரவர்கள் பொறுப்புக்களும், அரசியல் அமைப்பில் திட்டவட்டமாக வரையறுத்துக் கூறப்பட்டுள்ளன. அதே போல் மத்திய அரசாங்கத்துக்கும் ராஜ்ய அரசாங்கத்துக்குமுள்ள தொடர்புகளையும், நிர்ணயித்து விவரிக்கப்பட்டிருக்கின்றன.

இவ்விதமாக நிர்ணயம் செய்யப்பட்டிருப்பது மிகவும் அவசியம். பலமுள்ள மத்திய அரசாங்கம் நாட்டு நலனுக்கு இன்றியமையாததாயினும், அதனுடைய நடவடிக்கைகளினால் தேசத்திலுள்ள மற்ற ராஜ்யங்களின் உரிமைகளுக்குப் பங்கம் ஏற்படாமல்பார்த்துக் கொள்ளுவது முக்கியமானது. இதைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பும் மக்கள் தேர்ந்தெடுத்துஅனுப்பும் சட்டசபை அங்கத்தினர்களைச் சார்ந்ததே. ராஜ்யங்களின் உரிமையைப் புறக்கணிக்கும் வகையில் சமீபத்தில் லோக சபையில் பிரேரேபித்த எஸ்டேட் வரி திருத்த மசோதாவைத் தடுத்து நிறுத்தி ராஜ்யங்களின் உரிமையைப் பாதுகாத்த பெருமை சென்னை ராஜ்யத்திலிருந்து தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்ட திரு பெரியசாமி கவுண்டருக்குக் கிடைத்தது. தமிழ் நாட்டுப் பிரதிநிதி ஒருவர் இவ்வாறு ஊக்கத்துடனும் கவனத்துடனும் அரசியல் சட்டத்தில் அளிக்கப்பட்ட உரிமைகளை நிலைநாட்டியது பற்றித் தமிழ்நாடு பெருமை கொள்ள வேண்டும்.

1957-ம் ஆண்டு டி. டி. கே. புகுத்திய பல வரி வகைகளில் எஸ்டேட் வரியும் ஒன்று. இதன்படி லக்ஷம் ரூபாய் பெறுமானமுள்ள எஸ்டேட்களும்—விவசாய நிலங்களும் இதர வகைகளும் சேர்ந்தவைகளுக்கு எல்லாம் விலக்களிக்கப்பட்டு, அதற்கு அதிக பெறுமானமுள்ளவைகளுக்கே வரி விதிக்கப்பட்டது. இதனால் எதிர்பார்த்த அளவு பணம் வசூலாகவில்லை என்பதற்காக 1958 பிப்ரவரி 29ல் சமர்ப்பித்த பட்ஜட்டில் இந்த விலக்கு வரம்பு 50,000 ரூபாயாகக் குறைக்கப்பட்டது. இது சம்பந்தமாக ஒரு திருத்த மசோதா லோக சபையில் சமீபத்தில் பிரேரேபிக்கப்பட்டு, விவாதம் நடக்கையில் இந்த உரிமைப் பிரச்னை எழுந்தது.

அரசியல் சட்டம் 252-வது பிரிவின்படி ராஜ்யங்களுக்குச் சம்பந்தப்பட்ட வரி இனங்களுக்கு மத்திய அரசாங்கம் சட்டம் செய்ய வேண்டுமானால், குறைந்த பக்ஷம் இரண்டு ராஜ்ய சட்டசபைகளாவது தங்களது உரிமையை மத்திய அரசாங்கத்துக்கு அளித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும். அவ்வாறு அவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்த பிறகே மத்திய அரசாங்கம் சட்டம் செய்யலாம். அவ்வாறு ஒரு முறை அங்கீகாரம் பெற்றுச் சட்டம் இயற்றிய பின்னரும் அதே சட்டத்துக்குத் திருத்தங்கள் செய்ய நேர்ந்தாலும், இரண்டு ராஜ்யங்களாவது தங்கள் சம்மதத்தைத் தெரிவிக்க வேண்டும். அரசியல் சட்டத்தை வகுத்த நிபுணர்கள் இந்த ஷரத்து மிகவும் அவசியம் என்று கருதித்தான் இதைப் புகுத்தியிருக்கின்றனர்.

எஸ்டேட் வரி திருத்த மசோதாவில் விவசாய நிலங்களும் அடங்கியுள்ளன. விவசாயம், விவசாய நிலங்கள், அது சம்பந்தப்பட்ட வரி விதிப்பு எல்லாம் ராஜ்யங்களுடைய ஆதிக்கத்துக்குட்பட்டவை. எனவே விவசாய நிலங்கள் அடங்கிய எஸ்டேட்டுகளின் மீது விதிக்கும் வரிக்காக வரம்பைக் குறைப்பதற்கு, ராஜ்யங்களின் சம்மதம் தேவை. இதைக் கோராமலே சட்டம் இயற்றுவது தவறு என்பதைத் திரு பெரியசாமி கவுண்டர் எடுத்துக் காட்டினார்.

சட்ட மந்திரி இந்தக் குறைபாட்டை ஏற்க மறுத்ததுடன், ராஜ்யங்கள் 1957-ம் ஆண்டு இயற்றிய எஸ்டேட் வரி சட்டத்துக்கு அங்கீகாரம் தெரிவித்து விட்டதால், இப்போது புதிதாக ஒரு தீர்மானம் அவசியமில்லை என்று வாதித்தார். சட்டத்தைப் பாதுகாக்கும் பொறுப்பும், அரசியல் அமைப்பை முறை பிறழாது அமுல் நடத்துவதில் கவனமும் காட்ட வேண்டிய சட்ட மந்திரியே இவ்வாறு ராஜ்யங்களின் உரிமை விஷயத்தில் அலட்சிய மனப்பான்மையுடன் நடந்து கொண்டது வருந்தத்தக்கதே. சபாநாயகர் திரு அனந்தசயனம் அய்யங்காரும், இதர அங்கத்தினர்களும், கம்யூனிஸ்டு அங்கத்தினர் உள்பட அவருடைய தவறை எடுத்துக் காட்ட வேண்டியிருந்தது. திருத்த மசோதாவில் விவசாய நிலங்கள் அடங்கியிருப்பதாலும், முதல் மசோதாவைப் போல் **அதேமாதிரி முறையில்** திருத்தங்கள் நிறைவேற்ற வேண்டும் என்று 252-வது பிரிவு அரசியல் சட்டம் சொல்லுவதாலும், இரண்டு ராஜ்யங்களின் சம்மதத்தைப் பெறாமல் இந்தத் திருத்தம் நிறைவேற்றக் கூடாதென்று எடுத்துக் காட்டினார்.

கடந்த பத்தாண்டுகளில் ராஜ்யங்களின் உரிமைகள் படிப்படியாகக் குறைந்து பல துறைகளிலும், மத்திய அரசாங்கத்தின் தயவுக்கும், சலுகைகளுக்கும் அவர்கள் எதிர்பார்த்து நிற்க வேண்டிய நிலைமைக்கு வந்திருக்கின்றனர். மத்திய அரசாங்கமும் படிப்படியாகத் தன்னுடைய பலத்தை அதிகரித்துக் கொண்டேதான் வந்திருக்கின்றது. உணர்ந்தோ, உணராமலோ, திட்டமிட்டோ, எதேச்சையாகவோ, மத்திய அரசாங்கம் ராஜ்யங்களின் உரிமைகளைப் பறித்துக் கொள்வதில் உற்சாகம் காட்டுகிறார்கள்; அவற்றைப் பாதுகாப்பதில் அக்கறை காட்டுவதில்லை என்ற எண்ணம் வலுப்பெற்று வருகிறது. எஸ்டேட் வரி திருத்த மசோதா இதற்கு ஒரு உதாரணம். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் ஜனநாயகத்தின் கோட்பாடுகளை நிலைநிறுத்தி, ராஜ்யங்களின் உரிமையைப் பாதுகாப்பதில் மக்கள் சபை அங்கத்தினர்கள் கண்ணும் கருத்துமாயிருக்கவேண்டும்.

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

## 30

**பி**றனுடைய இல்லத்தில் பாபப் பிரவேசம் செய்தவனை நான்கு வேதனைகள் வேட்டை நாய்கள் போல் விடாமல் தொடர்ந்து செல்லும் — பகை, பாவம், பயம், அவமானம். இவற்றினின்று தப்பவே முடியாது.

பகைபாவம் அச்சம்
பழியென நான்கும்
இகவாவாம் இல்இறப்பான்
கண்.

[இகவாவாம் — நீங்காவாம்.]

இந்தக் குற்றத்தைச் செய்து அனுபவம் பெற்ற மனிதர்களுக்கு வள்ளுவர் சொல்லியிருப்பதின் உண்மை நன்றாக விளங்கும். துரோகம் செய்த இடத்தில் பகைமையும், பகைமையின் பயனாக இடைவிடாத பயமும் உண்டாகும். செய்யும் குற்றம் மறைவில் செய்யப்பட்டாலும் தெரிந்து போகும் என்கிற இடைவிடாத பயம். பாவத்தைப் பற்றியும் பழியைப் பற்றியும் சொல்ல வேண்டியதே யில்லை.

பிறன் மனைவியைக் காதலித்து இன்பம் நுகர்வோனின் வாழ்க்கை நாள்தோறும் பயந்து சாவதே ஆகும் என்கிறார் முனிவர். பாபிகளுடைய சங்கடத்தை நுட்ப அறிவுடன் முனிவர் கண்டு சொல்லி யிருக்கிறார். அவிவேகத்தில் உழலும் மக்களை எச்சரிப்பதற்கல்லவோ முனிவர் அவதரித்தது.

* * *

**பி**றர் மனைவியை மனத்திலுங்கூட விரும்புவது குற்றம். அந்தக் குற்றம் மனத்தில் உண்டாயின் இல்வாழ்க்கையின் தூய்மை அதனால் அழிந்தபடியே.

அறன்இயலான் இல்வாழ்வான்
என்பான் பிறன்இயலாள்
பெண்மை நயவா
தவன்.

அறன் இயலான் இல்வாழ்வான் — அறத்தின் இயல்போடு கூடிய முறையில், அதாவது அறவழியில், இல்லற வாழ்க்கை நடத்துகிறவன். பிறன் இயலாள் — பிறனொருவனுடைய உரிமைக்குப் பொருளாகியவள்; அவனுடைய பெண்மை நயவா — பெண் தன்மையின் விளைந்து தோன்றும் இன்பத்தை. நயவாதவன் — விரும்பாதவனே — அறத்தோடு கூடிய இல்வாழ்க்கை நடத்துகிறவன் என்று சொல்லத் தகுந்தவன்.

பிறருடைய இல்லறத்தைக் கெடுப்பவன் எப்படி இல்லறம் நடத்துபவன் ஆவான்? பிறனுடைய மனைவியை விழையும் ஒரு கிரகஸ்தன் மற்றப்படி நல்லவனாக இருக்கலாம். தன் மனைவியையும் குறைவின்றிக் கவனிப்பவனாக இருக்கலாம். குழந்தைகளுக்கு நல்ல தகப்பனாக இருக்கலாம். மற்ற எல்லா விஷயங்களிலும் சரியாகவே இருந்து வரலாம். ஆனால் உள்ளத்தின் தூய்மை சிதைவடைந்து விட்டபடியால் இது வெல்லாம் வேஷமாய் முடிந்தபடியாகும். இல்லறம் என்ற தருமத்தைக் கொன்றவனுக்கு அந்தத் தருமத்தில் இடம் ஏது?

* * *

**ஆ**ண்மைக்குள் பேராண்மை எது? பிறருக்கு உரிமைப்பட்ட ஸ்திரீகளின்மேல் உள்ளம் செல்லாமல் பாதுகாத்துக் கொள்ளும் ஆண்மையே பேராண்மை. பல பெண்களை விரும்புவது ஆண் தன்மைக்கு இலக்கணம் ஆகாது. அத்தகைய இச்சைக்கு இடம் கொடாமல் மனத்தைக் காத்தலே உண்மை வீரியம்.

பிறன்மனை நோக்காத
பேராண்மை சான்றோர்க்கு
அறன்ஒன்றோ ஆன்ற
ஒழுக்கு.

[அறன்ஒன்றோ — அறம் மாத்திரமா? அல்ல. ஆன்ற ஒழுக்கு — சமூகத்துக்கு நன்மை தரும் ஒழுக்கமும் அதுவே.]

உண்மையான வீரியம் மனத்தைத் தவறான முறையில் பெண்கள்பால் செல்லாமல் தடுத்துக் காமத்தை வெல்லுதல். மனத்தை அடக்க முடியாமல் இஷ்டப்படி செல்ல விட்டுப் பல பெண்களுடன் சேர்தல் ஆண்மையல்ல, பலவீனம். ஆண்மைக்குரிய பலம் காமத்தை அடக்கும் பலம். காமமாகிய சத்துருவை ஜெயிப்பதுதான் ஆண்மை. அந்தப் பகையை வெல்லாமல் தோற்றவன் ஆண்மையற்றவன்.

# கனிவுடைமையே பண்புடைமை

தன்னை மறந்து சிரித்துக் கொண்டிருக்கும் அச் சிறுமி ஒரு நாள் தேவாரம் என்ற இடத்தில் தனது பிஞ்சுக் கரங்களில், ஒன்றில் அரை டிக்கட்டுடனும், மற்றொன்றில் துணி மூட்டையுடனும், கண்கள் கலங்கியபடி எங்கள் பஸ்ஸில் ஏறினாள். அவளை வழி அனுப்ப வந்த தந்தை, ''குழந்தை, விடுமுறை கழிந்து திண்டுக்கல்லிலுள்ள தன் பள்ளிக்குத் திரும்புகிறாள்; அவளை நீங்கள் கவனித்துக் கொள்ள வேண்டு''மெனக் கேட்டுக் கொண்டார். பொங்கி வரும் கண்ணீரிடையே புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு அவள் விடை தந்தாள்.

அன்புடன் இரு கரங்கள் அவளை அழைத்துச் சென்று ஜன்னலருகே அமர்த்தின. வெளியே மின்னலெனத் தோன்றி மறையும் அழகிய கோயில்கள், பசுமையான கிராமங்கள், அவற்றின் வரலாறுகளை அன்பும், கனிவும் நிறைந்த சொற்களால் கூறக் கேட்டு அச்சிறுமி தன்னை மறந்தாள். பெற்றோரின் பிரிவையும் மறந்தாள். பெற்றோரின் பாசத்திற்கு அப்பாலும் அன்பையும் கனிவையும் காண முடியுமென்பதையும் உணர்ந்தாள்.

இதுபோன்ற மனம் நெகிழும் வழியனுப்புகளையும், பிரிந்தவர் கூடும் ஆனந்தக் காட்சிகளையும் எங்கள் 46 வருட போக்குவரத்துத் தொழிலில் பல தடவை கண்டிருக்கிறோம். நிர்வாகத் திறமை மட்டும் போதாது. கனிவுப் பண்பு வேண்டும் என்பதே எங்கள் அநுபவ படிப்பினை.

கோடிக்கணக்கான பிரயாணிகளை ஏற்றிச் செல்கிறோம். ஆயிரக்கணக்கான பேர்களுக்கு வேலை கொடுக்கிறோம். நாட்டின் பல பாகங்களைச் சங்கிலி போல் இணைத்திருக்கிறோம். ஆயினும் இச்சாதனைகளால் மட்டும் நாங்கள் பெருமை அடைவதில்லை.

''டி. வி. எஸ். ஸ்தாபனம்தான் நம்மை மனிதர்களாகப் போற்றிக் கனிவுடன் கௌரவிக்கிறார்கள்'' என்று எங்கள் பிரயாணி ஒருவர் கூறினார். அவருடைய புகழுரையைத்தான் நாங்கள் பொன்னேபோல் போற்றுகிறோம். எங்கள் சாதனைக்கு அத்தாட்சியாகவும் வணங்குகிறோம்.



**சதர்ன் ரோட்வேஸ்**



# பிரைவேட் லிமிடெட், மதுரை

(டி. வி. எஸ். ஸ்தாபனம்')

விட்ட

## பட்டு இறக்குமதி

கைத்தறி நெசவாளர்களுக்கு மிகத் தேவையான பட்டு இறக்குமதியை மத்திய சர்க்கார் நிறுத்தி விட்டார்கள். அதனால் கைத்தறி நெசவாளர்களுக்கு மிகுந்த கஷ்டமும் நஷ்டமும் ஏற்பட்டிருக்கின்றன. நியாய மான விலைக்குப் பட்டு கிடைப்பதே இல்லை. கூடுதலான விலைக்கும் பட்டு கிடைப்பது அரிதாகிவிட்டது. ஊடும் பாவும் பட்டு நெய்யும் தறிகளும் பட்டு இல்லாமல் தூங்குகின்றன. கவர்ச்சிகரமான நூல் சேலைகள் தயார் செய்ய வேண்டுமானாலும் பட்டு இல்லாமல் முடியாது என்பது சர்க்காருக்குத் தெரியாத விஷயமில்லை. இவ்விஷயத்தில் மத்திய, ராஜ்ய சர்க்கார்கள் உடனடியாகக் கவனித்துக் கஷ்ட நிவாரண முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

அருப்புக்கோட்டை
3—5—58

அ. போ. நாராயணன்

## ஆசிரியர்கள் நிலை

நமது சர்க்கார் ஆசிரியர்களுக்குச் செய்யும் நன்மைகள் சில; தீமைகள் பல. தேர்தலுக்கு முன், ஆசிரியர்கள் கவனத்தைக் கவர, எல்லா ஆசிரியர்களுக்கும் எங்கு வேலை செய்தாலும் படிப்புக்குத் தகுந்த சம்பளம் கொடுப்போம் என்றார்கள். ஆனால் நடப்பது வேறு. ஒரே பாடசாலையில் படித்துவிட்டு வெளிவந்து வேலை செய்யும் செகண்டரி கிரேடு ஆசிரியர்கள், அதுவும் நாட்டாண்மை கழகத்தாரால் நடத்தப்படும் பள்ளிகளில் ஒருவர் செகண்டரி கிரேடு சம்பளமும் (ரூ. 45+5+29=79) ஒருவர் (36+25=61) ஹயர் கிரேடு சம்பளமும் வாங்குகிறார்கள்.

பத்தாயிரம் வாக்குகள் வாங்கிய எம். எல். ஏ.க்களுக்கும் முப்பதாயிரம் வாக்குகள் வாங்கிய எம். எல். ஏக்களுக்கும் ஒரேவித சம்பளம் தான் கொடுக்கப்படுகிறது. அதேபோல் முதல் வகுப்பு போதிக்கும் செகண்டரி கிரேடு ஆசிரியராக இருந்தாலும் ஒரே சம்பளம், எட்டாம் வகுப்பு போதித்தாலும் ஒரே சம்பளம் கொடுக்க முன்வர வேண்டும்.

எருமைப்பட்டி
30—4—58

தெ. கிருஷ்ணசாமி

## விவசாயிகளை வாட்டும் வரி

இவ்வாண்டில் விதிக்கப்பட்டுள்ள வரிகளில் (Diesel) டீசல் எண்ணெய்க்குக் காலன் ஒன்றுக்கு 25 நயே பைசே விற்பனை வரியில் கூடுதலாகச் செய்யப்பட்டிருக்கிறது. மோட்டார் எண்ணெய் விற்பனை வரி திருத்த மசோதா என்ற பெயரில் இந்த வரி உயர்வு சட்டமாகச் செய்யப்பட்டிருக்கிறது. டீசல் எண்ணெய் வகையில் ஹைஸ்பீட் (High Speed Diesel) எண்ணெய் என்றும் லைட் டீசல் (Light Diesel) எண்ணெய் என்றும் இரண்டு வகை எண்ணெய்கள் இருக்கின்றன. ஹை ஸ்பீட் டீசல் எண்ணெய் மோட்டார் வாகனங்களை ஓட்டுவதற்கு விசேஷமாக உபயோகப்படுவதுடன், விவசாயிகளின் தண்ணீர் இறைக்கும் இயந்திரங்களை ஓட்டுவதற்கும் உபயோகப்படுகிறது. லைட் டீசல் எண்ணெய் மோட்டார் வாகனங்களுக்கு உபயோகப்படுவதில்லை. ஆனால் விவசாயிகளின் தண்ணீர் இறைக்கும் இயந்திரங்களுக்கு அதுதான் விசேஷமாக உபயோகப்படுகிறது.

இந்த மார்ச்சு மாதம் 14ம் தேதி நம் ராஜ்ய சட்டசபையில் இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்டது. 'டீசல்' எண்ணெய்க்கு விதிக்கப்படும் புதிய வரி விவசாயிகளையும் பாதிக்குமென்றும், அவர்களுக்கு இந்த வரி கூடாது என்றும் கோரி எதிர்க்கட்சியினர் இம்மசோதாவுக்குத் திருத்தம் கொண்டு வந்தனர். இந்தத் திருத்தத்தைக் காங்கிரஸ்காரர்கள் தவிர இதர கட்சிக்காரர்களும் ஆதரித்திருக்கின்றனர். கடைசியில் திருத்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டது.

இந்த வரியின் காரணமாக 1—4—1958 முதல் ஹை ஸ்பீட் டீசல் எண்ணெயின் விலை 14·71 சத விகிதம் வரை ஏறிவிட்டது. அத்துடன் மோட்டார் வாகனங்களுக்கே பயன்படாத லைட் டீசல்எண்ணெயின்விலையும் 20 சத விகிதம் வரை உயர்ந்துவிட்டது.

ஆறுமாதகாலமாகச் சில பிரதேசங்களில் மழை பெய்யவே இல்லை. கோடை வெய்யில் உக்கிரமாக இருக்கும் இந்த நாளில் மழை பெய்யுமென்ற நம்பிக்கையுடன் விவசாயிகள் இறைப்புகளின் மூலம் குறுவை போன்ற பயிர்களை வழக்கமாகச் சாகுபடி செய்ய வேண்டிய காலம். இந் நிலையில் எண்ணெய் விலை உயர்வு இந்தக் கோடை சாகுபடி செய்யும் விவசாயிகளைப் பாதிக்கக் கூடும். இதனால் உணவு உற்பத்தி நிச்சயம் குறைந்துவிடும்.

விவசாயிகள் தங்கள் குறைகளை எடுத்துச் சொல்லவும், நிவர்த்தி செய்து கொள்ளவும் மற்றவர்களைப் போல் கட்டுப்பாடும் சக்தியுமில்லாதவர்களாகவே இன்னமும் இருந்து வருகின்றனர். ஜனநாயக அரசியல் சகாப்தத்திலே இனியும் விவசாயிகள் இதே நிலையிலிருந்து வந்தால் அரசாங்கத்துக்கு மிக்க சக்தியற்றவர்களாகவே தோற்றமளிப்பார்கள். அரசாங்கத்தாலும், அரசியல்வாதிகளாலும் இவர்கள் புறக்கணிக்கப்படுவார்களென்பதில் ஐயமிருக்காது. ஆகையால் இனியாவது தங்கள் நலங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக ஜனநாயக முறையில் ஒரு சங்கம் உடனடியாகத் தேவை என்பதை விவசாயிகள் உணர்வார்களாக.

சாத்தனூர்
19—4—58

க. வெங்கடகப்பு

## மகிழ்ச்சியும் வருத்தமும்

தேவிகுளம் உபதேர்தலில் கேரள கம்யூனிஸ்டு மந்திரிகள் கலந்துகொண்டு பிரசாரம் செய்யப் போவதில்லை என்று முடிவு



செய்திருப்பது வரவேற்கத் தக்க விஷயம். அப்பொழுதுதான் ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள் தங்கள் அதிகாரத்தையும் செல்வாக்கையும் துஷ்பிரயோகம் செய்யாமல் இருக்க முடியும்.

சென்ற பொதுத் தேர்தலின்போது ஆளும் கட்சியினர் தேர்தலுக்கு முன்னால் மந்திரிசபையிலிருந்து விலகிவிட வேண்டுமென்று அறிவிற் சிறந்த ராஜாஜி அவர்கள் கூறினார்கள். கல்கி பத்திரிகையும் அதை வற்புறுத்தியது.

கேரள சர்க்காரின் இந்த முடிவுகளைக் கண்டு மகிழ்ச்சியடையும் இத்தருணத்தில், நமது தமிழக மந்திரிகள் தேவிகுளத்தில் தேர்தல் பிரசாரம் செய்யச் செல்வது வருந்தப்படக் கூடிய விஷயமாகும்.

தேப்பத்தூர்
6—5—58

ரா. தாஸ்

## 'தாகம் தீர்ந்தது'

கல்கியில் 27-4-58ல் வெளியான ''தாகம் தீர்ந்தது'' என்ற சிறுகதை என்னை மிகவும் கவர்ந்தது. திரு துறைவன் அவர்கள் தனது படைப்பின் ஒவ்வொரு கதாபாத்திரத்திலும் வெவ்வேறு விதமான மனக் குமுறலைக் கைதேர்ந்த சிற்பியைப் போன்று வெகு அநாயாசமாகச் சித்திரித்துள்ளார்.

சேலம்
6—5—58

எஸ். சொக்கலிங்கம்

## விவசாயமும் மின்சாரமும்

திருநெல்வேலி மாவட்டத்திலே முக்கியமாக, கிராமாந்திரங்களில் மானம்பார்த்தபூமியில் நன்செய் நிலங்களுக்கு மாடுகள் வைத்து, கிணறுகளில் கமலை இறைத்து நீர் பாய்ச்சுகிறார்கள். இந்த வருடம் 300 ரூபாய்க்கு மாடுகள் பிடித்தால் மறு வருடம் இந்த மாடுகள் ரூபாய் 100-க்குக் கூட விலை போவதில்லை. விவசாயத்தால் கஷ்டமும் நஷ்டமும் தான் ஏற்படுகிறது. ஆகவே மின்சார வசதிகள் ஏற்படுத்தச் சர்க்கார் முயற்சி செய்ய வேண்டும். போதும் தண்ணீர் இறைப்பதற்குத் தேவையான மின்சார இயந்திரங்களை வாங்க முடியாத நிலைமையில் உள்ள விவசாயிகளுக்கு அவற்றை வாங்குவதற்காகக் கடன் உதவி அளிக்கவும் நமது சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும். இவ்விதம் செய்தால் நாட்டின் உணவு உற்பத்தி பெருகுவதோடு, பொருளாதார சுபிட்சமும் ஏற்படும். நமது அரசாங்கம் முக்கியமாக மின்சாரம் இல்லாத பகுதிகளுக்கு மின்சாரமும் இயந்திரங்கள் வாங்குவதற்கு நீண்ட காலக் கடன் உதவியும் செய்ய வேண்டிக் கொள்கிறேன்.

அம்பலசேரி
26—4—58

மு. மா. முத்தையாபிள்ளை

## ஒரு வேண்டுகோள்

வைகாசி அனுடத்தை வள்ளுவர் திருநாளாகத் தமிழ் மக்கள் வாழும் நாடுகள் எங்கும் கொண்டாடுவதற்குச் சென்ற ஆறாண்டுகளாக முயன்று வருகிறோம். இந்தியா, இலங்கை, மலாயா, சிங்கப்பூர், பர்மா, தென்னாப்பிரிக்கா, பிஜித்தீவுகள் முதலிய இடங்களிலெல்லாம் கொண்டாடச் செய்துள்ளோம்.

மோரீஸ் தீவிலும் பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் வாழ்கிறார்கள். அத்தீவிலுள்ள தமிழ் அறிஞர்களுடனே, தமிழ் நிலையங்களுடனே தொடர்பு கொண்டு 1—6—58 அன்று திருவள்ளுவர் திருநாளை அங்கும் கொண்டாடச் செய்ய விரும்புகிறோம். அங்குள்ள தமிழ் அறிஞர்கள் இரண்டொருவரின் முகவரியையோ, தமிழ் நிலையங்களின் முகவரியையோ இப்பத்திரிகையின் வாசகர்கள் யாரேனும் எமக்கு அறிவிப்பின் பேருதவியாயிருக்கும்.

கொழும்பு
30—4—58

கா. பொ. இரத்தினம்
தலைவர், தமிழ்மறைக் கழகம்

## கருத்து மிக்க தலையங்கம்

இவ்வாரத்திய நமது கல்கியின் தலையங்கமான 'அதிர்ச்சி வைத்தியம்' கண்டேன். ஒரே ஒரு பக்கத்துக்குள் அடங்கியிருக்கும் அந்தச் சின்னஞ்சிறு தலையங்கத்தில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு சிறு சிறு வாக்கியங்களும் ஆழமும் அர்த்தமும் அவசியமும் நிறைந்ததாக அமைந்திருந்தது. அதற்குரியவர் ராஜாஜியோ என்னும் சம்சயத்தை ஏற்படுத்தி விட்டது. எதிர்க்கட்சி உருவாக வேண்டியதன் அவசியம், அதற்கான காலவரம்பு, சூழ்நிலை இவைகளை விளக்கிய உங்களுக்கு நன்றி.

புதுதில்லி
9-5-58

ஏ. ஆர். ராஜாமணி

---

மார்ச் மாதச் சிறு கதைப் போட்டியில் நூறுரூபாய் பரிசு பெற்ற

**'உயிரோட்டம்'**

என்னும் கதை அடுத்த இதழில் பிரசுரமாகிறது.

பரிசு பெற்றவர் : வே. கோவிந்தராசன்

17—18, நான்காம் வார்டு, கணேசபுரம், கோயமுத்தூர்.

## மொழிபெயர்ப்பாளர் கடமை

'கல்கி' 4-5-58 இதழில் திரு எல். கிருஷ்ண சாமிபாரதி எழுதிய 'இது பேசும் மொழியா?' என்னும் கட்டுரை இந்தி வெறியர்களின் சுய உருவத்தைத் தெளிவாக 'உள்ளங் கை நெல்லிக் கனி' போல் காட்டுகிறது. இக் கட்டுரையைப் படித்தும், இந்தி ஆட்சி மொழி யாக இருக்க வேண்டும் என்பார்களேயானால் அவர்களை என்னவென்று சொல்வது? நமது அரசியல் சட்டத்தின் ஒரு பகுதியே இப்படிக் கரடுமுரடாக, புரியாத நிலையில் இருக்குமென் றால் முழுச் சட்டமும் எப்படி இருக்குமோ?

பிறமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க் கும் போது கூடிய வரையில் எளிய தமிழ்ச் சொற்களையும், மிகப் பொருத்தமான பதங் களையும் அமைக்க வேண்டும்.

கோயமுத்தூர்
9—5—58
கு. சிவகுமார்

## தவம் கிடப்பது நீங்குமா?

கோவை மாவட்டத்தில் சிரவணம் பட்டி என்ற ஊர் உள்ளது. அங்கு வாழும் மக்கள் பஸ் வசதியின்றி அல்லல்படுகின்றனர். சர்வீஸ் பஸ்கள் சென்றாலும் அதில் இடம் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது. சிரவணம் பட்டியிலிருந்து ஒன்றரை மைல் தூரத்துக்கு அப்பாலுள்ள மில்கள் வரை டவுன் பஸ் வந்து கொண்டிருக்கிறது. அந்த பஸ்கள் எங்கள் ஊர் வரை வந்தால், பல மாணவர்கள், தொழிலாளிகள், வியாபாரிகள் சாலைகளின் அருகில் உள்ள மரங்களின் கீழ் மோட்டார் வண்டிக்காகத் தவங் கிடப்பது நீங்கி விடும்.

சிரவணம்பட்டி
6—5—58
எஸ்.ஆர்.கே. சுந்தரவேல்
சி. எழில் வேந்தன்

## மாணவர்கள் தவிப்பு

எங்கள் ஊராகிய களஞ்சேரி என்னும் கிராமம் கூடவாசல்—அம்மாப் பேட்டை பஸ் ரோட்டின் நடுவே அம்மாப் பேட்டையி லிருந்து சுமார் ஐந்து மைல் தூரத்தில் உள்ளது. எங்கள் ஊரில் ஐந்தாவது வகுப்புவரையில் உள்ள ஓர் ஆரம்பப் பள்ளி மட்டுமே உண்டு. அதற்குமேல் படிப்பதற்குப் பாபநாசம் அல் லது அம்மாப்பேட்டையில் உள்ள உயர்தரப் பள்ளிக்குப் போகவேண்டும். அம்மாப்பேட் டையே எங்களுக்கு அருகாமையில் உள்ளது. எங்கள் சாலை வழியாக ஏறத்தாழ மணிக் கொரு பஸ் போகிறது. ஆனால் மேற்படி போக்குவரத்து சிறுவர் சிறுமியர் கல்வி வளர்ச்சிக்கு உதவி புரியும் விதத்தில் இல்லை.

எங்கள் சாலையினூடே காலையில் 9-மணிக்கு ஒன்றும் 9-30 மணிக்கு ஒன்றுமாகச் செல் லும் இரு பஸ்களும் பள்ளி செல்லும் நேரத்துக்குச் சரியாக விடப்படுகின்றன. ஆனால் அம்மாப்பேட்டையில் மாலை 2-50 மணிக்குக் கிளம்பும் பஸ்ஸுக்கு அடுத்தபடி யாக 6-30 மணிக்குக் கிளம்புகிற பஸ் எங்கள் ஊர்ச் சாலை வழியாக வரும்போது சுமார் ஏழு மணியாகிறது. இது சிறுவர் சிறுமியருக்குத் எவ்வளவு கஷ்டத்தைத் தருகிறது என்பதை

எடுத்துக் கூறத் தேவையில்லை. மாலை ஐந்து மணிக்குக் கிளம்புகிற பஸ் அம்மாப் பேட்டைக்கு மூன்று மைல் தூரத்தில் உள்ள சாலியமங்கலத்திலிருந்து கிளம்புகிறது! இது பற்றிச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குப் பலமுறை நேரிலும் எழுத்து மூலமாகவும் தெரிவித்தும் அவர்கள் சற்றும் செவி சாய்க்கவில்லை.

மாலையில் ஐந்து மணிக்குக் கிளம்புகிற பஸ் நேராக அம்மாப்பேட்டையிலிருந்து கிளம்பினால் எங்கள் ஊரிலும் மற்றும் சாலியமங்கலம், இரும்புதலை மற்றும் சுற்றுப்புறக் கிராமங்களிலும் உள்ள சிறுவர்கள் இவ் வசதியைப் பயன்படுத்திக் கொள்ளச் சாத்தியமாகும்.

களஞ்சேரி
8—5—58

களஞ்சேரி கிராமவாசி

## கல்வி பெறக் கஷ்டம்

**ரா**மநாதபுரம் ஜில்லாவிலுள்ள வேப்பங்குளம் என்னும் கிராமத்தில் வசிக்கும் மக்களும், சுற்றுப்புறக் கிராமங்களில் வசிக்கும் ஜனங்களும் போக்குவரத்து வசதி இல்லாமலும் ஒரு ஹைஸ்கூல் இல்லாமலும் கஷ்டப்படுகின்றனர். மேற்படி கிராமத்தில் 'போர்டு எலிமெண்டரி ஸ்கூல்'தான் இருக்கிறது. பக்கத்து கிராமங்களிலுள்ள மாணவர்களும் மேற்படி ஸ்கூலில்தான் படித்து வருகின்றனர். இடம் போதாமலிருக்கிறது. மேற்படிப்புக்காகப் பெரிய நகரங்களுக்கு (கல்லல், காரைக்குடி, தேவகோட்டை) போக வேண்டிய நிலையிலுள்ளனர். ஆதலால் மேற்படி ஸ்கூலை ஹைஸ்கூலாக மாற்ற வேண்டும். இந் நகரங்களுக்குச் செல்லும் பாதைகளுக்கு நடுவில் சிற்றாறுகளிருக்கின்றன. பாலம் கட்டி ரோடு போட அதிக காலமாகும். ஆனபடியால் கல்லலிருந்து வேப்பங்குளம் வந்து ராமநகர் போகக்கூடிய வகையில் போக்குவரத்தும் ரோடு வசதியும் செய்தால் நல்லது.

வேப்பங்குளம்
5—5—58

வி. ரங்கநாதன்

## 'இது பேசும் மொழியா?'

**மே** மாதம் 4-ந் தேதி 'கல்கி' இதழில் வெளியான 'இது பேசும் மொழியா?' என்ற கட்டுரை மிகவும் போற்றத் தக்க முறையில் உள்ளதை உள்ளபடி படம் பிடித்துக் காட்டுகிறது. ராஜாஜியின் இந்தித் திணிப்பு எதிர்ப்பை வடக்கேயுள்ள ஒவ்வொரு தென்னிந்தியரும் மனமார வாழ்த்துகிறார்கள்.

ஒரு உண்மை விசித்திரம் என்னவென்றால், சர்க்கார் காரியாலயத்தில் வேலை பார்க்கும் பஞ்சாபியர்கள் வீண் ஜம்பத்துக்காக ஹிந்தி வேண்டுமென்கிறார்களே யொழிய, உண்மையில் அவர்களில் நூற்றுக்கு 99 பேர்களுக்கு உருதுதான் எழுதப் படிக்கத் தெரியும். சர்க்கார் இந்தி அல்ல. ராஜாஜியின் கல்கத்தா மகாநாட்டுப் பேச்சுக்குப் பிறகுதான், பல வடநாட்டார்களும் ஹிந்தியிலிருக்கும் உயிரற்ற செயற்கை சுற்பனை சக்தியால் உற்பத்தி செய்யப்படும் விசித்திரச் சொற்றொடர்களைப்பற்றி அறியத் தொடங்கியிருக்கிறார்கள்.

புதுதில்லி
4-5-58

கண்ணன்

இப்பொழுதெல்லாம் புதிது புதிதாகப் படங்கள் என்னவோ வருகின்றன. ஆனால் திரைக்கதைகளில் புதுமையோ, மாறுதல்களோ விசேஷமாக ஏதும் இருப்பதில்லை.

படாதிபதி, டைரக்டர், திரைக்கதை ஆசிரியர், காமிராக் கலைஞர் முதலிய யாவருக்கும் புதுமையில் நாட்டம் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் படத்தில் புதிதாகப் பல உத்திகளைப் புகுத்த முடியும். "புரொடக்ஷன் நெ. 3" என்று மர்மமாகப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்து விடுகிறார்கள். கடைசியில், படம் வெளியாகும் தருணத்தில் எதற்கும் சம்பந்தம் இல்லாமல் படத்துக்கு ஒரு தலைப்பு கொடுக்கப் படுகிறது. படத்தைப் பார்த்ததும், அது ஆதிகாலத்து மாமியார் கதையாக இருந்து தொலைந்தால், படம் பார்ப்பவர்களுக்குக் கோபம் வருவதில் தவறு என்ன இருக்கிறது?




கோபாலசமுத்திரம் என்று ஒரு சின்ன ஊர் இருக்கிறது. ஆனால் அந்த ஊருக்கும் சமுத்திரத்துக்கும் வெகு தூரம்.

அதுபோலத்தான் "பொம்மைக் கல்யாணம்" என்ற தலைப்புக்கும் படத்துக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. "மணமாலை" என்ற படத்தில் ஒரு பொம்மைக் கல்யாணம் வருவது போல் இந்தப் படத்திலும் வருகிறது. அவ்வளவுதான்.

திரைக்கதையில் விசேஷமாக எதுவும் இல்லை. பணத்தாசை கொண்ட மாமியார்; அவளுக்கு அடங்கிய மாமனார்; அவர்களுக்கு ஒரு உத்தம புத்திரன்; அவன் கரம் பற்றிய உத்தமி ராதா; அவள் தந்தை சுபேதார் வீரமுத்து; ராதா மாமியாரினால் கொடுந் துன்பத்துக்கு ஆளாகி, வீட்டை விட்டு வெளியேற்றப் படுகிறாள். தாய் வார்த்தையை மீற முடியாமல் மகன் அவதியுறுகிறான். பேராசை பிடித்த மாமியாரின் விருப்பப்படி தம் பங்களாவையும் உடைமைகளையும் விற்று, மகளுக்கு ஏராளமான சீர்வகைகளையெல்லாம் செய்கிறார், சுபேதார். முடிவில் மாமியாரின் வினை அவளையே அழிக்கிறது.

இந்தப் படத்தில் வேண்டாத மருமகள் மாமியாரால் கொடுமைப் படுத்தப் படுவதும், கடைசியில் கஷ்டங்கள் விடிவதும்தான் முக்கிய அம்சம்.

அல்லற்பட்டுக் கண்ணீர் விட்டு அவதியுறும் மருமகள் ராதாவின் பாகத்தை ஜமுனா ஏற்று நடிக்கிறார். அவரைக் காட்டிலும் பொருத்தமான நட்சத்திரத்தை அந்தப் பாகத்துக்குத் தேடிப் பிடிப்பது இயலாத காரியம். அவர்தான் இப்படத்தின் உயிர் நாடி. காதலினால் உள்ளம் விம்மும் போது விரியும் அவரது விழிகள், பிரிவினால் துயரமுற்றுக் கண்ணீர் விடும்போது பொலிவை இழந்து பொங்குகின்றன. ஜமுனாவின் விசாலமான விழிகள் இந்த இரு வேறு உணர்ச்சிகளுக்கும் பொருத்தமாக ஈடு கொடுக்கின்றன. பொம்மைக் கல்யாணத்தில் தோழிகளோடு ஆடிப் பாடியதிலிருந்து, புருஷன் வீட்டில் மாமியின் கொடுமைகளினால் அவதியுற்றுக் கடைசியில் புருஷன்மீது உள்ள அன்பினால் மாமியாருடன் உரிமைப் போர் நடத்தின வரையிலும் உணர்ச்சி பொங்க மிகவும் நன்றாக நடித்திருக்கிறார்.

"பொம்மைக் கல்யாண"த்தின் கதாநாயகன் கண்ணனாக வருபவர் சிவாஜி கணேசன். அந்தப் பாத்திரத்தில் அவருடைய விசேஷ நடிப்புக்கு இடமில்லை. ஆயினும், கால்பந்தைத் தேடிக் கொண்டு சுபேதார் வீட்டுக்கு வந்து ராதாவைச் சந்தித்த போதும், பிறகு சுபேதார் வீரமுத்துவைச் சந்தித்துத் திக்கித் திணறிப் பேசியபோதும் நன்றாய் நடித்திருக்கிறார். ஆனால் இதெல்லாம் அவருடைய இயல்பான நடிப்புத்தான். விசேஷமான பாராட்டுக்கு இடமில்லை. கட்டின மனைவிக்குத் துரோகம் செய்து, தாயின் விருப்பத்துக்காக மறுமணம் புரிந்து கொள்வதா என்ற பிரச்சினையில் மனம்





குழம்பின நிலையில் அவர் மாடியிலிருந்து கீழே விழுகிறார்; கட்டுக்களுடன் கட்டிலில் படுத்து ராதையின் நினைவில் தவிக்கிறார். இதைத் தவிர அவருக்கு இந்தப் படத்தில் அதிக வேலையில்லை.

வக்கீல் வரதராஜனாக, கதாநாயகன் கண்ணனின் தந்தையாக வரும் நாகையாவுக்கு அது பழகிப்போன பாத்திரம். அதுவும் அந்தப் பாத்திரம் இறந்தும் போகிறது. அதில் நாகையாவை மிஞ்சுவதற்கு யாரால் முடியும்? பிரமாதமாக உணர்ச்சியோடு நடித்திருக்கிறார்.

வக்கீல் குமாஸ்தாவாக நடிக்கும் பி. டி. சம்பந்தம் வக்கீலின் பாயிண்டுகளுக்கெல்லாம் 'சின்ன பாயிண்டு'களைப் போட்டு அடிக்கடி சிரிப்பு மூட்டுகிறார்!

வக்கீல் மகன் கண்ணனின் மாமன், மாமி, அவர்கள் பெண் முதலியவர்களெல்லாம் கதாநாயகியின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ள வருகிறார்கள். பிரண்ட் ராமசாமி, சுந்தரிபாய், காக்கா ராதாகிருஷ்ணன் இவர்களின் நடிப்பு அந்தக் கட்டங்களில் ஒரே கலாட்டாவாயிருக்கிறது.

நமது தமிழ்ப்படங்களில் வரும் ஹாஸ்யங்களைப் பற்றி நினைத்து நான் பல முறை வருந்தியதுண்டு. ஹாஸ்யம், காட்சிகளில் இயல்பாக வரும் பொழுதுதான் அதைப் பார்ப்பவர்களுக்குச் சிரிப்பும் தானாகவே வருகிறது. காலஞ்சென்ற என். எஸ். கிருஷ்ணன் இந்த உண்மையை நன்கு உணர்ந்தவர். அதனால்தான் அவர் நடித்த படங்களிலெல்லாம் அவருடைய பங்கு சோடை போகாமல் இருந்தது. அவர் நடித்த கடைசிச் சினிமாவான ''யார் பையன்?'' என்னும் படத்தில் ஹாஸ்யம் அநாயாசமாகப் பொங்கிவந்தது இன்னும் என் நினைவில் பசுமையாயிருக்கிறது.

இந்தப் படத்தில் ஹாஸ்யம் கொலை செய்யப்படுகிறது. காக்கா ராதா கிருஷ்ணன் மைனாவதிக்குத் தாலி கட்ட ஓடி வருவதும், பிரண்டு ராமசாமி அவரைப் பிடிக்க ஓடுவதும் சுத்த பைத்தியக்காரத்தனமாயிருக்கின்றன. பிறகு அவர்கள் இருவரும் தாடிச் சாமியார்களாக மாறிப் பெண்ணைக் கடத்திச் செல்ல முயலுவதில் உள்ள ஹாஸ்ய உணர்ச்சி என்னவென்பது எனக்கு விளங்கவில்லை!

மாமன் மகள் கண்ணம்மாவின் பாகத்தை மைனாவதி ஏற்றுத் தமாஷாக நடிக்கிறார். கண்ணம்மா ஓர் அசட்டுப் பெண் என்பதைத் தெரிவிக்கும் விதத்தில் அவர் நடிப்பு நன்றாயிருக்கிறது.

## காத்தன்

இந்தப் படம் நன்றாய்த் தயாரிக்கப்பட்டிருந்தும், பிரமாதமாகப் பாராட்ட முடியாததற்குக் காரணம் புகழ்பெற்ற டைரக்டர் சாந்தாராம் டைரக்ட் செய்து தயாரித்த ''தஹேஜ்'' என்னும் பழைய படத்தின் தமிழாக்கம் என்பதுதான். படத்தின் கதையைத் தழுவி யிருந்தால் பாதகமில்லை. பல கருத்துக்களையும் காட்சிகளையும் தஸ்கரம் செய்திருப்பதைக் காணும்போது மனசுக்கு ஆயாசமாயிருக்கிறது. மேற்படி கருத்துக்களோ, காட்சிகளோ தமிழில் காணக் கிடைக்காதவையல்ல. இதற்காக ஒரு வடநாட்டுக் கதையைத் தேடிப் பிடித்திருக்க வேண்டியதில்லை. என்னத்தைச் செய்ய! இதுதான் தமிழரின் துர்ப்பாக்கியம்.

முன்பு வெளிவந்த ஹிந்திப் படத்துக்கும் இந்தப் படத்துக்கும் உள்ள முக்கியமான வித்தியாசம் ஒன்று இருக்கிறது. ஹிந்திப் படத்தில், ஏராளமான சீர்செனத்திகளோடு பெண்ணின் தகப்பன் அவள் வீட்டுக்குள் நுழையும்போது அவள் மாமியாரின் தாக்குதலினால் உயிர்பிரியும் தறுவாயில் இருக்கிறாள். தமிழ்ப் படத்தில், மாமியார் மருமகளுக்கு இழைத்த கொடூரங்களுக்குத் தானே இரையாகி விடுகிறாள்.

சுபேதார் வீரமுத்துவாக நடிக்கும் எஸ். வி. ரங்காராவ் அபாரமாக நடித்திருக்கிறார். படத்தின் முக்கிய பாத்திரமான அவர், நடிப்பிலும் முதன்மையாக இருக்கிறார்.

எஸ். டி. சுந்தரம் படத்தின் வசனத்தை அழகாக அமைத்திருக்கிறார். பாடல்களை உடுமலை நாராயண கவியும் மருதகாசியும் இயற்றி யிருக்கின்றனர்; பாடல்கள் யாவும் சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு நன்றாக அமைந்திருக்கின்றன.

இந்தப் படத்தை டைரக்ட் செய்திருப்பவர் ஆர். எம். கிருஷ்ணசாமி; திறமையாகத் தம் பணியைச் செய்திருக்கிறார்.

கவி தாகூர் போன்ற பேராசிரியர்களின் கதைகளைத் தமிழில் படமாக்கினால் அது பாராட்டுக்குரியதாகும். ஒரு சாதாரணக் கதைக்கு ஹிந்திப் படத்தை ஆதாரமாகக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன வந்துவிட்டது? தமிழ்நாட்டில் சாதாரணக் கதை கூடவா இல்லை? தமிழ்ப் படாதிபதிகளுக்கு எப்பொழுது உள்நாட்டுக் கதைகளைக் கௌரவிக்கும் எண்ணம் உண்டாகும்? ஒரு படம் ஹிந்தியில் பிரமாத வெற்றி யடைந்துவிட்டதென்றால், அதை அப்படியே தமிழாக்கி அந்த வெற்றியையும் ஸ்வீகரித்து விடவேண்டும் என்னும் ஆசையை விட்டுவிட வேண்டும். அந்தப் படத்தின் வெற்றிக்குரிய காரணங்களை நிதானமாக ஆராய்ந்து, அவைகளை நம் பண்பாட்டுக்குகந்தவாறு புது முறையில் நம் படத்தில் புகுத்த முயல வேண்டும்.

எடுத்ததற்கெல்லாம் வடநாட்டை நோக்கும் இந்த இழிநிலை ஏன் நமது படாதிபதிகளின் மனத்தில் உறைக்கவில்லை?

''பொம்மைக் கல்யாணம்'' படம் வெறும் பொம்மைக்கல்யாணமாகத்தான் இருக்கிறது. மிகவும் சுமாரான படம்.



பொள்ளாச்சி நகராண்மைப் பள்ளி உடற்பயிற்சி டைரக்டர் திரு சங்கரன் சௌ. மீனாக்ஷியை மணந்து கொண்டார்.



சங்கீத வித்வான் சேலம் டி. செல்லம் ஐயங்காருக்கும் சௌ. கோமளவல்லிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

# வாழ்க மணமக்கள்



பம்பாய் பிலிப்ஸ் இந்தியா கம்பெனியைச் சேர்ந்த திரு என். கங்காதரன் சௌ. மீனாக்ஷியை மணம் செய்து கொண்டார்.



பம்பாய் உயர்நீதி மன்றப் பிரதம நீதிபதியின் காரியதரிசி திரு வி.எஸ். ராவின் புதல்வி சௌ புஷ்பலதாவுக்கும் திரு ராம ராவுக்கும் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.



திரு வி. ஆர். நடராஜ அய்யர் அவர்களின் புதல்வி சௌ. மங்கள தேவிக்கும் திரு விருத்தகிரி சர்மாவுக்கும் விவாகம் சென்னையில் விமரிசையாக நடைபெற்றது.



தொழுதூர் மிராசுதார் திரு டி.எஸ். சுப்பிரமணிய அய்யர் குமாரர் திரு ஜெயராமனுக்கும் சௌ. காமாக்ஷிக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தது.



# பயங்கர நதியில் மூன்று வாரம்

நதியின் போக்கு ஒரே நிதானமாக இல்லை. ஆங்காங்கு சிறுசிறு நீர் வீழ்ச்சிகள் போன்று ஆற்றின் ஓட்டமிருந்தது. இம்மாதிரி இரண்டு நீர்வீழ்ச்சிகளை ஏற்கனவே கடந்து விட்டோம். மேலும் மூன்றைக் கடந்தாகவேண்டும். இரண்டுபாறைகளுக்கிடையே மோதிக் கொள்ளாமலும் தண்ணீரில் அமிழ்ந்து போகாமலும் ஜாக்கிரதையாகப் படகைச் செலுத்துவதில் கொஞ்சம் அநுபவம் பெற்றிருந்தோம்.

**டைபோர் ஸெகல்ஜ்**

ஷாவாண்டுகள் என்ற குடிகள் வாழ்ந்த பிரதேசத்தை விட்டு மேலும் வடக்கே செல்ல நாங்கள் முடிவு செய்தோம். அங்கே காயா இந்தியர்கள் என்ற ஜாதியர் வாழ்ந்து வந்தனர். இவர்கள் ஏற்கனவே வெள்ளைக்காரர்களுக்கு அறிமுகமானவர்கள்தான்.

இவர்கள் வாழ்ந்த பிரதேசம் அரகுவாஜா என்னும் நதியோரத்தில் இருந்தது. எனவே நாங்கள் இந்நதியிலேயே வெகு தூரம் செல்ல வேண்டும். எங்கள் படகு உடனே தயார் செய்யப்பட்டு நாங்கள் புறப்பட்டோம். நதியின் பிரவாகத்தை அநுசரித்தே நாங்கள் சென்றோமாயினும், மூன்று வாரங்கள் படகுப் பிரயாணம் செய்தபிறகே காயா மக்கள் வாழ்ந்த இடத்துக்கு வந்து சேர்ந்தோம்.

நதி எங்களுக்கு எல்வகையிலும் உதவியது. நீரோட்டம் எங்களுக்குச் சாதகமாக இருந்தது மட்டுமல்ல; நல்ல ருசிகரமான மீன் வகைகளும் நிரம்பக் கிடைத்தன. உணவுக்குப் பஞ்சமில்லை!

ஒருநாள் நாங்கள் மீன் பிடிப்பதில் முனைந்திருந்தோம். படகின் நுனியில் நான் நின்று கொண்டு எறி ஈட்டியுடன் தயாராக இருந்தேன். இரண்டு கஜம் நீளமுள்ள ஒரு பெரிய மீன் அங்கே வந்ததைக் கண்டேன். தயங்காமல் அதை நோக்கி என் ஈட்டியை எறிந்து அதைக் குத்தி விட்டேன். கயிற்றை இழுத்து அதை இழுத்துப் படகுக்குக் கொண்டு வரப் போகும் சமயத்தில், மின்சாரத்தினால் தாக்குண்டதுபோல் ஒரு பலமான அதிர்ச்சி எனக்கு ஏற்பட்டது. அதிர்ச்சியின் வேகத்தில் நான் அப்படியே படகுக்குள் குப்புற விழுந்து விட்டேன். என் நண்பர் அடோனியோ நான் விழுந்ததைப் பார்த்து 'இடி இடி' என்று சிரிக்கத் தொடங்கி விட்டார். "நீ அதைச் சரியாகக் கவனிக்கவில்லையா? அது ஒரு மின்சார மீன் ஆயிற்றே!" என்று அவர் சொன்னார். உடனே மற்றொருவர் தொங்கிக் கொண்டிருந்த கயிற்றைப் பிடித்திழுத்து அந்த மீனைப் படகுக்குக் கொண்டு வந்தார். அவருக்கு எவ்வித அதிர்ச்சியும் ஏற்படவில்லை. அந்த மீன்தான் அதன் மின்சாரம் முழுவதையும் என் மீது பிரயோகம் செய்து விட்டதே! அவரைத் தாக்க அதனிடம் மேற்கொண்டு மின்சார சக்தி இல்லை.

அன்று மாலை அந்த மீனைத்தான் பக்குவம் செய்து உட்கொண்டோம். அது எங்களுக்கு மிகவும் ருசியாக இருந்தது.

திடீரென்று எங்களுக்கு நேராகச் சில கஜ தூரத்தில் ஒரு பெரிய பாறை தென்பட்டது. படகு அதை நோக்கி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. 'வலது பக்கமாகப் படகைத் திருப்பு. துடுப்பைப் போடு' என்று நான் கத்தினேன். என் நண்பர்கள் வெகு வேகமாகத் தங்கள் முழு பலத்தையும் உபயோகித்துத் துடுப்புப் போட்டனர். எனினும் பிரயோசனமில்லை. ஒருகணத்தில் பாறைப் படகு அசைவற்று நின்று கொண்டிருந்தது. அடோனியோ தண்ணீரிலேயே விழுந்து விட்டான். நாங்களும் தண்ணீரில் குதித்தோம். நல்ல காலம். நதி அதிக ஆழமில்லை. இடுப்பளவு ஜலத்தில் நாங்கள் நின்று கொண்டிருந்தோம். கொஞ்சம் கொஞ்சமாகப் படகு அசைந்து கொடுத்தது. வெகு நேரம் தண்ணீரின் வேகத்துடன் போராடியபின்தான் படகு நேர்நிலைக்கு வந்தது.

திடீரென்று தண்ணீரில் நின்று கொண்டிருந்த அடோனியோவிடமிருந்து ஒரு கூக்குரல் எழும்பியது. அது அழுகையாக மாறியது. நாங்கள் அவர் இருந்த இடத்தைச் சுற்றிலும் பார்த்தோம். நீர்ப் பரப்பெல்லாம் ரத்தம் கலந்து ஒரே சிவப்பு மயமாக இருந்தது.

"பிரன்யா, பிரன்யா!" என்று கத்தினார் ரெமாண்ட். இது என்னவென்று தெரியவில்லை. நாங்கள் அடோனியோவை அப்படியே தூக்கிப் படகுக்குள் படுக்க வைத்தோம். அவருடைய இடது காலில் பல 'பிரன்யா' மீன்கள் கடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தோம். ஒவ்வொன்றும் எட்டு அங்குலத்திலிருந்து பன்னிரண்டு அங்குலம் நீளம் வரை இருந்தது. ஆனால் அவற்றின் வாய் முக்கோண வடிவமாகக் காணப்பட்டது. ராவி விட்ட ரம்பத்தின் பற்கள் போல் வாய் நிறைய முக்கோணமாக அமைந்த பற்கள் பளபளவென்று மின்னின. ஒவ்வொரு மீனும் அடோனியோவின் காலிலிருந்து ஒவ்வொரு வாய் தசையைக் கடித்துக் கவ்விக் கொண்டிருந்தது.

இந்தக் கோரத்தைக் கண்டு பயந்த நாங்களும் உடனே படகுக்குள் ஏறிக்கொண்டோம். எங்கள் ஐவரின் உடல் கனமே அப்படகின்



வேட்டை ஆயுதங்களுடன் காட்டுஜாதி யுவர்கள்

நிலையைச் சரிசெய்தது. பாறையின் மீது தாங்கிக் கொண்டிருந்த முனையும் நகர்ந்து படகு மிதக்க ஆரம்பித்தது. நீரோட்டத்தின் வேகமே அதை அடித்துச் சென்றது. இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் அந்த நீர்ச் சுழலைத் தாண்டி அமைதியான பாகத்துக்கு வந்து விட்டோம்.

அடோனியோவின் காயங்களுக்குக்கட்டுகள் போட்டோம். சோகை பிடித்தவர் போல் அவர் பொலிவிழந்து அசைவற்றுக் கிடந்தார். "இன்னும் ஒரு நிமிஷம் என்னைத் தண்ணீரில் விட்டு வைத்திருந்தீர்களேயானால் என்னுடைய எலும்புக் கூடுதான் உங்களுக்குக் கிடைத்திருக்கும்" என்றார்!

* * *

மரண நதி என்ற பகுதிதான் வெள்ளைக்காரர்கள் போவதற்கு அனுமதிக்கப்பட்டுள்ள கடைசி எல்லை. அங்கே வசித்த ஷாவான்டிகள் என்னும் பூர்வ இந்தியக் குடிகள் அப்பிரதேசத்துக்குள் எவரும் வராமல் வெகு கவனத்துடன் பார்த்துக் கொள்ளுகின்றனர். சுமார் இருநூறு வருஷங்களுக்குமுன்பு அந்தப் பிரதேசங்களைத் தங்கள் ஆதிபத்தியத்துக்குட்படுத்திய போர்ச்சுகீசியர்களுடன் அவர்கள் தொடர்பு கொண்டிருந்தார்களாம். அப்போது அவர்களால் ஏமாற்றப்பட்டுப் பல இன்னல்களுக்கு ஆளானார்களாம். அந்த நாள் முதல் மேற்கத்திய நாகரிக நாட்டவர்களுடனும் வெளிநாடுகளுடனும் எவ்விதத் தொடர்பையும் அறவே ஒழித்து விட்டு, அவர்களுடைய நாட்டுக்குள் பிரவேசிக்க முயற்சி செய்தவர்களை யெல்லாம் தாட்சண்யமின்றிக் கொன்று வந்தனர். இவ்வாறு அங்கே மரணமடைந்தவர்களில் முக்கியமானவர்கள் 'கர்னல் பாஸெட்' என்னும் பிரசித்தி பெற்ற ஆங்கிலேய பூமண்டல ஆராய்ச்சியாளரும் இரண்டு இத்தாலியக் கிறிஸ்துவப் பாதிரிகளும், பிரேஜில் நாட்டு ராணுவ ஆராய்ச்சிக் கோஷ்டியினரில் எழுவரும். இன்னும் வைர வேட்டைக்கென்றும், மிருக வேட்டைக்கென்றும், விஞ்ஞான ஆராய்ச்சிக்கென்றும் பூமண்டல ஆராய்ச்சிக்கென்றும் சென்ற கணக்கற்றவர்களும் அங்கே பலியாக நேர்ந்தது.

நாங்கள் அந்தப் பகுதிக்குள் நுழைந்து வெகு தூரம் சென்றபோது, வழியெல்லாம் அக்குடிகள் முன்னம் இழைத்த அம்மாதிரி கொடுமைகளைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம். நாங்கள் அபாயமின்றிப் போன வழியே திரும்புவோமா? அல்லது முன்சென்ற பலருக்கும் நேர்ந்த கதி எங்களுக்கும் நேர்ந்து நாங்கள் அந்த இடத்தில் மடிந்து போவோமா? இப்படி யெல்லாம் எங்கள் மனத்தில் சஞ்சலம் ஏற்பட்டது. ஆனால் எங்களுடைய கோஷ்டி இதற்கு முன் சென்ற எந்தக் கோஷ்டியையும் காட்டிலும் பெரியது. நாங்கள் முப்பது பேர்கள் இருந்தோம். எல்லோரும் துப்பாக்கி முதலிய ஆயுதங்கள் வைத்திருந்தோம். இரவு பகல் என்ற வித்தியாசமின்றிச் சதாகாலமும் எட்டுப் பேர்கள் எங்கள் முகாமைக் காவல் காத்தனர்.

ஒரு நாள் மாலை கையில் துப்பாக்கியுடன் எங்கள் கோஷ்டியின் ஒருபுறமாக நான் மெல்ல இப்படியும் அப்படியுமாகப் பார்த்த வண்ணம் நடந்து சென்றுகொண்டிருந்தேன். திடீரென்று பக்கத்திலிருந்த புதர்களின் இலைகளை யெல்லாம் யாரோ அசைப்பது போல் ஒருசலசலப்புச் சத்தம் உண்டாயிற்று. அந்தப் பக்கம் நான் உடனே திரும்பி அதைக் கவனித்தேன். என் இருதயம் படபடவென்று அடித்தது. துப்பாக்கி பிடித்திருந்த கைகள் நடுங்கின. ஆனால் அசாதாரணமாக எனக்கு ஒன்றும் தென்படவில்லை. அதனால் நான் திருப்தியடைந்து விடவில்லை. ஏனெனில் இந்தக் குடிகளின் சாமர்த்தியத்தைப் பற்றியும் அவர்கள் கையாளும் தந்திரங்களைப் பற்றியும் நான் நிரம்பக் கேள்விப்பட்டிருந்தேன். அகலமான இலைகளாகப் பார்த்து அவற்றால் முகத்தை மூடிக் கொண்டு புதர்களுக்குப் பின்னால் அவர்கள் மறைந்து கொண்டிருப்பார்கள்.

நான் மெல்லப் பின்னோக்கியே நடந்து ஒரு மரத்துக்கருகில் பாதுகாப்பாக, உறுதியாகப் பிடித்த துப்பாக்கியுடன் ஓரிடத்தில் நின்று கொண்டேன். எவ்வளவு நேரம் அப்படி நின்று கொண்டிருந்தேனோ சொல்ல முடியாது. மணிக்கணக்காக இருக்க வேண்டும். ஆனாலும் ஒன்றும் நிகழவில்லை. ஒருவனையும் காணவில்லை. எனினும் மிகவும் சமீபத்தில் யாரும் காணாமல் இருந்து கொண்டு ஒருவரோ, பலரோ, என்னையும் எங்கள் கோஷ்டியினரையும் கவனித்துக் கொண்டிருக்கின்றனர் என்ற எண்ணம் மட்டும் எங்களை விட்டு அகலவில்லை.

நாங்கள் அந்தப் பிரதேசத்தில் முன்னேறிய விதம் ஒரு தனி முறை. எங்களில் இரண்டு மூன்று பேர்கள் ஒரு கோஷ்டியாகப் பிரிந்து நாங்கள் செல்லவேண்டிய பாதையில் முன்னால் சென்று அபாயம் ஒன்றுமில்லையா என்றும் பாதையின் போக்குகளைப் பற்றியும் ஆராய்வார்கள். பின்னால் நாங்கள் செல்லுவோம். இவ்வாறு நாங்கள் புறப்பட்ட ஐந்தாவது நாள், எங்கள் கோஷ்டித் தலைவன் கர்னல் வானிக்கும் நானும் இரண்டு குதிரைகள் மீதேறி இதற்கு முன் எந்த வெள்ளைக்காரரும் செல்லாத அடர்ந்த காட்டின் மத்தியில் சென்று கொண்டிருந்தோம். அங்கே ஒரு சிற்றாறு ஓடிக் கொண்டிருந்தது. இரு கரையிலுமிருந்த மரங்களின் கிளைகள் ஒன்றையொன்று எட்டிப்பிடித்துக் கட்டித் தழுவுவது போல் இணைந்திருந்ததால், கீழே சிற்றாறு

ஓடிக் கொண்டிருந்ததே முதலில் தெரிய வில்லை. எங்கள் குதிரைகள் தண்ணீரைப் பருகித் தாகத்தைத் தீர்த்துக் கொண்டன. நாங்களும் தண்ணீர் பருகினோம்.

அப்போதுதான் கர்னல் வானிக்சொன்னார். "இந்த அழகான நதியை இதற்கு முன் எந்த வெள்ளைக்காரரும் பார்த்ததில்லை. இந்தக் கோஷ்டியின் தலைவன் என்ற முறை யில் இந்நதிக்குப் பெயரிடும் உரிமை எனக்கு உண்டு. இன்று முதல் இது டைபோர் நதி என்று விளங்கட்டும்" என்றார்.

இவ்வாறாக என்னுடைய பெயர் பிரேஜில் நாட்டுப் பூகோளப் படத்தில் நிலைத்து இடம் பெற்று விட்டது!

சில நாட்கள் கழிந்தபின் நாங்கள் ஒரு அகன்ற வயல் பகுதியை அடைந்தோம். இதை நாங்கள் விமான நிலையமாக உபயோகித் தோம். எங்கள் கோஷ்டி பிரேஜில் அரசாங் கத்தாரால் பண வசதிகள் அளிக்கப்பட்டு அங்கீகாரம் பெற்றிருந்தது என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். இதனால் எங்க ளுக்கு விமானம் உள்பட எல்லா வசதிகளும் குறைவின்றிக் கிடைத்தன. இங்கிருந்துதான் எங்களுடைய சிறு விமானம் பறந்துசென்று நாங்கள் போகவேண்டிய திசையையும் பாதை களையும் முன்கூட்டியேஆராய்ந்து அறிவிக்கும். அந்தப் பக்கத்து மக்களுடன் மோதி, அவர்களுடன் சண்டையிட வேண்டிய நிர்ப் பந்தம் ஏற்படக் கூடாதென்பதற்காகவே இந்த முன்னெச்சரிக்கையான ஏற்பாடு.

இவ்வாறு ஒரு விமான ஆராய்ச்சியின்போது விமானியின் பக்கத்தில் நான் அமர்ந்து நாங்கள் அணுகிக் கொண்டிருந்த ஒரு கிரா மத்தைப் புகைப்படம் பிடித்துக் கொண்டிருந் தேன். அது சுமார் இருபது சிறு குடிசைகள் வட்டமாக இருந்த ஒரு கிராமம். ஒவ்வொரு குடிசையும் ஒரு அரைவட்டமாகக் கூண்டு போல் அமைந்திருந்தது.

அந்தக் கிராமத்தின் மீது சென்றபோது புகைப்படம் எடுப்பதற்கு வசதியாக இருப்ப தற்காக மிகவும் தாழ்வாகவே பறந்து போனோம். அந்தக் கிராமத்து மக்களை எங்க ளால் நன்றாகவே பார்க்க முடிந்தது. பிரும் மாண்டமான ஒரு ராட்சதப் பறவையை அவர்கள் விடாமுயற்சியுடனும் மனோ உறுதி யுடனும் அம்புகளெய்து வதைத்துக் கொண்

உணவுக்காகச் சேகரிக்கப்பட்டுள்ள புழுக்கள்





இக்கட்டுரை ஆசிரியரும் காட்டு ஜாதியைச் சேர்ந்த கோலையாளியும்

டிருந்தனர். அந்தப் பறவையைப் பற்றி அவர்கள் என்ன எண்ணிக் கொண்டிருந்தார் களோ? யாருக்குத் தெரியும்!

அவர்கள் விடுத்த ஒரு அம்பு எங்கள் விமா னத்தின் உடலில் பட்டுச் சிதறியது.

நாங்கள் அந்த மக்களால் தாக்கப்படலாம் என்ற பயம் இருந்ததால் அந்த நாட்டில் எங்கள் முன்னேற்றம் தாமதமாகவே இருந் தது. நாங்கள் சென்ற வழியெல்லாம் நாலு கஜம் பாதை செய்து கொண்டே போனோம். இதைச் செய்வதற்கு நாங்கள் பல மரங்களைக் கூட வெட்டி வீழ்த்த வேண்டியிருந்தது. ஒரு கஜ கனமுள்ள பெரிய விருக்ஷங்களையும் சாய்க்க வேண்டியிருந்தது.

ஒருநாள் இரவு ஒன்பது மணி இருக்கும். சுமார் 150 கஜ தூரத்திலிருந்து ஒரு கிளி பர பரப்புடன் பீதியடைந்ததுபோல் 'கீச் கீச்' என்று கத்தியது. மற்றொரு திக்கிலிருந்து அதே சமயம் ஒரு குரங்கு கிரீச்சிட்டுக் கொண் டிருந்தது. தொடர்ந்து 'ஜாகௌர்' ஒன்று கத்தத் தொடங்கியது. இதர ஜந்துக்களின் ஆரவாரங்களும் கேட்கத் தலைப்பட்டன. நாங்கள் மிருகக் காட்சி சாலைக்குள் இருப்பது போல் தோன்றியது. எங்களைச் சுற்றிலும் 150 கஜத்தில் அந்த வனத்திலிருந்த எல்லா மிருகங்களுமே சூழ்ந்திருந்தன.

இதையெல்லாம் கவனித்த எங்கள் நண்பன் ரேமாண்ட், திடீரென்று "சிவப்பு இந்தி யர்கள்!" என்று கத்தினான்.

எங்கள் உடல் சில்லிட்டது. ரத்த ஓட்டமே நின்றுவிட்டது போன்ற ஒரு நிலை. எங்களைப் பயங்கரமான சூாவாண்டிகள் நாலா பக்கங் களிலும் சூழ்ந்துகொண்டு விட்டார்களென் பதை அந்தக் கணத்தில் உணர்ந்தோம். எங்கள் முடிவு அநேகமாக நிச்சயம் என்றே நாங்கள் நினைத்தோம். அவர்களிடம் அகப் பட்ட எவரும்தான் இதுவரை தப்பித்த தில்லையே. நாங்கள் முப்பது பேர்கள் ஒரே கூட்டமாக இருந்தபோது எங்களை எதிர்த்துப் போரிட அவர்களுக்குத் தைரியம் இருக்க வில்லை. ஆனால் அவ்விடத்தில் ஐந்து பேர் களே கொண்ட அச்சிறு கோஷ்டி அவர்க ளுக்கு எம்மாத்திரம்? மற்றவர்களுக்கு உணவு கொண்டு வருவதற்காக நாங்கள் மாத்திரம் பிரிந்து வந்திருந்தோம். ஒரே நொடியில்



ஒரு குச்சியால் மற்றொரு குச்சியைக் கடைந்து தீ உண்டாக்குகிறார்.

அவர்கள் எங்களைத் தீர்த்துக் கட்டி விடலாம். அவர்கள் நூற்றுக் கணக்கில் இருப்பார்கள். இதில் சந்தேகமில்லை.

கொஞ்சம் கொஞ்சமாக மனிதக் குரல்கள் நெருங்கி ஒலிக்கத் தொடங்கின. அவர்கள் எங்களை நெருங்கிச் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிந்தது. அவர்கள் எங்களை அணுக அணுக எங்கள் பரபரப்பு அதிகரித்தது. சுமார் நாற்பது கஜ தூரத்துக்கு அவர்கள் வந்து விட்டனர். அவர்களுடைய குரல்கள் நன்றாகவே கேட்டன. எங்களுக்கு உடம்பெல்லாம் வியர்த்தது. நெற்றியிலிருந்து வியர்வை துளித்துச் சொட்டியது. வெடவெடவென்று நடுங்கிய கைகளுடன் எங்கள் துப்பாக்கிகளில் தோட்டாக்கள் நிரம்பி இருக்கின்றனவா என்று விரைவாகச் சரிபார்த்துக் கொண்டோம். எல்லாரும் தயாராக இருந்தோம். எனினும் எங்கள் தற்காப்பு அதிகப் பயனளிக்காது என்று எங்களுக்குத் தெரியும். நாங்கள் ஐவர், அவர்கள் நூற்றுக்கணக்கானவர் என்பது மட்டுமல்ல. எங்கள் முகாம் நெருப்பு ஒளி எங்கள் முகங்களில் வீசி எங்கள் நிலையை அவர்களுக்கு நன்கு அறிவித்தது. அவர்களோ புதர்களுக்கும் செடிகளுக்கும் பின்னால் இருட்டில் மறைந்திருந்தனர்.

இப்போது அவர்கள் பதினைந்து கஜ தூரத்துக்கு வந்து விட்டனர். எந்தக் கணத்திலும் தாக்குதல் ஏற்படலாம். நாங்கள் கயிற்று ஏணைகளிலிருந்து நகரவில்லை. அவற்றிலிருந்தபடியே, நரம்புகள் சோர்வுற்று, எங்களுடைய வாழ்க்கையின் இறுதி நிகழ்ச்சியை எதிர்பார்த்துக் காத்திருந்தோம்.

ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமெனக் கழிந்தது. எங்கள் பரபரப்பு உச்சநிலை எய்திக் கொண்டிருந்தது. ஆனால் தாக்குதல் இன்னமும் ஆரம்பிக்கப்படவில்லை. மிகவும் அருகில் கேட்ட அக்குரல்கள் இப்போது சற்று விலகித் தூரத்தில் கேட்டன. எங்களை நெருங்கிச் சூழ்ந்திருந்த அந்த வட்டம் இப்போது சிறிது சிறிதாக விரிவடைந்து கொண்டே சென்று, ஆரம்பத்திலிருந்த 150 கஜ தூரத்துக்கும் போய்விட்டதாக எங்களுக்குப் பட்டது.

சுமார் ஒரு மணி நேரத்துக்கு அந்த வனத்தில் நிசப்தம் குடிகொண்டது. பிறகு முன் போலவே வன விலங்குகளின் ஆரவாரமும் ஓலமும் மறுபடியும் கேட்டன. மறுபடியும் அதே மனிதக் குரல்கள். முதலில் தூரத்தில் கேட்டது, கொஞ்சம் கொஞ்சமாக நெருங்கிக் கொண்டு வந்தது. பழையபடி பதினைந்து கஜ தூரத்துக்கு நெருங்கிவிட்டது. இந்த முறை அவர்கள் தாக்குவார்களா? இம்மாதிரி காத்துக் கிடந்து பயந்து பயந்து நரம்புத் தளர்ச்சியடைவதை விட, அவர்களால் தாக்கப்பட்டு மரணமடைவது கூட வரவேற்கத் தக்கதென்றே தோன்றியது. என் வரையில் ஏதாவது நிகழ்ந்தால் போதும் என்றே எண்ணினேன்.

ஆனால் இந்தத் தடவையும் அவர்கள் தாக்கவில்லை. திரும்பிப் போய்விட்டனர். இப்படியே மீண்டும் ஒரு முறை நடந்தது. இந்த மூன்றாவது முறையும் அவர்கள் எங்களைத் தாக்கவில்லை. கடைசியாக, சுமார் நாலு மணி இருக்கும். அப்போது கடைசி முறையாக அவர்கள் எங்களைவிட்டு வெகு தூரம் விலகிச் சென்று விட்டனர். அமைதி நிலவியது. அவர்கள் ஏதோ வேறுவிதமாகத் தீர்மானித்து விட்டதாகத் தோன்றியது. எங்களுக்கும் சோர்வினால் தளர்ச்சியுற்றுச் சிறிது நேரம் தூங்கினால் தேவலை என்று தோன்றியது. நான் சற்றுக் கண்ணயர்ந்தேன்.

என் நண்பன் ரேமாண்ட் என்னைத் தூங்க விடவில்லை. அவசரம் அவசரமாக என்னைக் குலுக்கி எழுப்பினான். ''எழுந்திருங்கள், நாம் உடனே இங்கிருந்து கிளம்பிப் போக வேண்டும்'' என்று என்னைத் துரிதப்படுத்திக் கொண்டிருந்தான்.

அவன் சொன்னது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. ஆனாலும் அவன் சொன்னபடி செய்தேன். இந்த மக்களைப் பற்றிய விஷயங்களையெல்லாம் அவன் அனுபவம் பெற்றவன். அவனுடைய மகனையே இந்தக் குடிமக்களுக்குப் பலியாகக் கொடுத்திருந்தான். அவனே இம்மக்கள் வசித்த பகுதிக்கு மிகவும் அருகிலிருந்த ஒரு பண்ணையில் வேலை செய்திருந்தான். எனவே அவர்களுடைய பழக்க வழக்கங்களைப் பற்றி அவனுக்கு நன்றாகத் தெரியும்.

தாமதமின்றி நாங்கள் புறப்பட்டு மேலே சென்றோம். அந்தக் காட்டுப்பாதை வழியே எங்கெல்லாம் சந்துகள் தெரிந்ததோ, அந்த வழியாகவே அந்தக் கிழக் குசினிக்காரன் அழைத்துச் சென்றபடியே போய்க் கொண்டிருந்தோம்.

இரண்டு மணி நேரம் இவ்வாறு சென்ற பின், பொழுது நன்றாகப் புலர்ந்ததும்தான் நாங்கள் ஓரிடத்தில் நின்றோம். அப்போது தான் ரேமாண்ட் தன் செய்கைக்கு விளக்கம் தெரிவித்தான்.

''இந்த ஜாவாண்டிகளுடைய தந்திரம் இதுதான். இரவு முழுதும் இப்படித்தான் எதிரிகளைப் பயப்படச் செய்தே அலைக்கழிப்பார்கள். இது ஒரு போர் முறை. விடியற்காலம் எல்லோரும் களைப்பு மிகுதியால் தூங்கும் சமயம் பார்த்து, அவர்கள்மீது ஒரே கும்பலாகப் பாய்ந்து ஒருவனைக்கூட மிச்சம் வைக்காமல் அப்படியே கொன்று குவித்து விடுவார்கள்'' என்று அவன் சொன்னான்.

அதைக் கேட்டு நாங்கள் 'வாயடைத்துப் போனோம். அந்த அனுபவசாலியான ரேமாண்டின் சமயோசித ஆலோசனையும் எங்களுடைய பேரதிர்ஷ்டமும்தான் எங்களுடைய உயிர்களைக் காப்பாற்றியது என்பதைக் கண்கூடாகக் கண்டோம். (தொடரும்)

# பாவை விளக்கு

### அத்தியாயம் 5

## சதங்கை ஒலி

உமா கட்டாயம் பம்பாயில் மனோன்மணியின் வீட்டில்தான் இருப்பாள் என்ற அளவுக்குத் தணிகாசலம் தனது நம்பிக்கையை வளர்த்துக் கொண்டிருந்தான். இந்த நம்பிக்கைக்கு ஆதாரமும் கிடையாது; அடிப்படையும் கிடையாது. மனத்தின் மேற்பரப்பில் மிதந்த ஊகத்தை வைத்துக் கொண்டு அவன் இதுவரை மனக் கோட்டைகள் கட்டி வந்தான். இப்படித்தான் விரும்புகிறபடியெல்லாம் நினைத்து, அப்படியே நடக்கப்போகிறதென்று நம்பி, தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதில் மனிதனுக்கு நிகர் மனிதன்தான்.

உமா பம்பாயில் இருக்கக் கூடும்.

பம்பாயில் அவள் இருக்க வேண்டும்.

வேறு எங்கு அவள் போவாள்? பம்பாயில் கட்டாயம் இருப்பாள்.

மனோன்மணியின் வீட்டைத் தவிர வேறு எங்கும் அவள் இருக்க மாட்டாள்.

இப்படிப் படிப்படியாகத் தன் ஆசைகளையே மெய்யென்று நம்பி மயங்கும் அளவுக்கு அவன் மாறிப்போயிருந்தான். மனோன்மணியின் வீட்டுக் கதவை அவன் தட்டியபோது, உமாவே ஓடி வந்து கதவைத் திறக்கப் போகிறாள் என்று கூட அவனுக்கொரு நப்பாசை. மனோன்மணியின் வியப்பு நிறைந்த முகத்தைக் கண்டவுடன் தணிகாசலத்துக்கு அவளிடம் எதையுமே கேட்கத் தோன்றவில்லை.

மனோன்மணிக்குப் பின்னால் தெரிந்த கூடத்துத் தொட்டி



வில் குழந்தை உறங்கிக் கொண்டிருந்தது. கூடத்தை அடுத்தாற்போல் சமையல் அறையும், குளிக்கும் அறையும் காணப்பட்டன. அந்த முப்பதடிச் சதுரத்துக்குள் வேறு யாரும் தென்படவில்லை. வீட்டை வெறித்துப் பார்த்துவிட்டு, அவள் கணவனை விசாரித்தான் தணிகாசலம். அவருடைய அலுவலகம் ஏழு மைல் தூரத்துக்கு அப்பால் இருந்ததால் அரை மணி நேரத்துக்கு முன்பே கிளம்பி விட்டாராம்.

உமாவைப் பற்றி விசாரிக்க வேண்டுமென்ற எண்ணமே அந்த வீட்டைப் பார்த்தவுடன் அவனுக்கு ஏற்படவில்லை. இருந்தாலும் தன் ஆவலைத் தணித்துக் கொள்வதற்காக ஒரு வார்த்தை கேட்டு வைத்தான். மனோன்மணி திடுக்கிட்டாள். பதறினாள். ஆறுதலைத் தேடிப் போன அவன், அந்தப் பெண்ணுக்கே ஆறுதல் சொல்ல வேண்டிய நெருக்கடியான நிலைமை ஏற்பட்டு விட்டது.

மனோன்மணியும் தனக்குத் தெரிந்த சில விவரங்களைச் சொல்லி வைத்தாள். அவளுக்கும் உமாவுக்கும் பழக்கமுள்ள தோழிகள் சிலர் சேலம், மதுரை, கோவை முதலிய இடங்களில் வாழ்ந்தார்களாம். அவர்களில் சிலருக்குக் கல்லூரிகளில் வேலை; சிலருக்குக் குடும்ப வாழ்க்கை. அங்கெல்லாம் உமா போய் இருப்பாள் என்ற நம்பிக்கை தணிகாசலத்துக்கு இல்லை. மனோன்மணி அவனிடம் தன் தோழிகளின் விலாசங்களைக் கொடுத்தாள். தானே எழுதிக் கேட்டு அறிவிப்பதாகவும் கூறினாள்.

உமா கடைசியாக இரண்டு மாதங்களுக்கு முன்பு அவளுக்கொரு கடிதம் எழுதினாளாம். அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள் மனோன்மணி. கடிதத்திலிருந்த ஐந்தாறு வரிகள் தணிகாசலத்தின் கண்களை உறுத்தின: "மனோன்மணி! ஒரு சமயத்தில் நினைத்துப் பார்த்தால் என்னைப்போல் அதிர்ஷ்டக்காரி வேறு யாருமில்லை யென்றும், இன்னொரு சமயம் நினைத்தால் என்னைப் போல் துரதிர்ஷ்டக்காரி வேறு யாருமில்லை யென்றும் எனக்குத் தோன்றுகிறது. இதில் எது உண்மை? நீ என்னைப் பம்பாய்க்கு வரச்சொல்லி வற்புறுத்துகிறாய். நான் இனித் தனியாக எங்குமே புறப்படப் போவதில்லை. ஒரு வேளை என்றைக்காவது மாமாவின் குடும்பத்தாருடன் நான் அங்கு வந்து சேருவேன்."

'நான் இனித் தனியாக எங்குமே புறப்படப் போவதில்லை' என்ற எழுத்துக்களைப் படித்தவுடன் அவன் வறட்டுச் சிரிப்பு சிரித்தான். "நினைப்பது ஒன்று நடப்பது ஒன்றாக வல்லவோ இவள் செய்திருக்கிறாள்?" என்றான்.

"நினைக்கிறபடி செய்வதற்கு வழி இல்லாதபோது ஒரு பெண்பிள்ளை வேறு என்னதான் செய்வாளாம்?" என்று கேட்டாள் மனோன்மணி.

அதற்குமேல் மனோன்மணியிடம் பேச்சுக் கொடுக்க அவனுக்கு விருப்பமில்லை.



சென்னைக்குப் புறப்படுவதற்கு முன்னால் திரும்பவும் வந்து அவள் கணவனைப் பார்ப்பதாகச் சொன்னான். அவள் கொடுத்த காப்பியை வேண்டா வெறுப்பாகக் குடித்து விட்டுத் திரும்பினான்.

மூன்றுவது மாடியிலிருந்து தெருவுக்கு இறங்கி வருவதற்குள் அவனுக்கு மலை உச்சியிலிருந்து அடிவாரத்துக்கு வருவது போலிருந்தது. தெருவில் வந்து நின்று சுறுசுறுப்பு நிறைந்த நக

ரத்தைக் கவனித்தான். மஞ்சள் நிற 'டாக்ஸி'கள், சிறிய கார்கள், லாரிகள், பாதசாரிகள் — ஒரே பரபரப்புத்தான். இருந்தாலும் ஏனோ அவனுக்கு அது வெறும் பாழ்வெளிபோல் தோன்றியது. அந்தப் பாழ்வெளியில் தான் மட்டிலுமே தன்னந் தனியாக நின்று தவிப்பதைக் கண்டான். எப்படியோ ஒரு வாடகைக்கார் அவனை நண்பரின் வீட்டில் கொண்டு வந்து தள்ளியது.

நண்பர் மூர்த்தி அவனுக்காகவே ஒரு வாரம் விடுமுறை பெற்றுக் கொண்டு வீட்டில் இருந்தார். ஊருக்கு வந்த முதல் நாள் ஓரளவு அமைதியுடன் காணப்பட்ட தணிகாசலம், திடீரென்று இப்படி மாறிப் போனதன் ரகசியம் அவருக்கு விளங்கவில்லை. எதைக் கேட்டாலும் அவரிடம் பதில் சொல்லாமல் அவன் மூடி மறைத்து மழுப்பினான். பொய்ச் சிரிப்பு சிரிக்க முயன்றான். ஆனால் அவர் அவனை வற்புறுத்தவில்லை.

பற்பல இடங்களுக்கு அவனை அழைத்துச் சென்று அவன் கவனத்தைத் திருப்பினார் மூர்த்தி. காட்சிசாலை, நெசவாலைகள், மலபார் குன்று, தொங்கும் தோட்டம், ஜுஹு கடற்கரை இப்படிப் பல இடங்களுக்கு அவர்கள் சென்றார்கள். மாதுங்காத் தமிழன்பர்களின் அன்பு



நிறைந்த விருந்துகளும் இடையிடையே நடைபெற்றன. கலை உணர்வும், இலக்கியப் பசியும், பக்தி மனமும் கொண்ட அவர்களுடைய விருந்தோம்பல் அவனை வியக்க வைத்து விட்டது.

அடுத்தாற்போல் தராவிப் பகுதியில் வாழும் தமிழர்களின் நிலையைக் கண்டு இறங்கினான் தணிகாசலம். கிராமப்புறத்துச் சேரிகளை விட, சென்னை நகரத்துப் பஸ்களை விட, மிகவும் மோசமான வீடுகளில் பல தமிழர்கள் உழன்றார்கள்.

''இப்படி ஒரு பகுதியைத் தன்னிடம் வைத்துக்கொண்டிருப்பதற்காக இந்த மாபெரும் பம்பாய் நகரம் வெட்கித் தலைகுனிய வேண்டும். தமிழ் நாட்டில் தமிழர்கள் நலிந்தாலும் நலிவார்களே தவிர, வேறுபகுதி மக்களைத் தமிழர்கள் ஒரு போதும் இப்படிப் புறக்கணிப்பதில்லை'' என்றான் தணிகாசலம்.

எலிபெண்டாத் தீவில் உள்ள குகைக் கோயில் சிற்பங்களைக் காட்டுவதற்காக ஒரு நாள் அவனை அழைத்துக் கொண்டு நீராவிப் படகில் சென்றார் மூர்த்தி. பிரும்மாண்டமான சிலைச் செல்வங்களைக் கண்டு பிரமித்து நின்றான் தணிகாசலம். சிவபெருமானின் சிலைக்கு அருகில் இருந்த உமா தேவியின் சிற்பத்தை யாரோ உடைத்துச் சிதைத்திருந்தார்கள். நெடுநேரம் அந்தச் சிதைவையே கண் கொட்டாமல் கூர்ந்து கவனித்தான். தாஜ்மஹாலுக்குச் சென்ற போதும், மாமல்லபுரத்துக்குச் சென்ற போதும் உமா அருகில் இருந்தாள். உமா எங்கே இப்போது? அவள் எங்கே இருக்கிறாள்?

''கலை உணர்ச்சி இல்லாதவர்களின் செயலைப் பார்த்து நீங்கள் கண் கலங்குகிறீர்கள்'' என்றார் மூர்த்தி.

''ஆமாம்; உமாவைப் பிரித்து விட்டார்களே!'' என்றான் தணிகாசலம்.

மாலையில் படகோரத்தில் கடலைப் பார்த்துக் கொண்டே அவன் கல்லாய்ச் சமைந்திருந்தான். படகில் இருந்த மற்றப் பிரயாணிகள் ஆட்டமும் பாடலுமாய்த் திரும்பிக் கொண்டிருந்தார்கள். தூரத்தில் பம்பாய் நகரத்தின் மின்விளக்குகள் மின்மினிக் கூட்டம் போல் இருளில் மிதந்தன.

கரையில் இறங்கியவுடன் நண்பரை அழைத்துக் கொண்டு தணிகாசலம் மருந்துக் கடைக்குள் நுழைந்தான். தூக்க மாத்திரைகள் சில வாங்கிக் கொண்டான். நண்பர் திடுக்கிட்டுத் தடுத்தார். அவன் கேட்கவில்லை.

''மாத்திரைகள் சாப்பிட்டுத் தூக்கம் வரவழைப்பது மிகவும் கெட்ட பழக்கமாயிற்றே!'' என்றார் அவர்.

''இன்றைக்கு எனக்கு மாத்திரை சாப்பிட்டாலும் தூக்கம் வராது.''

''என்ன!''

''அந்த உடைந்த சிலை என் கனவில் வந்து தொல்லை கொடுக்கும்.''

மூர்த்தி தணிகாசலத்தை விழித்துப் பார்த்தார். அந்த உடைந்த சிலைக்குள்ளே அவன் யாரைக் கண்டான் என்பது அவருக்கு எப்படித் தெரியும்?

''வேண்டாம் தணிகாசலம்! வேண்டவே வேண்டாம்!'' என்று மன்றாடினார்.

''நான் என்னை மறக்க வேண்டும். அடியோடு என்னை மறந்து மரக்கட்டையாக மாற வேண்டும். குடிக்கும் பழக்கமுள்ளவர்கள் தங்களை மறப்பதற்காகக் குடித்துக் கெட்டுப் போவார்களாம். நான் அதை விரும்பவில்லை. தயவுசெய்து என்னைத் தடுக்காதீர்கள்.''

வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு முடிந்தவுடன், அவனை இருக்கச் சொல்லி விட்டு, மற்றொரு நண்பருடன் மூர்த்தி எங்கோ வெளியில் போய் வந்தார். நண்பரின் காரில் அவனை ஏற்றிக் கொண்டார். ''இப்போது நாம் ஒரு நடனம் பார்க்கப் போகிறோம். உங்களுக்குத் தான் இசை, நாட்டியம், நாடகத்தில் விருப்பம் அதிகமாயிற்றே?'' என்றார்.

''இரவு முழுவதும் அங்கே நடனம் நடந்தாலும் பார்த்துக்கொண்டிருப்பேன்'' என்றான் தணிகாசலம்.

தமிழ் நாட்டில் நடப்பது போல் ஏதாவது ஒரு கொட்டகையில் ஜனத்திரளின் மத்தியில் நடனம் நடக்கப் போகிறதென்று அவன் எதிர்பார்த்தான். வடக்கத்திப் பழக்கம் அவனுக்குத் தெரியாது. பல தெருக்களைக் கடந்து கார் ஒரு விசாலமான மாடி வீட்டின் முன்பு நின்றது. கீழ் வீடு, மேல் மாடி இரண்டே அடுக்குகள் தான். அக்கம் பக்கத்தைப் போல் மூன்று நான்கு மாடிகள் அதில் இல்லை. கீழ் வீட்டின் முகப்பிலேயே மாடிப் படிகள் இருந்தன. அதன் அருகில் சிறு பலகையின் மேல் இடுப்பில் செருகிய கத்தியுடன் ஒரு முறுக்கு மீசைக்கார தர்வான் உட்கார்ந்திருந்தான். படிகளின் இருட்டில் அவன் முகம் சரியாய்த் தெரியவில்லை. மூர்த்தி அவனிடம் ஏதோ பேசிய பிறகு, அவன் அவர்களை மரியாதையுடன் உள்ளே அனுப்பினான்.

மாடியில் பெரியதொரு கூடமும், கூடத்தின் மத்தியில் ஆடரங்கும், அரங்கின் முன்னால் தரையில் கம்பளங்களும் திண்டுகளும் இருந்தன. நீண்டதொரு நீலநிறத் திரைச் சேலை வீட்டின் பிற்பகுதியை அரங்கிற்குப் பின்னால் மறைத்துக் கொண்டு தொங்கியது. இன்று

களில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்தார்கள் மூவரும். மூர்த்தியின் நண்பர் அருகிலிருந்த வெற்றிலைப் பெட்டியைத் திறந்து வெற்றிலை போட்டார்.

திரைக்குப் பின்னாலிருந்து வந்து, இரண்டு பக்கவாத்தியக்காரக் கிழவர்கள் அவர்களை வணங்கி விட்டு, மேடைமேல் உட்கார்ந்தார்கள். மிருதங்கம் முழங்கியது. பிடிலின் நரம்புகள் துடிதுடித்து இன்னிசையை எழுப்பின. சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு சிறுமி வந்து முன்னால் உட்கார்ந்து பாடத் தொடங்கினாள். உருக்கம் நிறைந்ததோர் இந்திப் பாட்டு அந்தக் கூடத்தில் இழைந்தது.

"நாட்டியக்காரி இனிமேல்தான் வருவாள்" என்று சொல்லி விட்டு, அவளைப் பற்றித் தமக்குத் தெரிந்ததைத் தணிகாசலத்திடம் கூறினார் மூர்த்தி. அவள் பெயர் கமலேஸ்வரியாம். பம்பாய்க்கு வந்து சில மாதங்களே ஆயிற்றாம். நகரத்தில் எங்கும் பொதுமேடைகளுக்கோ, விழாக்களுக்கோ அவள் ஆடப் போவதில்லையாம். தன் வீட்டுக்கு வரும் ரசிகர்களிடம் மட்டிலும் ஏதாவது தொகை பெற்றுக் கொண்டு நடனமாடுவாளாம். பரதம் முதல் பலவித இந்திய நடனங்களில் அவளுக்குப் பயிற்சி உண்டாம். விரும்பத்தகாத மனிதர்கள் கூட்டத்தை வீட்டுக்குள் அவள் விடுவதில்லையென்றும் கூறினார்.

சிறுமி முதல் பாட்டை முடிக்கும் வேளையில், பக்க வாத்தியங்களின் ஒலியில் ஓர் புதிய திருப்பம் ஏற்பட்டது. கமலேஸ்வரியின் கால் சதங்கைகளால் உற்சாகமடைந்தவர்கள்போல் அவர்கள் நிமிர்ந்து உட்கார்ந்து வாசித்தார்கள். "ஜல், ஜல்" என்று சதங்கைகள் திரைக்குப் பின்னால் கொஞ்சத் தொடங்கின. அதுவரையில் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்த தணிகாசலம் அந்த ஒலி கேட்டுத் திரையை ஊடுருவினான். திரைக்குப் பின் 'குப்' பென்று மின் விளக்குகள் எரிந்தன. கமலேஸ்வரியின் எழில் நிறைந்த நிழல் உருவத்தை அவன் திரையில் கண்டான்.

பக்கவாத்தியங்களில் ஓர் பரபரப்பு; சிறுமியின் பாடலில் ஓர் துடிதுடிப்பு; கால் சதங்கைகள் சுருதியுடன் சேர்ந்து கொண்டு தாளம் இசைத்தன. அடுத்த விநாடியில் திரையை விலக்கிக் கொண்டு அவள் அரங்கில் தோன்றப் போகிறாள்!

முழுத்திரையும் இன்னும் விலகவில்லை. முகத்துக்கு அருகிலிருந்த திரை மட்டிலும் பளீரென்று விலக, அதற்குள்ளேயிருந்து இரண்டு கருமணிகள் மின்னல் பாய்ச்சின. நேரடியாக அந்தக் கண்களின் பார்வை தணிகாசலத்தின் மீது விழுந்தவுடன் அவள் "ஆ!" வென்று அலறி விட்டாள். அதற்குப் பிறகு அந்தத் திரை விலகவே இல்லை. தேள் கொட்டிக் கீழே சாய்ந்தவள் போல் கமலேஸ்வரி திரைக்குப் பின்னால் தடாரென்று சாய்ந்து விழுந்தாள்.

பக்க வாத்தியக்காரர்கள் உள்ளே ஓடினார்கள். சிறுமியும் சட்டென்று பாய்ந்து சென்றாள். மிருதங்கமும் வயலினுமே அரங்கின் முன்னால் களையிழந்து காட்சி கொடுத்தன.

திரைக்குப் பின்னால் ஏதோ கசமுசவென்று பேசிக் கொண்டார்கள். இந்தி தெரியாத தணிகாசலம் ஒன்றும் புரியாமல் விழித்தான். பக்கவாத்தியக்காரர்களில் ஒருவர் கீழே ஓடிப் போய்த்



தர்வானை அழைத்து வந்தார். மற்றொருவர் பணிவுடன் மூர்த்தியின் நண்பரிடம் பணத்தைத் திருப்பிக் கொடுத்து, "தயவு செய்து இன்றைக்கு மன்னித்துக் கொள்ளுங்கள்; அம்மாளால் இப்போது நடனமாட முடியாது" என்று கூறினார்.

"என்ன காரணம்?"

"அம்மாளுக்கு உடம்பு சரியில்லை."

தணிகாசலம் நண்பர்களுடன் மாடியை விட்டு இறங்கினான். திரையை விலக்கிக் கொண்டு பார்த்த அந்தக் கண்கள் எங்கேயோ அவன் இதற்கு முன்பு பார்த்த கண்கள்; கீழே விழும் போது கேட்ட அந்தக் குரலும் ஏற்கனவே அவன் காதுகளுக்குப் பழக்கமான குரல். நடனம் நடக்காமல் போனதைப் பற்றி நண்பர்கள் வருந்தினார்கள்.

தணிகாசலமோ தடைபட்ட இந்த நிகழ்ச்சிக்கும் தனக்கும் உள்ள சம்பந்தத்தை நினைத்துப் பார்த்தான். யார் இந்தக் கமலேஸ்வரி? திரைக்குப் பின்னால் சுடர்விடும் இரண்டு கண்கள் மட்டுந் தானே தெரிந்தன? முகம்கூடச் சரியாகத் தெரியவில்லையே!

நண்பருடைய காரில் அவன் ஏறப் போகும் சமயத்தில், அந்த வீட்டின் தர்வான் வந்து தணிகாசலத்தைத் தனியாக அழைத்தான். படிகளின் வெளிச்சத்தில் அவன் முகம் நன்முய்த் தெரிந்தது. தொப்பியைக் கழற்றி விட்டு, "நான்தானையா உங்கள் சிங்காரம்!" என்று இனிய தமிழில் பேசினான் அவன். சென்னை நகரில் சிந்தாதிரிப்பேட்டையில் பகபதியிடம் வேலை பார்த்தவன்.

ரகசியமாக அவன், "உங்களுக்கு நேர மிருந்தால், நாளைக்குச் சாயங்காலம் செங்கமலத்தம்மாள் வந்து பார்க்கச் சொன்னாங்க" என்றான்.

"யார், கமலேஸ்வரியா?"

"நம்ப அம்மாதான் அவுங்க!"

## அத்தியாயம் 6

# கொடுமைக் கூத்து

செங்கமலம் ஆடிப் பிழைக்க முன் வந்த செய்தி தணிகாசலத்துக்கு வெறுப்பைத் தந்தது. வெட்கப்படவேண்டிய தொரு உண்மையைத் தெரிந்துகொண்டவன்போல் மனம் புழுங்கினான். நண்பர்களின் கேள்விகளுக்குச் சுருக்கமாகப் பதில் சொல்ல வேண்டியிருந்தது. தன்னுடைய கிராமத்தில் அடுத்த வீட்டுக்காரி, தமிழ்ப் பெண், தனக்குத் தெரிந்தவள் என்ற வரையில் சொல்லி வைத்தான். மறுநாள் மாலையில் அவளைப் போய்ப் பார்ப்பதா, வேண்டாமா என்ற சிக்கல் அப்போதே தொடங்கியது.

'குமாரசாமியின் மனைவி, குழந்தைக்குத் தாய், குடும்பத்தின் தலைவி. இவள் எதற்காகப் பம்பாய் நகரத்தில் நடனமாடவேண்டும்? நல்லவேளை; என் முன்னால் ஆட்டம் நடைபெறவில்லை. நடந்திருந்தால் ஒன்று நான் அந்த இடத்தை விட்டு வந்திருப்பேன்; அல்லது அவளை அறைந்து நானே திரைக்கு உள்ளே தள்ளியிருப்பேன்... இந்தமாதிரி இடத்துக்கு நான் வந்ததும் தப்புத்தான்.'

முதல் முதலில் புதுப்பட்டியில் நடைபெற்ற செங்கமலத்தின் அரங்கேற்றம் அவன் மனத்திரையில் விரிந்தது. அந்த ஐந்தாம் திருவிழா மண்டகப்படிக்காட்சியை நினைத்துக் கொண்டான். 'அதுவும் நடனம், இதுவும் நடனம்தான். ஆனால் இரண்டுக்கும் எத்தனை வித்தியாசம்?'

உமாவை மறக்க விரும்பிய தணிகாசலத்துக்கு அப்போதைக்குச் செங்கமலம் அருமருந்தாக வந்து சேர்ந்தாள். மனம் என்னும் புகைவண்டி திசை திரும்பி அடுத்த தண்டவாளங்களில் வேகமாக உருண்டு ஓடியது.

செங்கமலமும் குமாரசாமியும் முன்னால் பம்பாய் மலபார் குன்றில் வசிப்பதாக யாரோ சொன்னார்கள். பிறகு சென்னையில் தன்னை அழைத்த குமாரசாமியின் கடிதத்தைக் கண்டு, அவர்கள் சென்னையில் இருப்பதாக நினைத்தான். குமாரசாமி சென்னையில்தான் இருப்பார். அவர்கள் குடும்பத்தில் பிளவு ஏற்பட்டிருக்குமா? இருவரும் தனித்தனியாக வாழ்கிறார்களா?

தனியாக வாழும் நிலை வந்தால் செங்கமலம் புதுப்பட்டிக்குத் திரும்பாமல் இங்கு எதற்காக ஆடிப்பிழைக்க வேண்டும்? புதுப்பட்டியில் தாயார் செல்லக்கண்ணு தேடி வைத்த சொத்துச் சுதந்திரங்களுக்குக் குறைவில்லை. வீடு வாசல், நிலபுலம், ரொக்கப் பணம் எல்லாம் உண்டு. காரும் பங்களாவுமாக வாழ முடியாவிட்டாலும், சீரும் செட்டுமாக வாழ முடியும். எதற்காக மொழியறியாத மக்களின் மத்தியில் தன் கலையை விற்றுப் பிழைக்க வேண்டும்? கௌரவமான வாழ்க்கை இல்லை இது.

போய் அவளைப் பார்க்கக் கூடாதென்று முதலில் நினைத்தவன், பிறகு, நேரில் அவளிடம் சொல்லித் திருத்த வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். கூடுமானால் அவளைப் பம்பாயிலிருந்து குமாரசாமியிடமோ, அல்லது புதுப்பட்டிக்கோ அனுப்ப வேண்டும்.

மறுநாள் செங்கமலத்தின் வீட்டுக்கு அவன் தனியாகக் கிளம்பியபோது, "கவனமாய்ப் போய் வாருங்கள்" என்று சொல்லி அனுப்பினார் மூர்த்தி. நாட்டியக்காரியின் வீடு என்பதால் அவர் செய்த எச்சரிக்கை இது. இதைக் கூடத் தணிகாசலத்தின் மனம் தாங்கவில்லை. பிறர் இழிவாய் நினைக்கும்படியாக அவள் வாழ்வதை எண்ணி எண்ணி அவன் மனம் நொந்தான்.

மாலை ஐந்துமணி. வாசற்படியில் காவலுக்கு உட்கார்ந்திருந்த சிங்காரத்

இடம் தணிகாசலம் அவன் தாயாரைப் பற்றிக் கேட்டான். தாயார் இறந்து விட்டாளாம். புது மனைவியுடன் அதே தெருவில் அவன் வசித்தானாம். காவல் வேலையும் எடுபிடி வேலைகளும் அவனு டைய பொறுப்பு. செங்கமலம் அவனுக் குப் போதுமான சம்பளம் கொடுத்து ஆதரித்து வந்தாளாம்.

''செங்கமலத்தின் அம்மா இங்கு தானா இருக்கிறாங்க?'' என்று கேட் டான் தணிகாசலம்.

''பையனை அழைத்துக் கொண்டு கடைத் தெருவுக்குப் போனார்கள்; திரும்பி வருவதற்கு நேரமாகும்'' என் ருன் சிங்காரம்.

செங்கமலம் தணிகாசலத்தை எதிர் பார்த்துக் கொண்டு காத்திருந்தாள். திரைத் துணிகள் ஒதுக்கப் பெற்று வீடு முழுவதும் விசாலமாகத் தெரிந்தது. கூடத்தின் அரங்கிற்குப் பின்னும் நீண்ட தாழ்வாரம். தாழ்வாரத்தில் பிரம்பு நாற்காலியில் செங்கமலம் மட்டும் உட்கார்ந்திருந்தாள். எழுந்து வந்து அவனை வரவேற்றாள்.

மாலைக் கதிரொளியில் அவள் தோற் றம் மாய மோகினியை ஒத்திருந்தது. நெளி நெளியான அதே கருங்கூந்தல் காடு; அடர்த்தியான அதே புருவங்கள்; தலை நிறையக் கதம்பம் வைத்திருந்தாள். இத்தனை வருஷங்களிலும் அவள் அதிக மாக மாறவில்லை. முதல் முறை புதுப் பட்டியில் பார்த்தபோது, எப்படித் தோகை மயிலாக நின்றாளோ, கிட்டத் தட்ட அப்படியே இப்போதும் விளங் கினாள். இத்தனைக்கும் மிகுதியான செயற்கை அலங்காரங்கள் ஒன்றும் அவளிடம் இல்லை. வயது தன் திருவிளை யாடல்களைக் காட்டுவதில் அவளிடம் தோற்றுப் போய்விட்டது போலும்.

இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தனர். நேரம் சென்றது. ஏதாவது பேச வேண்டு மென்பதற்காகத் தணிகாசலமே முத லில் வாயைத் திறந்தான்.

''அன்றைக்குப் பார்த்த கண்ணுக்கு அழிவில்லாமல், இன்றைக்கும் நீ அப் படியே இருக்கிறாய். கண்களில் மட்டும் ஏதோ விந்தையான கலக்கம் தெரி கிறது. மற்றப்படி நீ மாறவேயில்லை.''

''நீங்கள் மட்டுமென்ன? என்னைவிட நீங்கள்தாம் கலங்கிப் போயிருக்கி றீர்கள். ஆனால் உருவம் என்னவோ அன்றைக்குப் பார்த்த அதே அச்சுத் தான். இன்னும் உங்களைக் கல்லூரிப் பிள்ளை என்றுதான் சொல்வார்கள்.''

தணிகாசலம் சிரித்து விட்டான். செங்கமலமும் சேர்ந்து சிரித்தாள்.

''உன்னை என் ஆத்திரம் தீரத் திட்டி விட்டுப் போக வந்தேன். நீ என்னைச் சிரிக்க வைக்கிறாய். உன்னைப் பார்த்த வுடன் நான் எதற்காக வந்தேனோ, அந்த வேலை மறந்து விட்டது.''

''ஏன், இப்போது என்னைத் திட்டுங்க ளேன்!...எவருக்கு என்னைக் கோபித்துக் கொள்ளவும், திட்டவும், அடிக்கவும் உரிமையுண்டோ அவர் என்னை ஒன்றும் செய்யவில்லை. நீங்களாவது என்னை நன்றாகத் திட்டுங்கள். அதனால் என் சுமை கொஞ்சம் குறையும்.''

இதற்குமேல் தணிகாசலத்துக்கு எப் படி அவளைத் திட்டுவதென்று தோன்ற வில்லை. தானாக ஒன்றும் கேட்காமல் அவளாகவே சொல்லட்டும் என்று காத் திருந்தான். செங்கமலம் அவனை உள்



அறைக்கு அழைத்துச் சென்றாள். தட்டில் பலகாரங்களை வைத்து விட்டுக் காப்பி கலந்து கொடுத்தாள்.

அந்த அறை அவளுடைய தனி அறை யாக இருக்க வேண்டும். மூலையில் பெரிய தொரு வீணை சாத்தியிருந்தது. கீழே நடனத்துக்கு வேண்டிய சாமான்கள் இருந்தன. மத்தியில் ஒரு மாடத்தில் ஐம்பொன்னால் செய்த ஆடலரசன் நடராஜன் விக்கிரகம் தன் கொவ்வைச் செவ்வாயின் குமிண் சிரிப்பைக் கொட்டி யது. விக்கிரகத்தின் அருகில் ஊது வத்திகள் புகை யெழுப்பின.

''வெளி மேடையைவிட இந்த அறை அழகாக இருக்கிறதே!''

''அந்த மேடையில் என் பிழைப்புக் காக ஆடுகிறேன். இந்த அறையில் என் மனச் சாந்திக்காக ஆடிப் பாடுகிறேன். வீணைதான் என்னுடைய சிநேகிதி. நடராஜர் தான் எனக்குத் துணை.''

தணிகாசலத்துக்கு அந்த அறையின் சூழ்நிலையில் அவளை ஆடச் சொல்லிப்

பார்க்க வேண்டும்போல் தோன்றியது. ''எங்கே, எனக்காக இப்பொழுது ஒரே ஒரு ஆட்டம்...'' என்று கேட்டான்.

''ஊஹூம்!'' என்று செல்லமாகத் தலையாட்டினாள் அவள்.

தணிகாசலத்தின் கண்கள் அவளைப் பார்த்துக் கெஞ்சின. உள்ளத்துக்குள் குமைந்து கொண்டிருந்த எத்தனையோ தொல்லைகளை மறப்பதற்காக அவன் அவளை ஆடச் சொன்னான். ஆடுவதற்குப் பதிலாக அவள் வீணையை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். வீணையின் நரம்புகள் அவள் விரல்களுடன் கொஞ்சத் தொடங்கின.

வள்ளலாரின் அருட்பா ஒன்று அந்த அறையெங்கும் ஊற்றுப் பெருக்கெனப் பொங்கி வழிந்தது. வீணையோடு தன்



குரலையும் சேர்த்துக் கொண்டாள் செங்கமலம். தெய்வத் தமிழிசை அவள் குரலோசையாயிற்று.

**''தண்ணமுத மதிஅமுதம் விரிந்த கிரணம்வீச,**
**நடம்பொழிற்பூ மணம்வீச, தென்றல்வீச,**
**எண்ணமுதப் பனிக்கதிரை முற்றத்தேஇன்**
**னிசைவீச, தண்பனிநீர் எடுத்துவீச...''**

தணிகாசலம் கண்களை மூடிக்கொண்டு தன்னை மறந்து இசையுலகில் சஞ்சரித்தான். பாடலின் ஒவ்வொரு சொல்லும் துண்டு துண்டாக அவள் குரலென்னும் தேனருவியில் நீந்தி வெளியே வந்தன. வீணையின் நரம்புகள் அவன் இருதய நரம்புகளெனத் துடித்தன. தணிகாசலம் தன் கண்களை மூடியவாறே அற்புதமான காட்சியொன்றைக்கண்டு ஆனந்த பரவசத்தில் மூழ்கினான்:-குளிர் நிலவின் மயக்கத்தில், நீர் சூழ்ந்த சிறு திட்டில், பூங்காவின் மையத்தில், பனிக்குநிலா முற்றத்தில், தென்றலின் அரவணைப்பில் பனித்துளியின் சிலுசிலுப்பில், தான் கட்டுப்பட்டிருப்பது போல் அவனுக்கொரு பிரமை உண்டாயிற்று.

அந்த இன்னிசைப் பெருக்கின் கற்பனைகள், உயிர்ச் சித்திரங்களாக மலர்ந்து, அவனை எங்கெல்லாமோ சுமந்து கொண்டு சென்றன.

திடீரென்று அவள் தன் குரலை மாற்றினாள். வேறு ஏதோ ஒரு ராகத்துக்கு மாற்றி அடுத்த வரிகளைப் பாடினாள்.

**''பெண்ணமுதம் அனையவர் விண்ணமுதம் ஊட்டப்**
**பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட்டோட,**
**பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட்டோட,**
**பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட்டோட''**

ஏன் ஒரே வரியைத் திரும்பத் திரும்பப் பாடுகிறாள்? வெறியோடு, விரக்தியோடு, உருக்கத்தோடு, தாபத்தோடு மாற்றி மாற்றி அதே வரிகளைப் பாடுகிறாளே, ஏன்? ஏன் இப்படிச் செங்கமலம் குமுறுகிறாள்?

தணிகாசலம் கற்பனைச் சொர்க்கத்தின் உச்சியிலிருந்து கீழே உருண்டு விழுந்து தன் கண்களைத் திறந்து பார்த்தான். செங்கமலத்தின் கண்களில் கருநாகப் பாம்புகளின் நாக்குகளைப் போல் தீச்சுடர்கள் நெளிந்தன.

''நிறுத்து!'' என்று அவன் பெரிய குரலில் கத்தினான். கடைசி வரிகளைப் பாடிவிட்டு அவள் நிறுத்தினாள்.

**''கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்தும் இன்பங்**
**கலந்துகொளத் தருங்கருணைக் கடவுள் தேவே!''**

வீணையை ஒதுக்கிவிட்டு, சட்டென்று எழுந்து, தன் கண்களைச் சேலைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள் செங்கமலம். களைப்பு மிகுந்தவள் போல் அவன் நாற்காலியில் சோர்வுடன் சாய்ந்து விசிறிக் கொண்டாள்.

''என்ன இது?'' என்று கேட்டான் தணிகாசலம்.

''ஒன்றுமில்லை.''

''இப்போது கேட்டால் சொல்ல மாட்டாய். மெதுவாக உன்னிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறேன்.—களைப்பாறியவுடன் நீ முதலில் நடனமாட வேண்டும்.''

''தயவு செய்து என்னை ஆடச் சொல்லாதீர்கள்; அது மாத்திரம் வேண்டாம்'' என்று மறுத்தாள் செங்கமலம்.

''ஏன் வேண்டாம்?''

''வேண்டாமென்றால், வேண்டாம்!''

''வேண்டுமென்றால், வேண்டும்!''

விளையாட்டாக அவள் மறுப்புச் சொல்கிறாள் என்று நினைத்தான் தணிகாசலம். வினையாகவே அவள் மறுக்கத் தொடங்கினாள். முதலில் வேண்டுகோள் விடுத்தான்; பிறகு வினயமாகக் கேட்டான்; அடுத்தாற்போல் கெஞ்சினான்; அதற்கும் அடுத்தாற்போல் அதட்டி உருட்டி அதிகாரம் செய்தான்.

''என்னால் முடியவே முடியாது,'' என்று அவள் பிடிவாதம் பிடித்தாள்.

''இந்தா! எனக்காக, ஒரே ஒரு ஆட்டம்!'' சதங்கையை எடுத்து அவளிடம் நீட்டினான். அவள் அதை வாங்கிக் கொள்ளவில்லை.

''சாகசத்துக்கும் ஒரு எல்லை உண்டு; இதை வாங்கிக்கொள்; இல்லாவிட்டால் என் குணம் திரும்பிவிடும்.''

''உங்களிடம் எனக்கென்ன சாகசம்?''

''என்ன சொன்னாய்?'' என்று சீறியெழுந்தான் தணிகாசலம். அவனுடைய நெற்றி நரம்புகளில் ரத்த ஓட்டம் அதிகமாயிற்று. ''பிறகு எதற்காக என்னை இங்கே வரவழைத்தாய்?''

''வரவழைத்தால் ஆட வேண்டுமென்ற கட்டாயம் இல்லையே? உங்கள் முன்னால் ஆடுவதென்றால் நேற்றே ஆடியிருக்க மாட்டேனா?''

கேவலம் ஒரு பெண்பிள்ளை, அதிலும் பணத்துக்காக நாட்டியமாடுபவள், தன்னை அவமானப்படுத்துகிறாள்!

தணிகாசலம் வெறி கொண்டான்.

''நேற்று நீ ஏன் ஆடவில்லை தெரியுமா?'' என்று அவளையே திருப்பிக் கேட்டான். ''அது உன்னுடைய பிறவிக் குணம். உன்னிடம் அன்பு கொண்டவனை ஏமாற்றிக் கொண்டே இருப்பதில் உனக்கொரு இன்பம்! புதுப்பட்டியில் உன் தாயாரைக் காரணம் காட்டி என்னை ஏமாற்றினாய். சென்னையில் குமாரசாமியை விட்டு என்னை ஏமாற்றச் சொன்னாய். நேற்று இங்கே பணம் கொடுத்து ஆட்டம் பார்க்க வந்த இடத்திலும் என்னை ஏமாற்றி விட்டாய்! நீதான் அந்தக் கமலேஸ்வரி என்று தெரிந்திருந்தால், உன் வீட்டுப் படியைக்கூட நான் மிதித்திருக்க மாட்டேன்'' என்று சதங்கையை அவள் மடியில் வீசினான். அப்படியும் அவன் கோபம் தீரவில்லை. ''நீ ஆடத்தான் போகிறாய்; நான் பார்க்கத்தான் போகிறேன்! நீயாக ஆடாவிட்டால் நானே உன்னை ஆட்டுவிக்கப் போகிறேன்! பணம் கொடுப்பவர்களுக்கு ஆட மறுக்காத நீ என்னை எப்படி அலட்சியப் படுத்தலாம்? உனக்குப் பணம் வேண்டுமா? எவ்வளவு வேண்டும்? சொல்!''

கரகரவென்று கண்ணீர் வடித்தாள் செங்கமலம்.

நடராஜ விக்கிரகம் அவனுடைய பார்வையில் பட்டது. ''ஆடும் பெருமானே! எங்களை ஆட்டி வைக்கும் எம்பெருமானே! இவள் செய்வது சரியா?'' என்று அதனிடம் கேட்டான்.

''சும்மாயிருக்க மாட்டீர்களா?'' என்று அவள் கதறினாள்.

''உன்னுடைய கடவுளை உற்றுப்பார்! காலில் குழந்தையைப் போட்டு மிதித்துக் கொண்டு ஆடுகிறார். கையில் நெருப்பை வைத்துக் கொண்டு ஆடுகிறார். அவரைப் பாடிக் கொண்டே நீ ஆடு! ஊழிக் கூத்து ஆடினாராமே இவர், அதைப்போல் ஆடு!—குழந்தையைப் பறி கொடுத்தவனின் துன்பத்தைப் போக்குவதற்காக, அப்பாவிப் பெண்ணொருத்தியைக் கலை நெருப்பால் வாட்டி வதைத்தவனின் கோபத்தைத் தணிப்பதற்காக நடனமாடு! — என்ன சொல்கிறாய்? ஆடாவிட்டால் உன்னை அறைந்து ஆட வைப்பேன்! உன்னைப் பிடித்திழுத்து ஆட்டுவிப்பேன்!''

தணிகாசலம் அவளுடைய கரத்தைப் பற்றி இழுக்கப் போனான்.

''என்னைத் தொடாதீர்கள்!''

''உன்னை நான் தொடக் கூடாதா? நீ வாழ்கிற லட்சணத்துக்கு இந்த வேஷம் வேறு போடுகிறாய்?—ஆமாம்;



உன்னையும் ஒரு பெண்ணென்று மதித்து நான் உன் வீட்டில் நுழைந்தது தவறு. உன்னைத் தொடுவதும் தவறுதான்! வேண்டாம். உன்னைத் தொடவந்த என் கையைக் கழுவிக் கொண்டு நான் வந்த வழியே போகிறேன்.''

''என்ன சொன்னீர்கள்?''

''கைநிறையப் பணம் கொடுப்பவனா நான், உன்னைத் தொடுவதற்கு?''

நடராஜ விக்கிரகத்துக்குப் பின்னாலிருந்த ஒரு கடிதத்தை எடுத்து, சுக்கு நூறாகக் கிழித்து, அவன் முகத்தில் வீசினாள் செங்கமலம். அது அவளுக்கு அவன் எழுதிய முதல் கடிதம்; கடைசிக் கடிதம்; ஒரே ஒரு கடிதம்.

தணிகாசலம் சூறாவளிபோல் அந்த அறையைவிட்டு வெளியில் ஓடி வந்தான். முன் கூடத்தில் கிடந்த கால் செருப்புக்களை எடுத்து மாட்டிக்கொண்டான். அறைக்குள் அதே நேரத்தில், ''ஜல், ஜல், ஜல ஜல ஜல்!'' என்று சதங்கை ஒலித்தது. ''போகாதீர்கள்! போக வேண்டாம்; வாருங்கள்'' என்று அவள் விம்மி விம்மிக் கதறினாள். (தொடரும்

# தமிழ் கூறும் நல்லுலகம்

கல்கத்தா தேவவாணி பரிஷத்தினர் ஏப்ரல் 20-ந் தேதியிலிருந்து 24-ந் தேதிவரை சங்கர ஜயந்தி உத்ஸவத்தை விமரிசையாகக் கொண்டாடினர். பிரதிதினம் காலையில், பரிஷத்தில் வேதபாடம் அப்பியசித்து வரும் அங்கத்தினர்களால் உபநிஷத் பாராயணம் நடைபெற்றது. மாலையில் ஆதிசங்கரர் எழுதியருளிய தட்சிணாமூர்த்தி அஷ்டகத்தைப் பற்றிய பிரவசனம் சாஸ்திர ரத்னாகர வித்யாலாகர் பிரும்மஸ்ரீ பட்டாபிராம சாஸ்திரிகள் அவர்களால் நிகழ்த்தப்பட்டது. 24-ம் தேதி யன்று ஸ்ரீ டி. எஸ். சீதாபதி அவர்கள் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சுவாமி விமலானந்தர் அவர்கள் பகவத்பாதரின் அவதாரத்தைப் பற்றி மிகச் சிறப்பாகப் பேசினார்கள். ஜயந்தி விழா சிறப்பாக நடைபெற வேண்டுமென்று காஞ்சி ஜகத்குரு அவர்களால் அனுப்பிய செய்தியும் பொதுக் கூட்டத்தில் அறிவிக்கப்பட்டது.

★

தேவலாலியிலுள்ள பக்த ஸமாஜத்தின் ஆதரவில் ஸ்ரீசங்கர ஜயந்தி ஏப்ரல் 26-ந் தேதி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

அன்று மாலை ஆசாரியாள் படத்துக்குப் பூஜை நடந்தது. ஸ்ரீ பத்மனாபேசுவர ஐயர் ஆசார்யாளின் சுலோகங்கள் சிலவற்றைப் படித்தார். ஸ்ரீ சங்கரஜயந்தி விழாவுக்காகப் பிரத்தியேகமாக அனுப்பப்பட்ட ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியாரின் ஸ்ரீமுகம் படிக்கப்பட்டு, பிரசாதம் எல்லாருக்கும் வழங்கப்பட்டது.

திரு பி. எஸ். கிருஷ்ணசாமி ''சங்கரபகவத்பாதாளின் வாழ்க்கையும் அத்வைத சித்தாந்தமும்'' என்பது பற்றி வெகு அழகாகப் பேசினார்கள். திரு எம். ஆர். ஸ்ரீனிவாஸராகவன் ''பஜகோவிந்த''த்திலிருந்து சுலோகங்களை உருக்கமாகப் பாடினார். திரு பி.ஆர். திருவேங்கடம் நன்றிகூற விழா இனிது முடிவடைந்தது.

★

ரௌர்கேலா தக்ஷிண பாரத ஸமாஜத்தாரால் ஏப்ரல் 24-ம் தேதி, காரியதரிசி ஸ்ரீ வி. சாம்பசிவய்யர் இருப்பிடத்தில் சங்கர ஜயந்தி விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. பூஜைகள் முடிவடைந்த பிறகு, திருவாசகமணி ஸ்ரீ எஸ். வெங்குசாமி அய்யர் ஆதிசங்கரரின் மகிமையைப் பற்றிச் சொற்பொழிவாற்றினார்.

★

செம்பூர் தமிழ்ச் சங்கத்தின் மூன்றாவது ஆண்டு விழா ஏப்ரல் 22-ந் தேதி கொண்டாடப்பட்டது. திரு ஏ. எம். ராஜகோபால் அனைவரையும் வரவேற்றார். திரு எஸ். சீனிவாச அய்யர் விழாவினைத் துவக்கி வைத்தார். திரு சி. வி. சுப்பிரமணியம் விழாவுக்குத் தலைமை தாங்கினார். சங்கப் பொருளாளர் வந்திருந்த வாழ்த்துக்களை வாசித்தார். செயலாளர் திரு கோ. பரமேசுவரன் ஆண்டறிக்கை வாசித்தார். தலைவர் திரு க. மைக்கேல் இக்னேஷியஸ் நன்றி நவிலக்கூட்டம் முடிவுற்றது. பின்னர், ''தியாகச் சுடர்'' நாடகம் நடைபெற்றது. ஏராளமான மக்கள் நாடகத்தைக் கண்டுகளித்தனர்.

★

ஜம்ஷெட்பூரில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் 111-வது ஆண்டு ஆராதனை விழா. ஏப்ரல் 11, 12, 13 தேதிகளில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

தியாகராஜ மஹோத்ஸவத்தை டாட்டா கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ வி. ஆர். அய்யங்கார் அவர்கள் துவக்கி வைத்தார்கள். பல வித்வான்களும், விதுஷிகளும் இவ்விழாவில் இன்னிசை வழங்கினர்.

★

பம்பாய் சுற்றுப்புறத்திலுள்ள அந்தேரி என்ற இடத்தில் தமிழர்கள் பலர் தங்களுக்கென்று கூட்டுறவு சங்கத்தின் அடிப்படையில் ஸ்ரீராம் சொஸைட்டி என்ற பெயரில் வீடுகள் கட்டிக்கொண்டு வாழ்கின்றனர். இங்கு இருக்கும் சிறுவர் சிறுமிகளுக்கும் மற்றும் சுற்று வட்டாரத்தில் வசிக்கின்ற குழந்தைகளுக்கும் கல்வி வசதி அளிக்கும் பொருட்டு, கூட்டுறவு சங்கத்தின் ஆதரவில் ஒரு பள்ளியையும் நிறுவி, அதைக் கடந்த ஏழு ஆண்டுகளாக மிகச் சிறந்த முறையிலே நிர்வகித்து வருகிறார்கள்.

வளர்ந்து வருகின்ற இப் பள்ளிக்கூடத்துக்குப் போதுமான கட்டட வசதி இல்லாததால் ஸ்ரீராம் சொஸைட்டியின் உயர்நிலைப் பள்ளியின் கட்டட நிதிக்காக ஸ்ரீமதி கமலா லக்ஷ்மணன் அவர்களின் நடனம் நடந்தது.

இந்த நிகழ்ச்சியை, பம்பாய் கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் ஆரம்பித்து வைத்துப் பேசுகையில், பள்ளிக் கட்டடத்தை எழுப்புவதற்கான ஸ்ரீராம் சொஸைட்டியின் ஆற்றலையும், ஆர்வத்தையும் புகழ்ந்துவிட்டு, இந்தப் பள்ளியின் வளர்ச்சிக்கும் வெற்றிக்கும் தமது ஆசிகளை வழங்கினார்.

★

நாகபுரியில் மூன்றாவது வருட ''ரயில்வே வார'' விழா 10-4-58 லிருந்து 16-4-58 வரை 'தென்கிழக்கு ரயில்வே'க் காரர்களால் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

'அலங்கார உடை'ப் போட்டிகள்; சுகசங்கீதம்; நாட்டியம்; 'ஜிப்ஸி' நடனம்; 'பாம்பாட்டி' நடனம், 'ஓரியண்டல்' நடனம்; 'விளையாட்டு'ப் போட்டிகள்; 'கட்டுரை'ப் போட்டி; 'கால்பந்து' விளையாட்டு; சிறுவர் சாரணர் அணிவகுப்பு முதலியன சிறந்த அம்சங்கள். இவ்விழாவில் பங்கெடுத்துக் கொண்டவர்களில் பெரும்பாலும் தமிழர்களும், ஆந்திரர்களுமேதான்.

# சிடுசிடுக்கும் சிறுவன்!

அவனைக் கோபிக்காதீர்கள் — உணவில் அவனுக்குப் போதுமான அளவு வைட்டமின்கள் கிடைக்கவில்லை போலும். எலும்புகளையும் அவயவங்களையும் வளரச்செய்ய அநேக குழந்தைகளுக்கு அதிகப்படி வைட்டமின்கள் தேவை.

பெரியவர்களுக்குக்கூட அதிகப்படி வைட்டமின்கள் தேவை. ஆகையால் உங்களுடைய குடும்பத்தாருக்கு மல்டிவைட் கொடுத்து, வைட்டமின் குறைவு ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்ளுங்கள். மல்டிவைட் பசியை உண்டாக்கி, பலமின்மையை ஒழித்து தொத்து வியாதியைத் தடுக்கும் சக்தியை வளர்க்கிறது.



## உங்களுடைய டாக்டரைக் கேளுங்கள்!

**மல்டிவைட்** மாத்திரைகளைச் சாப்பிடுவதே ஒரு சுகம்! அவைகள் ருசிகரமான முறையில் சாக்லெட்—கோட் செய்யப்பட்டிருக்கின்றன.

30 மாத்திரைகளும் 60 மாத்திரைகளும் கொண்ட பாட்டல்களில் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

ஞாபகமிருக்கட்டும் **மல்டிவைட்** உங்களை ஆரோக்கியமாக இருக்கும்படி செய்கிறது.

BDH

**பிரிட்டிஷ் ட்ரக் ஹவுஸஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.**
தபால் பெட்டி 1341, பம்பாய்-1




சஞ்சார சகாப்தத்தில் நிலைபெற்ற அரசாங்கமும், காரியாலயங்களும், அதிகார வர்க்கமும் இல்லாததால், சட்டங்களுக்கு இடமில்லை. விவசாய சகாப்தத்தில் அரசர்கள் இருக்கு மிடங்களில் அவர்களுடைய கட்டளைகளைச் சட்டமாகப் பிரகடித்து அமுல் செய்வதுண்டு. ஆனால் கிராமங்களில்வசிக்கும் பெரும்பாலோர் தமது வகுப்பு அல்லது குடும்ப சம்பிரதாயங்களையே அனுசரித்து வந்தனர். இந்தச் சம்பிரதாயங்களைக் கொண்டே அரசர்களின் சட்டங்களும் இருந்தன.

இயந்திர சகாப்தத்தில் சமூகம் சட்டத்தின் மூலமாகவே நடைபெற வேண்டும். இல்லாவிட்டால் குழப்பமும் கலகமும் ஏற்படும். சட்டத்துக்கும் சம்பிரதாயத்துக்கும் முக்கிய வித்தியாசம் என்னவென்றால், சட்டம் அரசாங்கத்தின் பலத்தைக் கொண்டு அமுல் செய்யப்படும். அனேகமாக எல்லா மக்களுக்கும் பொதுவாக இருக்கும். சட்டத்தை மீறுகிறவர்களைச் சிறையில் வைத்தோ, அபராதம் போட்டோ தண்டிப்பார்கள். சம்பிரதாயம் சமூகக் கட்டுப்பாட்டின் மூலமாகவே அமுல் செய்யப்படும்; சாதி, வகுப்பைப் பொருத்திருக்கும்; சமூக பகிஷ்காரத்துக்குப் பயப்படாதவர்கள் அவைகளை மீறிவிடலாம்.

ஜனநாயகத்துக்கே சட்டத்தின் ஆட்சி உரியதென்று மேடைகளிலும், சில புத்தகங்களிலும் கூறப்படுகிறது. இது தவறு. அது இயந்திர சகாப்தத்தில் புகுந்திருக்கும் எந்த சமூகத்துக்கும் பொதுவானது. சட்டம் செய்யப்படும் முறையிலும் அதை அமுல் செய்யும் விதத்திலுமே ஜனநாயகத்துக்கும் எதேச்சாதிகார முறைகளுக்குமுள்ள முக்கிய வித்தியாசம். ஜனநாயகத்தில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கூடி வாத விவாதம் செய்து, சட்டம் இயற்றுகின்றனர். பத்திரிகைகள் சுதந்திரமாகத் தம் அபிப்பிராயங்களைப் பிரகடிக்கின்றன. பொதுக் கூட்டங்களில் வாத விவாதம் செய்யப்படுகிறது. ஆகலால் பொதுமக்களின் அபிப்பிராயத்துக்கு எதிராகச் சட்டம் செய்வது அதிகாரத்திலுள்ள கட்சிக்கு அபாயமாக இருக்கிறது. எதேச்சாதிகாரத்திலோ அதிகாரிகளுக்கு விரோதமாக எவ்விதப் பிரசாரமும் செய்ய முடியாது. சொந்த அபிப்பிராயம் எப்படியிருந்தபோதிலும் அவர்கள் செய்வதை ஆதரித்துப் பேசுவது பிரமுகர்கள் தம் பதவியில் இருப்பதற்கு அவசியமாகின்றது.

ஜனநாயகத்தில் சட்டங்கள் நியாயஸ்தலங்கள்மூலம் அமுல் செய்யப்படுகின்றன. நியாயாதிபதிகளை நியமிப்பதற்கும் பதவியிலிருந்து நீக்குவதற்கும் கடுமையான நிபந்தனைகள் இருக்கின்றன. ஆகலால் சட்டத்துக்கு மீறி நிர்வாகிகள் அக்கிரமம் செய்தால் அவர்களைத் தடுக்கவும், கண்டிக்கவும் நீதிபதிகளுக்குச் சுதந்திரமும், பாதுகாப்பும் இருக்கின்றன. எதேச்சாதிகாரங்களிலும் கோர்ட்டுகளும், நீதிபதிகளும் இருந்தபோதிலும், அவை அதிகாரிகளைத் தடுக்கவோ, நடுநிலைமை வகுத்து நியாயத்தை வழங்கவோ பயன்படா.

எல்லா உரிமைகளும், சுதந்திரங்களும் சட்டத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கும்

## 6. சட்டத்தின் ஆட்சி

சமூகத்தில், சட்டம் செய்யும் விதமும் அதை அமுல் செய்யும் முறையும் அந்த உரிமைகளுக்கும், சுதந்திரங்களுக்கும் அடிப்படையானது. ஆதலால் ஜனநாயகத்தைத்தவிர எந்த ஆட்சி முறையிலும் உண்மையான சுதந்திரமோ, உரிமையோ இருக்க முடியாது. சௌகரியங்கள் இருக்கலாம், சலுகைகள் கிடைக்கலாம். ஆனால் அவற்றுக்கு உரிமையிராது. அவற்றை வற்புறுத்தி அடைய வழியிராது.

ஜனநாயகத்தில் அடிப்படையான உரிமைகளும், சுதந்திரங்களும் பாதுகாக்கப்பட வசதியுண்டு. ஆனால் அவசியம் காக்கப்படும் என்று கூற முடியாது. அதிகாரத்திலிருக்கும் கட்சி சிறுபான்மையோரைத் துன்புறுத்த விரும்பினால் அதனைத் தடுக்க முடியாது. இக்காரணத்தால், அரசியல் திட்டத்திலேயே மூல உரிமைகள் பாதுகாக்கப்பட்டு, அவற்றைச் சட்ட சபைகள்கூட மாற்ற முடியாதென்றும் அவ்வுரிமைகளை ரட்சிக்க உயர்தர நீதிமன்றங்களுக்கு அதிகாரம் இருக்க வேண்டுமென்றும் அரசியல் அறிஞர்கள் கூறுகின்றனர். இக்கொள்கையின் பேரிலேயே இந்திய அரசியல் திட்டம் அமைக்கப் பெற்றிருக்கிறது. அப்படியிருந்த போதிலும், அரசியல் திட்டத்தைக் கூட வலுப்பெற்ற அரசியல் கட்சிகள் தங்களுக்குச் சாதகமாக மாற்றிவிடக் கூடும்.

முடிவில், சமூகத்தின் மக்களின் உறுதியையும், தியாக சக்தியையும் பொருத்தே மக்களின் உரிமைகளும் நிலைபெற்றிருப்பன. இதற்கு உத்தம ஆயுதம் சத்தியாக்கிரகம். அதனை உலகுக்கு அளித்து, காந்தியடிகள் மனித வாழ்க்கைக்கு ஒப்பற்ற சேவை செய்திருக்கிறார். ஆனால், நியாயமற்ற வழியில் அதை உபயோகித்துப் பலகூட்டத்தார் அதன் சக்தியைக் குறைத்து வருகின்றனர். பொது மக்கள் ஆதரவு பெற்ற அரசாங்கம் செல்வத் துறையிலோ, சமூகத் துறையிலோ தனது கொள்கைப்படி நடப்பதை எதிர்ப்பதற்குச் சத்தியாக்கிரகம் சரியான கருவியல்ல. பெரும்பான்மையோர் தமது பலத்தால் தகாத வழியில் அடிப்படையான மனித

உரிமைகளைப் பறிக்க முயலும் பொழுதே சத்தியாக்கிரகம் பயன்படும்.

ஜனநாயக ஆட்சி முறையும், சுதந்திரமான நியாயாலயங்களும் இயந்திர சகாப்தத்தில் சுதந்திரங்களைப் பாதுகாக்கப் போதிய சாதனங்களாக இருப்பினும், பெரும்பாலும், விவசாய சகாப்தத்தில் இருக்கும் சமூகங்களில் பெரும்பாலோருக்கு அவற்றால் அதிக பயனில்லை. அவ்வப்போது நிறைவேற்றப்படும் சட்டங்களை அறிவதற்கோ, வக்கீல்கள் கோர்ட்டுகள் மூலம் தங்களைப் பாதுகாப்பதற்கோ கிராமத்து ஜனங்களுக்குச் சாத்தியமில்லை. இன்றும் பாரதத்தில் கிராமவாசிகள் தங்கள் சம்பிரதாயங்களை அனுசரித்து, சாதிக் கட்டுப்பாடுகளைக் கொண்டே வாழ்ந்து வருகின்றனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட்ட 'சட்ட ஆட்சி' பணக்காரர்களுக்கும், நடுத்தர வகுப்பார்களுக்குமே சாதகமாக இருந்தது. நூறு வருஷங்களுக்கு முன்பு எல்லா நிலங்களும் கிராமத்துக்குப் பொதுவாக இருந்தன. பிரிட்டிஷ் ஆட்சியில் நில உரிமைச் சட்டங்கள் செய்யப்பட்டவுடன் அவை தனி நபர்களின் சொந்த நிலங்களாகி விட்டன. அதனால் நிலத்தின் சொந்தக்காரர்கள் தங்கள் கிராமங்களில் வசிக்காமல் வெகு தூரத்திலிருந்து கொண்டு குத்தகை வசூல் செய்து ஜீவிப்பது சாத்தியமாயிற்று. மீண்டும் நிலங்களை உழுவர்களுக்குத் திருப்பிக் கொடுப்பதற்காக எல்லாப் பிரதேசங்களிலும் சட்டங்கள் செய்யப்பட்டு வருகின்றன.

விவசாய சகாப்தம் பாரதத்தில் ஸ்திரமாக நீடித்திருப்பதானால், இதை முழு மனத்துடன் ஏற்கலாம். ஆனால் ஒரு புறம் இயந்திரத் தொழிலைப் பெருக்கி மறுபுறம் சிறு குடியானவர்களின் எண்ணிக்கையை விருத்தி செய்வது முரண்பாடான காரியங்களாகத் தோன்றுகின்றன. அதன் பலனாக இயந்திரத் தொழிலில் வேலை செய்வோர் மேல் வகுப்பினர்களாகவும், விவசாயிகள் தாழ்ந்த வகுப்பினராகவும் கருதப்படுவர். ருஷியாவிலும் சைனாவிலும் முதலில் பெரிய நிலச்சுவான்தார்களை அழிப்பதற்கு நிலங்களைக் குடியானவர்களிடம் கொடுத்து, பின்னர் சிறிய குடியானவர்களிடமிருந்து பிடுங்கி, பெரிய சர்க்கார் அல்லது கூட்டுறவு பண்ணைகளாக்கினர். ஜனநாயக ஆட்சி இருக்கும் வரையில் பாரதத்தில் இது சாத்தியப்படாது; விவசாயம் விஞ்ஞான முறையில் நடைபெறாது; பழைய முறையில் மனிதர், மாடுகளின் தேக உழைப்பால் விவசாயம் செய்யப்படும் என்று பல தலைவர்கள் நினைக்கிறார்கள். அப்படியானால் விவசாயிகளின் ஊதியங்கள் இயந்திரத் தொழிலாளர் ஊதியங்களுக்குச் சமானமாக இருக்க முடியாது. விவசாயிகள் தாழ்ந்த வகுப்பினராக இருக்க வேண்டி வரும். இதை அவர்கள் நீண்ட நாட்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஆதலால், ஜனநாயகத்துக்கே அபாயம் ஏற்படக் கூடும்.

இம்முரண்பாடு நன்கு புலப்படுவதற்குப் பல ஆண்டுகள் செல்லும்! தற்சமயம் வயது வந்த தொழிலாளிகளில் 10-ல் ஒருவர்தான் இயந்திரத் தொழிலிலோ அதையொட்டிய சர்க்கார் சேவகம் முதலிய வழிகளிலோ பிழைத்து வருகின்றனர். இந்த விகிதம் பெருகி நாட்டில் மூன்றில் ஒரு பங்கு தொழிலாளிகள் இயந்திரத் தொழிலில் ஈடுபடும் காலம் வரும்பொழுது, வகுப்புப் பிரச்னை தீவிரமாகிவிடும். அதை, அவசியம் செய்யாமல், இப்பொழுதே விவசாயத்தையும் விஞ்ஞானமுறையில் நடத்துவதற்குவேண்டிய வழிகளைத் தேடுவது புத்திசாலித்தனமாகும்.

சட்டத்தின் ஆட்சியில், வரிகள் மூலம் நாட்டின் செல்வத்தைச் சர்க்கார் திரட்டி அதைக் கல்வி, சுகாதாரம் முதலிய பொது சேவைகளுக்கும், வயது வந்தவர்கள், வேலையில்லாதவர்கள், நோய் முதலிய பீடைகளுக்கானவர்கள் முதலியோருக்கு உதவி செய்வதற்கும் செலவழிக்கப்படுகிறது. இயந்திரத் தொழில் பெருகிய நாடுகளில்தான் இது சாத்தியமானது. ஒவ்வொரு தொழிற்சாலையும் தனது தொழிலாளிகளின் ஊதியத்துக்கும், இதர செலவுகளுக்கும் வேண்டியதற்கு மேல் அதிக செல்வத்தை உற்பத்தி செய்கின்றது. அதை வரிகள் மூலம் சர்க்கார் எடுத்து இதர வழிகளில் செலவு செய்வது சாத்தியமாகிறது. விவசாயத்தையே முக்கிய தொழிலாகக் கொண்ட சமூகங்களில் விவசாயத்திலும், குடிசைத் தொழில்களிலும் உழைப்போருக்குப் போதிய ஊதியம் கொடுத்தால் எவ்வித மிச்சமும் இராது. அவர்களுக்கு ஜீவனத்துக்குப் போதாத ஊதியத்தை வழங்கிச் சிறிது பாகத்தை நிலச்சுவான்தார்களும், சர்க்காரும் எடுத்துக் கொள்ளுகிறார்கள். ஆனால் நிலவரியைக் கொண்டு கட்டாயக் கல்வியோ, சுகாதார வசதிகளோ சாத்தியமில்லை. வயதானவர்களுக்கு உதவியளிக்கக் கனவிலும் நினைக்க முடியாது.

பாரதத்தைப் போல் திரிசங்கு நிலையில் இருக்கும் ஜனநாயக சமூகங்களுக்கு இதுவும் ஓர் பெரும் சோதனையாக இருக்கிறது. இயந்திரத் தொழிலின் மிச்சத்தை எடுத்து சமூக சேவைகளுக்குச் செலவழித்து விட்டால் அத்தொழில் பெருகுவதற்கு வேண்டிய முதலிராது. அப்படிச் செலவழிக்கா விட்டாலும் பொது மக்களிடம் அதிருப்தி வளர்ந்து அதிகாரத்தில் இருக்கும் கட்சி அடுத்த தேர்தலில் தோற்றுப் போக நேரிடும்.

நாள்முழுவதும்
கவர்ச்சிகரமாக
தோற்றமளிக்க









**ஸாண்டல்வுட் டாய்லட் பவுடர்**
சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது.

**ஸாண்டால்**
சந்தனத்துடன் கூடிய டால்கம் பவுடர்

# டி.எஸ்.ஆர். & கோ
## கும்பகோணம்

A. K. GOPAL & CO.

ஏஜண்டுகள் : மெஸர்ஸ் நாமகிரி டிரேடிங் கார்ப்பொரேஷன், 1, டாக்கர் சத்திரம் லேன், மேற்கு புலிவார் ரோடு, திருச்சி ★ மெஸர்ஸ் கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, சரத்போஸ் ரோடு, கல்கத்தா-26

# கள்ளர் அணை

"மன்னவா! சிங்கள அடிமைகளின் அட்டகாசம் தாங்க முடியவில்லை. இனமும் ஏதாவதொரு, கலகம், செய்துகொண்டே இருக்கிறார்கள்."

"உண்டியும் உறக்கமும் நல்ல முறையில் கிடைக்கும் பொழுது அவர்கள் ஏன் அப்படிக்கலகம் செய்கிறார்கள்?" என்று வியப்புடன் கேட்டான் மன்னன் கரிகாலன்.

"உண்டு விட்டுச் சதா உறங்குவதால்தான் அப்படிச் செய்கின்றனர், அரசே!"

"அப்படியானால் அவர்களுக்கு உணவைக் குறைத்துக் கொடுக்க உத்தரவிடுங்கள்."

"அப்படியும் செய்து பார்த்தேன், அரசே! உணவைக் குறைத்தால் அவர்கள் இன்னும் அதிகமாகக் கூச்சலிடுகின்றனர். அவர்களுக்கு ஏதாவது வேலை கொடுத்தால்..."

"வேலையா? என்ன வேலை? அவர்களோ பல்லாயிரக்கணக்கில் இருக்கின்றனர். அவர்களுக்கு என்ன வேலை கொடுப்பது?"

"மன்னவா! எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. வெறுமனே உறங்கி வழியும் அவர்களுக்குப் போர்ப் பயிற்சி அளித்தால் என்ன?" என்றான் சேனாபதி.

".என்ன? நாம் போரிட்டு அடிமை கொண்ட சிங்களக் கைதிகளுக்கு நாமே போர்ப் பயிற்சி அளிப்பதா? என்ன, சேனாபதி! விளையாடுகிறீர்களா?" என்று கேட்டுக் கொண்டே அமைச்சர் கள்ளர்பிரான் அரசனின் தனியறைக்குள் வந்தார்.

"வாருங்கள். அமருங்கள், அமைச்சரே!" என்று கூறினான் அரசன். "அமைச்சரே!

அடிமைகளுக்குப் போர்ப் பயிற்சி என்ற பெயரால் அவர்களது உடல் உழைப்பை உறிஞ்சினால் அவர்கள் அட்டகாசம் அழியும். நமது படையும் விரியும்'' என்று அரசனே தொடர்ந்து பேசினான்.

''அரசே! சிங்களவர்கள் நமது அடிமைகள். நமது போர் முறைகளை அறிந்து கொண்ட பின்பு நம்மையே தாக்க முயல்வர். நமது ஆணைக்குக் கீழ்ப்படியமாட்டார்கள். மேலும், தோற்றோடிய சிங்கள மன்னன் நம்மீது மீண்டும் படையெடுக்கத் தயாராவதாக எனக்கு நம்பகமான தகவல் கிடைத்துள்ளது. இந்த விபரீத யோசனை வேண்டாம், மன்னவரே! அவர்களது கலகத்தை அடக்க, வேறு பணிகளில் வேண்டுமாயின் ஈடுபடுத்தலாம்'' என்றார் அமைச்சர்.

''அரசே! சிங்களவர்களை என்றும் என் ஆணைக்கு அடங்கி நடக்கச் செய்வது என் பொறுப்பு. என்னை நம்புங்கள். அவர்களுக்குப் பயிற்சி அளிப்பதால் நமக்கு நன்மையே தவிர, தீமை ஏதுமில்லை. இன்றைய அரசியல் நிலை போர் வரலாம் என்று இருப்பதால் பயிற்சி அளிப்பது நம் பலத்தை அதிகப்படுத்தும். உத்தரவு தாருங்கள்'' என்றான் சேனாதிபதி.

சிறிது நேரம் கழிந்தது. அரசன் என்ன கூறுவானோ என்று அமைச்சரும் சேனாதிபதியும் ஆவலுடன் எதிர்பார்த்தனர்.

''சேனாதிபதி! உன் இஷ்டப்படி செய்'' என்றான் மன்னன். சேனாதிபதி அமைச்சர் மீது ஒரு ஏளனப் புன்னகையை வீசி விட்டுத் தனது மீசையை முறுக்கிக் கொண்டே வெளியேறினான்.

''அரசே! தாங்கள் தவறு செய்து விட்டீர்களென்று எண்ணுகிறேன். உன் நாட்டிலேயே உங்களைக் கொல்ல ஒரு சதிக் கூட்டம் உள்ளது. கீழைச் சாளுக்கிய மன்னனும் நம்மீது ஒரு கண் வைத்திருக்கிறான். போதாததற்குச் சிங்கள மன்னனும் மீண்டும் படையெடுக்க

கி.விவேகானந்தன்

ஆயத்தம் செய்கிறான். இந்நிலையில் அடிமைச் சிங்களவருக்குப் போர்ப் பயிற்சி அளிப்பது நல்லதா?'' என்றார் அமைச்சர் கள்ளர்பிரான்.

''அமைச்சரே! எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. பிறகு பேசுவோம். நான் இப்பொழுது தனிமையில் இருக்க விரும்புகிறேன்'' என்றான் மன்னன்.

**வே**ற்று நாட்டவர் வியந்திட, சொந்த நாட்டினர் புகழ்ந்திட, வீரப் போரிட்டுச் சிங்களத்தை அடிமைப்படுத்திப் பல்லாயிரக் கணக்கான சிங்களவரைச் சிறைப்படுத்த வந்த கரிகாலன் — பாரில் சிறந்த பொன்னி நதிக்குக் கரையும் அணையும் அமைத்துச் சோழர் வரலாற்றிலே தனி இடம் பெற்ற கரிகாற் சோழன் — தனிமையிலே விடப்பட்டான். அவன் இளம் உள்ளத்தில்தான் எத்தனை கவலைகள் தோன்றின!

சோறுடைய சோழ நாட்டில் கரிகாற் சோழனின் காலத்திலே எங்கு பார்த்தாலும் ஒரே குழப்பம். அவன் தனது இளம் வயதிலேயே சிங்காசனம் ஏறினான். 'இந்தச் சிறுவனா நம்மை ஆளப்போகிறான்?' 'இவனா நமது குற்றம் குறைகளைக்கேட்டு நீதி வழங்கப் போகிறான்?' 'இந்தப் பாலகனா வரும் பகைவர் படையை எதிர்த்து வெற்றி கொண்டு நமக்குப் பாதுகாப்பு அளிக்கப் போகிறான்?' என்று குடி மக்கள் கேலி பேசும் வேளையிலே அரியாசனம் ஏறினான் கரிகாலன். மக்களின் இகழ்ச்சி மொழிகள் விழுந்த அவன் செவியிலே, நாட்டின் மகுடத்தைப் பறிக்கப் பல சதிக் கூட்டத்தினர் உலவுவதாக வந்த வதந்தியும் விழுந்தது. அவன் முன்னோர்கள் இமைச் சாளுக்கிய நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றிய காலத்திலிருந்தே தோன்றிய பகை இன்று அவனையே அழித்து விடும்படி ஒற்றர்களை ஏவும் அளவுக்கு வளர்ந்திருந்தது. இந்த அரசியல் அந்தகாரத்திலே சிந்தை தடுமாறிச் செய்வதொன்றறியாது திகைத்தான்.

இன்பங்களோ தொடர்ந்து வருவதில்லை. துன்பமோ துணையின்றி வருவதில்லை. நாட்டின் நலத்தை உத்தேசித்தும், தனது மகுடத்தைக் காக்கும் பொருட்டும் அவன் சிங்களத்துடன் போரிட நேர்ந்தது. புலியானது குட்டியாக இருந்தாலும் வீரத்தில் குறைவதில்லை. கரிகாலன் இளைஞன் ஆயினும் போரைத் திட்டமிட்டு நடத்தினான். வெற்றி வாகை சூட ஏற்ற வழிகளை அமைத்துக் கொண்டான். தமிழ்த் தாய் மாதவம் செய்து பெற்ற கரிகாலன் சிங்களத்தை வென்று வெற்றி மாலை சூடினான். தமிழ்ப் பெருமகனின் வீரத்துக்கு மண்டியிட்ட பல்லாயிரக் கணக்கான சிங்களவரைக் கைது செய்தான். தனது வெற்றிக்கு அடையாளமாகப் போர்க் கைதிகளை அடிமைகளாகத் தாயகத்துக்கு அழைத்து வந்தான்.

அடிமைகளின் சிறைக் கோட்டம் நிரம்பி வழிந்தது. சோழ நாட்டு உணவை உண்ட சிங்களவரின் உடலிலே குறும்பு குடிகொண்டது. அன்றாடம் ஏதாவது கலகம் செய்து கொண்டே இருந்தனர். அடிமைகளின் பிரச்னை கரிகாலனுக்குத் தலைவலியைத் தந்தது.

ஓரிரு நாட்கள் கடந்து விட்டன. சிங்கள அடிமைகளுக்குப் போரில் பயிற்சி அளிக்கப்பட்டு வந்தது. பயிற்சி அளிப்பதில் சேனாதிபதி கருணாகரன் மும்முரமாக ஈடுபட்டிருந்தான். அவனது தீவிரப் பயிற்சியைப் பார்த்தவர்கள் கூடியவிரைவில் ஏதோ ஒரு போர் நடைபெறக்கூடும் என்று எண்ணும் அளவுக்கு இருந்தது. அவன் அறிந்திருந்த எல்லாப்போர் முறைகளையும் கூடிய விரைவிலேயே பயிற்றுவிக்கத் திட்டமிட்டிருந்தான். சிங்கள அடிமைகளும் மிக்க உற்சாகத்துடன் விளங்கினர். அடிமைகள் அவனை ஆண்டவனாக மதித்து, அவன் ஆணைக்கு அடிபணிந்தனர். கரிகாற் சோழ மன்னன் சேனாதிபதியின் அருந்தொண்டினைப் பாராட்டினான்.

**''அ**ரசே! அழைத்ததாகச் செய்தி வந்தவுடனே ஓடோடி வந்தேன். கட்டளை இடுங்கள். செய்து முடிக்கச் சித்தமாயிருக்கிறேன்'' என்றான் சேனாதிபதி கருணாகரன் சோழனிடம்.

''கருணாகரரே! நமது சிறைக் கோட்டவாயிலினருகே இளம் வாலிபன் ஒருவன் அடிக்கடி காணப்படுகிறான். அவன் ஒருவேளை சிங்கள நாட்டு ஒற்றனாக இருப்பானோ என்ற ஐயம் எனக்கு எழுகிறது. அவனைக் கண்காணிக்கும்படி கூறவே மன்னர்பிரான் உம்மை அழைத்திருக்கிறார்'' என்றார் அமைச்சர் கள்ளர்பிரான்.

''ஆம், கருணாகரா! இந்த விஷயத்தை அமைச்சரே நமக்குக் கூறினார். சிங்கள நாட்டின் ஒற்றர்கள் நமது நாட்டில் அதிகம் உலவுவதாக நமது ஒற்றர்படைத் தலைவர் கூறினார். நமது ஒற்றர்களையும் அதிகப்படுத்தியுள்ளேன். நாம் அதிஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கவனமாக இருந்து, அந்த வாலிபனைச் சிறை செய்துவிடு'' என்றான் மன்னன்.

''மன்னவா! சோழ மண்ணுக்காகவே இந்த உடல் அர்ப்பணம் செய்யப்பட்டது. தங்கள் துன்பம் என் துன்பம். ஐயம் ஏற்படுமளவுக்கு நடந்து கொள்ளும் எல்லோரையும் கைது செய்வேன். ஒற்றர் எனத் தெரிந்தால் உயிருடன் போகவிட மாட்டேன். அமைச்சர் குறிப்பிட்ட வாலிபனையும் கூடிய விரைவில் கைது செய்து தங்கள் முன் கொண்டு வந்து நிறுத்துவேன்'' என்று உணர்ச்சியுடன் பேசி முடித்தான் கருணாகரன்.

''சரி, நீ போகலாம், கருணாகரா! கடமையில் கண்ணாயிரு!'' என்று அவனுக்கு உத்தரவிட்டான் சோழன்.

''அப்படியே மன்னவா! தங்கள் உத்தரவு'' என்று கம்பீரத்துடன் கூறிவிட்டுக் கருணாகரன் வெளியேறினான்.

''அமைச்சரே! தளபதியின் சேவை உணர்ச்சியைக் கவனித்தீர்களா? இத்தகைய தளபதி கிடைக்க நாம் கொடுத்து வைத்திருக்க வேண்டும்'' என்றான் சோழன்.

''ஆமாம்! கொடுத்து வைத்திருக்கத்தான் வேண்டும்!'' என்று அழுத்தம் கொடுத்து அரசனின் கருத்தை ஆமோதித்தார் அமைச்சர் கள்ளர் பிரான்.

**அ**ரசனும், அமைச்சரும் தங்கள் கவலைகளையெல்லாம் மறந்து சதுரங்கம் விளையாடுவதில் லயித்திருந்தனர். அவர்களது இஷ்டப்படி காய்களை நகர்த்திக் கொண்டனர். ஆனால் அவர்கள் வாழ்க்கை யென்னும் சதுரங்கத்

# மலரின் புதுமையுடனும்
# மலரின் எழிலுடனும்
# விளங்குங்கள்

டாடாவின்

# ஹமாம்

டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்




தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

SISTA'S-TOM-37-TAM

தில் அவர்களது இஷ்டப்படி. எல்லாம் நடக்கிறதா என்ன?

திடீரெனத் தளபதி கருணாகரன் அரசனின் தனியறையினுள் நுழைந்தான். மன்னனின் அறையினுள் தளபதியேயானாலும் நுழைய அனுமதி பெற வேண்டும் என்பதை மறந்து ஓடிவரும் அளவுக்கு என்ன அவசரம் வந்து விட்டது அவனுக்கு?

"அரசே! சொன்னபடியே செய்து முடித்து விட்டேன். அமைச்சரின் சந்தேகம் உண்மையானதே! அந்த இள வாலிபன் சிங்கள நாட்டின் ஒற்றனே!"

"ஆகா! நீயே நம் நாட்டுக்கு உகந்த தளபதி! எங்கே அந்த ஒற்றன்? போரிலே தோற்றுப் புறமுதுகு காட்டி ஓடிய அந்தச் சிங்கள மன்னனின் ஒற்றன் எங்கே?" என்று ஆவலுடன் கேட்டான் சோழன்.

சில விநாடிகள் கடந்தன. கருணாகரன் முன்னே வர, இரு காவலர்கள் பக்கத்தில் வர, உடல் முழுவதும் கறுப்பு அங்கியாலும் முகத்தை முகமூடியாலும் மறைத்துக் கொண்டு வந்தான் அந்த ஒற்றன்.

"மன்னவா! இவன்தான் அந்த ஒற்றன். இரவு இரண்டாம் ஜாமத்தில் உடலையும், முகத்தையும் மறைத்துக் கொண்டு பதுங்கிப் பதுங்கிக் கோட்டைச் சுவர் ஓரமாகச் சென்று கொண்டிருந்தான். இந்த இரு காவலரும் இவனைப் பார்த்து வந்து என்னிடம் கூறினார்கள். நான் உடனே சென்று இவனைக் கைது செய்து வந்தேன். இவனை இப்பொழுதே ஊர் நடுவில் கழுவிலேற்ற வேண்டும். நாட்டில் நமக்குத் தெரியாமல் ஒளிந்து திரியும் ஒற்றர்களுக்கு இவன் மரணம் ஒரு பாடமாக அமையும்" என்று ஆவேசத்துடன் பேசினான் கருணாகரன்.

"இந்தச் சிறுவனா ஒற்றன்! இவனுக்கு என்ன நுணுக்கம் தெரியும். ஒற்றர் தொழில் புரிய?" என்று வியந்தான் சோழன்.

"அரசே! கடுகு சிறுத்தாலும் அதன் காரம் போகாதாம்! இந்தப் பொடியன் பெரும் நெஞ்சழுத்தக்காரன். இவனை விசாரித்தறிய முயன்றேன். ஒன்றுமே பேசாதிருந்தான். வாயைத் திறக்கவேயில்லை. என்னால் முடிந்தவரை மிரட்டியும் அடித்தும் பார்த்தேன். ஒன்றும் பயனில்லை. இவனது அங்கியையும், முகமூடியையும் களைய முயன்றேன். இவன் உயிரைக் களைந்தால்தான் இவன் முகமூடியைக் களைய முடியும் போலிருக்கிறது. முகமூடியைத் தொடவே இவன் இடம் கொடுக்கவில்லை" என்றான் கருணாகரன்.

"இந்த அற்பப் பதருக்கு அவ்வளவு திமிரா? இதோ, அவன் வேஷத்தை நானே வெளிப்படுத்துகிறேன்" என்று ஆவேசத்துடன் சென்றார் அமைச்சர் கள்ளர்பிரான்.

முகமூடி ஒற்றன் திடீரென அமைச்சர் கால்களில் விழுந்து, தனது முகமூடியைத் தயவு செய்து கழற்ற வேண்டாமென்று சமிக்ஞை மூலம் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். ஆனால் அமைச்சர் அவனது வேண்டுகோளைப்பொருட்படுத்தாது அவன் முகமூடியையும், அங்கியையும் களைந்து விட்டு அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

அந்த முகம் அங்கிருப்பவர்களுக்கெல்லாம் தெரிந்த முகம். ஐயோ! அந்த முகம்......

அவர் பெற்றெடுத்த செல்வத்தின் முகம்! அந்த ஒற்றன் அமைச்சர் கள்ளர்பிரானின் ஒரே மைந்தன் பார்த்திபன்தான். நாட்டின் நலமே தன்னலம் என்று நகரத் தெருக்களில் முழங்கும் பார்த்திபன்தான் சிங்களவர்களின் கைக் கூலி! தாய் நாட்டையே காட்டிக் கொடுக்கத் துணிந்த துரோகி!

''பார்த்திபா! இதற்குத்தானா இவ்வளவு நான் அரும் பாடுபட்டு உன்னை வளர்த்தேன்? பிறந்தவுடனேயே பெற்றதாயை விழுங்கி விட்டாய். வளர்ந்தவுடனே பிறந்த தாயகத்தை மாற்றான் விழுங்க வழிகாட்டுகிறாய். அட, பாவி! நம்மை அழிக்க நீயே புறப்பட்டு விட்டாயா? கேவலம் பொன்னுக்கும் பொருளுக்கும் ஆசைப்பட்டா இந்த ஈனத் தொழிலைச் செய்தாய்? இந்தப் பாபாத்மாவின் உடலைத் துண்டு துண்டாக வெட்டி அதைக் காக்கைக்கும் கழுகுக்கும் இரையாகப்போடுங்கள்'' என்று பீறிட்டு வரும் அழுகையை அடக்கித் தட்டுத் தடுமாறிப் பேசினார் கள்ளர்பிரான்.

''வேலியே பயிரை மேய்ந்த கதையாக இருக்கிறதே. அமைச்சர் மகனே ஒற்றனாக மாறி விட்டால் நாடு சுடுகாடாக வேண்டியது தான். பார்த்திபா! என்ன நாடகம் இதெல்லாம்?'' என்றான் சோழன்.

''அரசே! இந்த நாடகத்தில் பார்த்திபன் மட்டுமல்ல, கனம் அமைச்சர் கள்ளர்பிரான் அவர்களும் பாத்திரமேற்று நடிக்கிறார் என்று எண்ணுகிறேன்'' என்று ஆணவத்துடன் பேசினான் கருணாகரன்.

''என்ன, அமைச்சரே குடிகெடுக்கும் வேலையிலே சேர்ந்து விட்டாரா? இந்த உலகத்திலே எங்குமே உண்மையில்லையா? வாழ்க்கையே வெறும் கானல் நீர்தானா?'' என்று மனம் நொந்து பேசினான் சோழன்.

''மன்னா! உண்மை ஒருகாலும் அழியாது. அமைச்சரின் உண்மை வேஷம் இப்பொழுது தான் நமக்குப் புரிகிறது'' என்று எதையோ கண்டு பிடித்தவனைப் போல வீறுப்புடன் பேசினான் கருணாகரன்.

''அரசே! என்னைத் துரோகி என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? என் உடம்பின் ஒவ்வொரு அணுவும் உங்கள் நலத்தையும் நாட்டின் நலத்தையுமே விழைவன. மன்னா! உயிரை விட எனக்கு மானமே பெரிது. அரசே! என் மகனே துரோகியாக மாறிவிட்டான் என்று எனக்குத் தெரிந்தால் நான் 'ஒற்றன் ஒருவன் இரிகிறான்' என்று உங்களிடம் கூறியிருப்பேனா? இவன்தான் ஒற்றன் என்று நான் அறிந்திருந்தால் அவ்விடத்திலேயே இவனைக் குழி தோண்டிப் புதைத்திருக்க மாட்டேனா? அரசே! என்னை நம்புங்கள்!''

''ஆகா, பாராட்டத்தக்க நடிப்பு! சிங்கள மன்னன் மிக்க திறமையுடன் நடிக்கச் சொல்லித் தந்திருக்கிறான். அரசே! இவரிடம் நமக்கென்ன பேச்சு? விசாரித்துத் தீர்ப்பு வழங்குங்கள்'' என்று கருணாகரன் கூறினான்.

''பார்த்திபா! இதுவரையிலும் சிங்கள மன்னனுக்கு என்னென்ன செய்திகள் அனுப்பியிருக்கிறாய்?'' என்று கரிகாலன் கேட்டான்.

பார்த்திபன் பேச முயன்றான். ஆனால் பேச்சு வெளி வரவில்லை. ஏதோ சமிக்ஞைகளைச் செய்தான்.

"பார்த்திபா! ஊமையாக நடிப்பதில் பயன் இல்லை. உண்மையைச் சொல்" என்று கோபக் கனல் பறக்கக் கூவினான் கரிகாலன்.

"பார்த்திபா! சொல்லடா!" என்று கர்ஜித்தான் கருணாகரன்.

பார்த்திபன் பேசவேயில்லை. ஆனால் அவன் கண்கள் மட்டும் தாரை தாரையாகக் கண்ணீரைச் சொரிந்துகொண்டே இருந்தன.

"பார்த்திபா! உன்வேஷம் கலைந்தும் ஊமையாக நடிக்கிறாயா? வாய்மூடி மௌனியாக இருப்பதில் பயனில்லை. என்னென்ன செய்திகள் அனுப்பியுள்ளாய் என்பதை மட்டும் கூறிவிடு. மன்னர்பிரான் உன்னை மன்னித்தாலும் மன்னித்து விடுவார்" என்று நயமாகப் பேசினான் கருணாகரன்.

"மன்னிப்பா? இவனுக்கா? அது மட்டும் நடவாது. சரி; இவனைச் சோதித்துப் பார். ஏதாவது இரகசிய ஓலை வைத்திருப்பான்!" என்றான் கரிகாலன்.

கருணாகரன் பார்த்திபனைச் சோதித்தான். கடைசியில் அவனது கறுப்பு அங்கியில் செருகப்பட்டிருந்த ஒரு ஓலையை எடுத்தான். அரசனிடம் கொடுத்தான். கரிகாலன் அதைப் படித்துவிட்டுத் திடுக்கிட்டுத் தன் கழுத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டான். காரணம் ஓலையின் வாசகம்தான். "கரிகாலனைக் கொலை செய்து, அவன் முண்டத்தைக் காவிரியில் விட்டு விடு. தலையை உன்னுடைய ஆள் வசம் நமக்கு அனுப்பு!"

"இவனை நாளை சூரியோதயத்தில் கழுவிலேற்றுங்கள்!"—கரிகாலன் ஆணை இது.

"அரசே! அமைச்ச..." என்று பயத்துடன் கூறினான் கருணாகரன்.

"அமைச்சர்! ஹூம். அவனையும் கழுவில் ஏற்று......வேண்டாம். வேண்டாம். அவனைச் சிறையில் இடுங்கள். பிறகு கவனிப்போம்" என்று கூறிவிட்டுப் படுக்கையில் போய் வீழ்ந்தான் கரிகாலச் சோழன்.

**நா**ட்கள் சில கடந்து விட்டன. அமைச்சர் கள்ளர்பிரான் இல்லாமையால் அரசியல் நிர்வாகம் முழுவதும் தடைப்படுவதை உணர்ந்தான் கரிகாலன். அவரைச் சிறையிலிருந்து விடுவித்துப் பழையபடியே அமைச்சராக்கிக் கொள்ளலாமா என்று கூட எண்ணினான். மகன் செய்த குற்றத்துக்காகத் தந்தையை ஏன் வருத்த வேண்டுமென்று எண்ணினான். ஆனால், அடுத்த நிமிடமே அவன் எண்ணம் மாறியது. தன்னுயிரையே விலை பேசிக் கூலி வாங்கிய துரோகியைப் பெற்றெடுத்தவனைத் தன்னுடைய அமைச்சர் பதவியிலே இருத்துவதா? ஒருபுறம் கள்ளர்பிரானின் அறநெறியும், நாட்டுப் பற்றும், மன்னன் நலம் பேணும் பெருந்தன்மையும் அவன் கண் முன்னே வந்து நின்றன. மறுபுறம் அவர் ஒரு ஒற்றனின் தந்தை என்பதும் அவன் நினைவுக்கு வந்தது. ஒரு முடிவுக்கும் வரமுடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பாய்த் தவித்தான். அவரை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் பொறுப்பை மக்கள் மன்றத்துக்கே விட்டுவிடுவதென்ற முடிவுக்கு வந்தான்.

மறுநாளே மக்கள் மன்றம் கூட்டப்பட்டது. சிறையிலேவாடிய கள்ளர்பிரான் மன்றத்தினர் முன்புநிறுத்தப்பட்டார். மன்றத்தினர் கேட்ட கேள்விகளுக்கு மட்டுமே அவர் பதில் சொன்னார். தாம் நிரபராதி என்றோ, குற்றவாளி என்றோ கூறிக் கொள்ளவில்லை. விசாரணை முடிந்தது. தீர்ப்பு வழங்கப்பட்டது. தீர்ப்பின்படி கள்ளர்பிரான் நாடு கடத்தப்பட்டார். கள்ளர்பிரானின் பிரிவால் அரசியல் பொறுப்புக்கள் யாவும் கரிகாலன் தலையில் வந்து விழுந்தன. ஓய்வு ஒழிச்சலின்றி எல்லாக் காரியங்களையும் அவனே கவனித்தான். தனக்கெதிரான சதிக் கூட்டத்தினரையும், வேற்று நாட்டு ஒற்றரையும் ஒழித்து நாட்டில் அமைதியை நிலைநாட்டப் பெரிதும் முயன்றான். அவன் அடிமை கொண்ட சிங்கள அடிமைகளோ அவனுக்கு அடிக்கடி தொல்லை தந்து வந்தனர்.

"**ம**ன்னர் மன்னவா! இதைத் தங்களிடம் சமர்ப்பிக்குமாறு நாட்டின் எல்லைப்புறத்திலிருந்து ஒரு பெரியவர் என்னிடம் கொடுத்தார்" என்று ஒரு ஓலைக்கவடியைக் கரிகாலனிடம் கொடுத்தான் ஒரு சேவகன்.

கரிகாலன் கவடியைப் பிரித்து அதனுள் இருந்த ஓலைகளைப் படிக்க ஆரம்பித்தான்.

"மதிப்புக்குரிய 'மன்னர்பிரான் அவர்களுக்கு" என்ற எழுத்துக்களைப் பார்த்தவுடன் அமைச்சர் கள்ளர்பிரானின் உருவம் அவன் கண் முன்னர் வந்து நின்றது. ஆம்! அந்த ஓலையை அவனுக்கு எழுதியவர் நாடு கடத்தப்பட்ட அந்த நல்லவர்தான்.

கரிகாலன் கடிதத்தைத் தொடர்ந்து படித்தான்.

''மன்னவரே! இன்றையச் சோழ நாட்டின் அரசியல் நிலை உங்கள் திறமையால்தான் சீர்ப்படவேண்டும். உங்கள் உயிருக்கும், மகுடத்துக்கும் எந்த வினாடியும் ஆபத்து நேரலாம். அரசே! தங்களை வியப்பில் ஆழ்த்தும் ஒரு விஷயத்தைக் கூறப் போகிறேன். நானும் என் பார்த்திபனும் உண்மையின் கண்களுக்கு நிரபராதி. ஆம்! நான் பெற்றெடுத்த செல்வம் ஒற்றன் அல்ல. பிறந்த பொன்னாட்டுக்காகத் தன்னைத்தானே தத்தம் செய்து கொண்ட தியாகமூர்த்தி. அவனது சோக வரலாற்றை அறிந்தால் உங்கள் மனம் உருகும்.



பார்த்திபன் பிடிபடுவதற்கு முதல் நாள் இரவு திடீரென்று சிறைக் கோட்டத்தின் அருகில் போனான். அங்கே, சிறைக் கோட்டத்தின் மதிற் சுவரின் அருகே உடலை அங்கியால் மறைத்திருந்த ஒருவன், இன்னொருவனுடன் மிகவும் சன்னமான குரலில் பேசிக்கொண்டிருந்தான். ஒருவன், மற்றொருவனிடம் ஏதோ சில ஓலைகளைக் கொடுத்தான். அவர்களது இரகசிய நடவடிக்கை பார்த்திபனது உள்ளத்தில் ஐயத்தை எழுப்பியது. மறைந்து மறைந்து சென்று அவர்களது பேச்சை உற்றுக் கேட்டான். அவர்களது சம்பாஷணையிலிருந்து அவன் சந்தேகம் உறுதியாயிற்று! ஆம், அவர்கள் சிங்களநாட்டு ஒற்றர்கள்தான்.

பார்த்திபன் திடீரெனப் பாய்ந்து ஒற்றன் கையிலிருந்த ஓலைகளைக் கைப்பற்றினான். பார்த்திபனின் திடீர்த் தாக்குதலை எதிர்பாராத அவர்கள் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தனர். எவ்வளவு பலசாலிகளாக இருந்தாலும் இருவரை ஒருவன் எதிர்கொள்ள முடியுமா? இருவரின் ஒருமித்த தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பார்த்திபன் அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டான். பார்த்திபன் பிடிபட்டவுடன் ஒற்றர்களில் ஒருவன் ஓடி விட்டான். இன்னொருவன் பார்த்திபனை இழுத்துக் கொண்டு நமது சிறைக் கோட்டத்ினுள் நுழைந்தான்.

என்ன, சிங்கள நாட்டு ஒற்றன் நமது சிறைக் கோட்டத்தினுள் அமைச்சர் கள்ளர் பிரானின் ஒரே மகன் பார்த்திபனை இழுத்துச் செல்ல எவ்வளவு மனத்துணிவுகொண்டவனாக இருக்கவேண்டுமென்று திகைக்கிறீர்களா? அத்துணை மனத் துணிவு நமது சேனாதிபதி கருணாகரனுக்கு இருக்காதென்று நீங்கள் ஐயுறுகிறீர்களா? என்ன திகைக்கிறீர்கள், மன்னவா! சிங்கள நாட்டு ஒற்றனுக்குக் கையாள் கருணாகரன்தான். அரசே! இப்பொழுதாவது உண்மையை உணருங்கள். பார்த்திபன் துரோகி அல்ல. கருணாகரன் தான் சதிகாரன்.

கருணாகரன்தான் ஒற்றனின் வலக்கரம் என்பதை உணர்ந்த பார்த்திபன் திடுக்கிட்டு விட்டான். ஆத்திரம் தாளாது அவனை ஏசினான். 'நாட்டுக்கு இந்த நயவஞ்சகனா சேனாதிபதி' என்று கேட்டான். உடனே அரசனிடம் சென்று அவனுடைய சதிச் செயலை அம்பலப்படுத்துவதாகக் கூறினான். விஷயம் வெளி வந்தால் விபரீதம் ஏற்படுமே என்று கருணாகரன் திகைத்தான். இதை யாரிடமும் கூறவேண்டாமென்று பார்த்திபனைக் கெஞ்சினான். சிங்கள மன்னன் உதவியுடன் அவன் சோழ அரியாசனம் ஏறும்போது அமைச்சர் பதவி அளிப்பதாகவும் ஆசை காட்டினான். உயிர்மீது ஆசை இருந்தால் விஷயம் வெளியே வரக் கூடாது என்று மிரட்டினான். ஒரு துரோகியின் கணக்கைத் தீர்த்துக் கட்டத் தன்னுயிரையும் இழக்கச் சம்மதம் என்று முழங்கினான் பார்த்திபன்.

கருணாகரன் சிந்தித்துப் பார்த்தான். தன் உயிரையும் பதவியையும் காக்கப் பார்த்திபனை அழிக்கவும், அவனது திட்டங்களுக்கு எதிராக இருக்கும் என்னை விரட்டவும் ஒரு வழியைக் கண்டு பிடித்தான். ஒரே கல்லில் மூன்று கனியை வீழ்த்தும் வீராதி வீரனுகி விட்டான். உள்ளத்தில் உறைந்து கிடக்கும் உண்மையை உரைக்க உதவி செய்வது எது? நாவு. அந்த நாவினையே அறுத்தெறிந்து விட்டால்......... திட்டம் செயல்படுத்தப்பட்டது. முடிவு...? பார்த்திபன் நாவினை இழந்தான். உண்மையை உலகுக்கு உணர்த்த முடியாமல் போய் விட்டதே என்று அலறினான் பார்த்திபன். நாவிழந்த பார்த்திபனுக்கு முகமூடியையும், அங்கியையும் தந்து, சிங்களவன் கருணாகரனுக்கு அனுப்பிய ஓலையையும் அங்கியிலே செருகித் தங்கள் முன் ஒற்றனாக நிறுத்தி, என் மீதும் அவநம்பிக்கையை உண்டாக்கித் தனது இன்பமயமான மனோ ராஜ்யத்துக்கு அஸ்திவாரமிட்டுக் கொண்டான் கருணாகரன். ஊமையாக்கப்பட்ட உத்தமன் கழுவில் ஏற்றப்பட்டான். நானும் சிறையில் அடைக்கப்பட்டேன். உண்மைக்குத் திரை போடப்பட்டது. ஆனால் உண்மையை உரைக்கவல்ல பார்த்திபனின் சமிக்ஞைகளை நாம் புரிந்து கொண்டிருந்தால்......

அரசே, உண்மையா கற்பனையா" என்று திகைக்கிறீர்களா? இது உண்மைதான். உண்மையை உலகில் யாராலும் திரையிட்டு மறைக்க முடியாது. எனக்கு இதெல்லாம் எப்படித் தெரியுமென்று கேட்கிறீர்களா?

நாவிழந்து, சூரியோதயத்தில் உயிரை இழக்க வேண்டிய பார்த்திபன், தான் நிரப

"பழைய பாக்கியை வசூல் செய்ய நீங்க ஏன் போகணும்? பேசாமல் இரண்டு குமாஸ்தாவைப் போடக் கூடாதோ?"



"அட! குமாஸ்தாவைத்தான் போட்டிருந்தேன்! இப்ப அந்தக் குமாஸ்தாவிட மிருந்து வசூல் செய்யத்தான் நான் புறப் படுகிறேன்!......"

ராதி' என்று தங்களுக்குக் காட்ட நடந்த நிகழ்ச்சிகள் யாவற்றையும் ஓலைகளில் எழுதி, சிங்கள நாட்டு ஒற்றனுக்குக் கருணாகரன் கொடுத்த ஓலையையும் அத்துடன் இணைத்துச் சிறைக் கைதி ஒருவனிடம் கொடுத்த பின்பே இவ்வுலகை விட்டுச் சென்றான். மறுநாளே சிறையில் என்னைக் கண்ட அந்தக் கைதி அவைகளை என்னிடம் தந்தான். படித்து, உண்மையை உணர்ந்து, நாட்டின் நலத்துக்காகத் தன்னையே தத்தம் செய்த கர்மவீரனை மகனாகப் பெற்றெடுத்த பெரும் பாக்கியத்தை நினைந்து நினைந்து உளமகிழ்வு கொண்டேன். எனக்கு உண்மையை உணர்த்திய ஓலைகளையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். படித்துவிட்டுப் பார்த்திபனைப் பாராட்டுங்கள்.

அரசே! கருணாகரன் சிங்கள மன்னனுக்கு என்ன ஓலை அனுப்பியிருக்கிறான், பார்த்தீர்களா? சிறைவாழ் சிங்களவருக்கு நல்ல போர்ப் பயிற்சி அளிப்பதாகவும், அடுத்த மாதம் போர் தொடுக்க ஏற்ற சமயம் என்றும் எழுதியிருக்கிறான். சிங்கள அடிமைகளுக்குப் போர்ப் பயிற்சி அளிக்க வேண்டுமென்று அவன் வற்புறுத்திக் கூறியதின் காரணத்தை இப்பொழுதாவது உணருகிறீர்களா?

அரசே! தீயவை நடக்கவொட்டாது தடுக்க இன்னும் நமக்குக் காலம் இடம் தருகிறது. நல்லவனாக நடிக்கும் நயவஞ்சகன் கருணாகரனை முதலில் கைது செய்யுங்கள். தங்களுக்கெதிராகவும், சிங்கள மன்னனுக்கு உற்ற துணையாகவும் உங்கள் கண் எதிரிலேயே சிங்கள அடிமைகளுக்குக் கொடுக்கப்படும் போர்ப் பயிற்சியை நிறுத்துங்கள். நமது படைகளைப் பலப்படுத்துங்கள்.

போர்ப் பயிற்சியை நிறுத்தியவுடன் சிங்களவர்கள் பெரும் கலகம் செய்வார்கள். 'போர் மூளும், நம் மன்னனுக்கு உதவி புரிவோம், கரிகாற் சோழன் புறமுதுகு காட்டி ஓடுவான், அடிமை வாழ்வு நீங்கும், இன்பம் நல்கும், தாயகம் திரும்புவோம்' என்றெல்லாம் கனவு காணும் அடிமைகள், 'உண்மை மன்னனுக்குத் தெரிந்துவிட்டது, நம் அடிமை வாழ்வு நீங்கப் பெறுவதில்லை,' என்றெண்ணிக் கொதித்தெழுவர். அவர்களது கிளர்ச்சியைத் திறமையுடன் அடக்க வேண்டும். அவர்களது உடல் உழைப்பை உறிஞ்ச வேண்டும். அப்பொழுது தான் அவர்கள் நமக்கு அடங்கி நடப்பர். அவர்களது உழைப்பினால் நாட்டுக்கு நல்ல பணிகள் பல செய்யலாம். அத்தகைய நல்ல திட்டம் ஒன்றைக் கூறுகிறேன், கேளுங்கள்.

கரிகாற் சோழரே! நீர் உயர நெல் உயரும், நெல் உயரக் குடி உயரும், குடி உயரக் கோன் உயருவான் என்பதைத் தாங்கள் அறிவீர்கள்; தங்கி நிற்க இடமில்லாது காட்டுப் போக்கிலே புரண்டு வீணாகும் காவிரியின் நன்னீரைத் தேக்கி வையுங்கள். தேங்கிய காவிரியின் கரை உடைந்து, வெள்ளம் பெருகிப் பயிர் பாழாகா வண்ணம் காவிரிக்குக் கரையினை எழுப்புங்கள். சோழ நாட்டை இந்தத் திட்டத்தால் சொர்க்க பூமியாக மாற்றுங்கள்.

காவிரிக்குக் கரையும் அணையும் கட்டச் சிங்கள அடிமைகளின் உடல் உழைப்பைப் பயன்படுத்துங்கள். கலகம் செய்யும் அடிமைகளின் திமிரும் அடங்கும். உங்கள் தொல்லையும் தீரும். நாட்டுக்கு நன்மையும் ஏற்படும். கரையும் அணையும் கட்டிக் காவிரிக்கு உருவும் திருவும் நல்கிய கரிகாற் சோழன் என்ற பெயரைத் தமிழகத்து வரலாற்றிலே பதியும் படி பணியாற்றுங்கள்.

அரசே! தங்களது பொன்னான நேரத்தை என் ஓலையால் வீணாக்கிவிட்டது குறித்து என்னை மன்னித்தருள வேண்டும். கடைசியாக ஒரே ஒரு விஷயம். பெற்ற மகனும் போய்விட்டான். பிறந்த பொன்னாடும் என்னை உதறிவிட்டது. ஆகவே இனியும் நான் வாழ்வதில் பயனில்லை. அதனால் பாபங்களில்மிகப் பெரிய பாபமான தற்கொலைக்குத் துணிந்து விட்டேன். என்னை நீங்கள் பார்க்க வேண்டுமென்றால் நம் நாட்டின் எல்லைப்புறத்திலே பிணமாகக் காணலாம்.

தாய் நாட்டைப் பிரிந்து வாழ முடியாத,

**கன்னர்பிரான்"**

ஓலையைப் படித்து முடித்த கரிகாலனின் கண்கள் நீரைச் சொரிந்தன.

**கா**லச் சக்கரம் வேகமாக உருண்டோடியது. இரவு பகலாக ஓய்வு ஒழிச்சலின்றிப் பாடுபட்டதன் பயனாக, கண்டவர் வியக்கும் அணை உருவாகியது. அணைத்திறப்பு விழாவும் நடந்தது. தன் உள்ளத்தில் நீக்கமின்றி நிறைந்துவிட்ட கன்னர்பிரானின் நினைவாகத் தம்மையும் தம் செல்வனையும் நாட்டுக்காகத் தியாகம் செய்த கன்னர்பிரானின் நினைவாக, அணை கட்டி முடிக்க ஆதி காரணகர்த்தாவான அமைச்சர் கன்னர்பிரானின் நினைவாக அணைக்குக் "கன்னர் அணை" எனப் பெயரிட்டான். கன்னர்பிரானின் பெயரை ஒவ்வொரு தமிழ் நாவும் உச்சரித்து மகிழ்ந்தது. நாளடைவில் கன்னர் அணை கல்லர் அணையாக மருவிக் கல்லணையாக மாறிவிட்டது.



'ஓடித் தப்பித்துக்
கொள்ளுவோம்!
அவர்கள் **ப்ளிட்**
அடிக்கிறார்கள்!'








**ப்ளிட்**

**... ஸ்டான்வாக்**
**கம்பெனியால் வழங்கப்படுகிறது**

ஸ்டான்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

Y. 6482

# காால்கேட் குளோரோபில் டூத் பவுடர்

வெளியிடுகிறது

## வீரிய குளோரோபிலின் பூரணநன்மைகள்




வீரிய குளோரோபில்தான் உங்களுக்கு நன்மைதரவல்லது!

வாயில் தோன்றும் துர் நாற்றத்தை ஒழிக்கிறது. அதி துரிதமாக, பூர்த்தியாகச் செயலாற்றுகிறது! வாய்க்குப் புதிய நறுமணத்தைத் தருகிறது!

பற்கள் சொத்தையாகாமல் காக்கிறது! சொத்தையாக்கும் காரணம் என பல் டாக்டர்களால் கருதப்படும் தீய அமிலங்களை ஒழிக்கிறது!

ஈறுகளை பலப்படுத்துகிறது! உங்கள் ஈறுகளைப் பாதுகாக்க குளோரோபிலின் தீவிர நன்மைகளைத் தருகிறது.

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

---




## ஒன்றல்ல 17 மயக்கும் மணங்கள் உங்களுக்கு கிறுகிறுப்பும் புளகாங்கிதமும் தரும்!




வெறியூட்டும் 17 லெண்டுகளின் அற்புதக் கலவை சேர்ந்த பாமாலிவ் டால்கம் டீ லக்ஸின் நறுமணம் உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம் அடையச் செய்யும்... மணிக்கணக்காக உங்களுக்கு குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கும்!

### டால்கம் டீ லக்ஸ்

உண்மையில் உயர்ந்த டால்க்... வீட்டிலுள்ள அனைவருடைய சுகத்திற்கும் சுகாதாரத்திற்கும்... குழந்தைக்கும்கூட!




"சரஸா!"

பதில் காணோம்.

"ஏ! சரஸ்வதி! கூப்பிடுவது உன் காதில் விழவில்லை......?"

மீண்டும் மௌனம்.

"நான் கூப்பிடுகிறேன், அரை நாழிகையாக! அத்தனை அலட்சியமா?" என்று கோபத்துடன் இரைந்துகொண்டே எழுந்து, சமையலறைப் பக்கம் சென்றான் முத்துகிருஷ்ணன்.

சரஸா தன் மடியில் அந்தக் கிளியை வைத்துக் கொண்டு கொஞ்சிக் கொண்டிருந்தாள். கணவன் கோபத்துடன் எதிரில் நிற்பதையும் கவனியாமல், கொஞ்சலில் ஈடுபட்டிருந்தாள்.

"பேஷ்! கொஞ்சுவது நன்றாயிருக்கிறது! உன் அருமைக் கிளியுடன் கொஞ்சுவதற்கு வேண்ட, சமயம் கிடையாதா? எத்தனை நேரமாகக் கூப்பிடுகிறேன்" என்று படபடப்புடன் பேசின தன் கணவனைக் கண்டு, பரபரப்புடன் எழுந்தாள்.

"அடடா! என்னைக் கூப்பிட்டீர்களா! என் கண்ணனுடன் குலாவிக் கொண்டிருந்ததில், என் காதிலே விழவில்லை. மன்னித்து விடுங்கள். கண்ணு! நீயும் மன்னிப்புக் கேளடா!" என்று குழைந்து, குழைந்து கூறினாள். அவளுடைய செல்லக் கிளி அவளுடைய தோளில் தாவி ஒய்யாரமாய் உட்கார்ந்து கொண்டது.

"சரஸா! மீண்டும் எச்சரிக்கை செய்கிறேன். இந்தச் சனியனை நீ அப்புறப் படுத்தாத வரையில் எனக்கு மன நிம்மதி ஏற்படாது. என்னை நீ மிகவும் அலட்சியம் செய்யத் தொடங்கி விட்டாய், இது வந்ததிலிருந்து" என்று ஆத்திரத்துடன் கூறிவிட்டு வெளியே வந்தான் முத்துகிருஷ்ணன்.

அவனைப் பின் தொடர்ந்து வந்த சரஸா, "நன்றாய்ச் சொன்னீர்கள்! என் கண்ணனைப் பார்த்துச் சனியன் என்று சொல்ல உங்கள் மனம் எப்படித் துணிந்தது? இதன் அழகைத் தான் பாருங்கள்! இதன் உடலைத் தடவிப் பாருங்கள், எத்தனை மிருதுவாய் இருக்கிறது என்று. பசி, தாகம் ஏற்படாதே, இதனுடன் விளையாடிக்கொண்டிருந்தால்?" என்று கொஞ்சினாள்.

"அப்போது இதையே கல்யாணம் செய்துகொண்டிருக்கலாமே!"

சிணுங்கியபடியே, "நன்றாயிருக்கிறது, உங்கள் பேச்சு! இதுதான்பதிலா?" என்று கூறிவிட்டு உள்ளே சென்று விட்டாள் சரஸா.

திருமணம் ஆகி மாதங்கள் நான்கே ஆகியிருந்தன. தனிக் குடித்தனம் வைத்ததும், முத்துகிருஷ்ணன் எவ்வளவோ மனக் கோட்டைகள் கட்டியிருந்தான். எல்லாம் தவிடு பொடியாகி விட்டன!

குடித்தனம் வைத்த அன்று மாலை முத்துகிருஷ்ணன் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பியதும் அவனை முதலில் வரவேற்றது சரஸா அல்ல, 'க்ரீச்' 'க்ரீச்' என்ற சத்தம்தான்.

"சரஸா! என்ன சத்தம் இது?" என்றான் ஒன்றும் புரியாமல்.

"அதோ மேலே நிமிர்ந்து பாருங்கள்!" என்று சுட்டிக் காட்டினாள் சரஸா.

நிமிர்ந்து பார்த்த முத்துகிருஷ்ணன் வியப்புடன், "ஆ! கிளியா?" என்றான்.

கூண்டைக் கீழே இறக்கி வைத்து, கிளியை வெளியே எடுத்துத் தடவிக் கொடுத்தபடியே, "இன்று வாசலில் ஒருவன் இரண்டு கிளிகளைக் கூண்டுடன் கொண்டு வந்தான். பார்த்ததும் எனக்கு வாங்க ஆசையாய் இருந்தது. ஒன்று வாங்கிவிட்டேன்" என்றாள் மிகுந்த உற்சாகத்துடன் சரஸா.

முத்துகிருஷ்ணனுக்கும் கிளியைக் கண்டதும் மகிழ்ச்சியாய்த்தான் இருந்தது. சில நிமிஷ நேரம் அதனுடன் விளையாடினான்.

ஆனால் அந்த விளையாட்டு நீண்ட நாட்கள் நீடிக்கவில்லை. அற்ப ஆயுளில் முடிந்தது. பின்னர் அவனுக்கு அதன்மீது எரிச்சல்தான் உண்டாயிற்று. காரணம், தன் இளம் மனைவியுடன் கூடிக் குலாவி மகிழக்கூடிய நேரங்களையெல்லாம் அந்தப் பொல்லாத கிளி அபகரித்துக் கொண்டுவிட்டது. எப்போது பார்த்தாலும் சரஸா அதனுடன் கொஞ்சவும், அதற்குச் சிசுருஷை புரிவதுமாகவே இருந்தால், அவனுக்கு எப்படி இருக்கும்? சில தினங்கள், கிளியுடன் சரஸா விளையாட்டில் ஈடுபட்டதன் விளைவாக, சமையலுக்கு நேரமாகி விடும். அது காரணமாய், காரியாலயத்துக்கு நேரம் கடந்து சென்று மேலதிகாரியிடம் எச்சரிக்கையும் பெற்றிருக்கிறான் முத்துகிருஷ்ணன்.

தன் மனைவியை உல்லாசமாய் வெளியே அழைத்துக்கொண்டு போக வேண்டும் என்று பலதடவைகள் விரும்பிக் கேட்டுப்பார்த்தான்.

"ஐயோ! என் கண்ணனை விட்டுவிட்டு வர மாட்டேன். இதை வெளியே கொண்டுவருவதும் தவறு. தனியே வீட்டில் விட்டுவிட்டுப் போவதும் இதற்கு ஆபத்து!" என்று மறுத்து விட்டாள் சரஸா.

முத்துகிருஷ்ணன் மனம் புழுங்கினான்.

"இந்தக் கிளியைத் தீர்த்துக் கட்டிவிட்டால்?" என்று எண்ணினான் ஒரு சமயம். அதற்குப் பொன்னான ஒரு வாய்ப்பும் கிடைத்தது. சரஸா எங்கோ வெளியே போயிருந்தாள். இதுதான் சமயம் என்று கூண்டைக் கீழே இறக்கினான். கிளியை வெளியே எடுத்தான். தன் விபரீதமான எண்ணத்தைச் செயலாக்கத் துணிந்த சமயம், கிளி தாவி அவன் பாதத்தில் விழுந்து தன் மூக்கினால் அவன் பாதத்தை இலேசாய்க் கீறி விட்டது.



முத்துகிருஷ்ணனின் உள்ளம் புரண்டது! கிளியின் செயல், தன்னைக் கொல்லாமல் இருக்கும்படி அவனை மன்றாடிக் கேட்டுக் கொள்ளும் முறையில், அவன் பாதத்திலே விழுந்து வணங்குவது போல ஒரு கற்பனை எழுந்தது அவன் மனத்திலே.

சட்டென்று குனிந்து கிளியை அன்புடன் எடுத்துஅணைத்து மீண்டும் கூண்டுக்குள் விட்டு மேலே மாட்டிவிட்டான்.

தான் செய்ய முற்பட்ட பெரும் பாதகச் செயலிலிருந்து காப்பாற்றப்பட்டதற்காக, ஆண்டவனுக்கு வணக்கம் செலுத்தினான். கிளியைக் கொன்றிருந்தால், அதன் பேரில் தன் உயிரையே வைத்திருக்கும் சரஸாவின் மனம் எத்தனை துயரம் அனுபவிக்க நேரிட்டிருக்கும் என்று எண்ணியபோது, அவனுக்குப் 'பகீர்' என்றது.

எனினும், இந்தக் கிளிப் பிரச்னைக்கு ஒரு முடிவு விரைவில் காணவிட்டால், தன் இல்லற இன்பம் பெரிதும் பாதிக்கப்பட்டு விடும் என்று எண்ணினான் முத்துகிருஷ்ணன்.

நயமாகவும் பயமாகவும் சரஸாவிடம் சொல்லிப் பார்த்தான், கிளியை அப்புறப் படுத்தி விடும்படி. அவள் கேட்கவில்லை.

மாதங்கள் ஓடிக் கொண்டிருந்தன. முத்துகிருஷ்ணன் வாழ்க்கையிலே எந்த மாறுதலையும் காணவில்லை. சரஸாவிடம் பேசுவதில்லை அதிகமாக. விடுமுறை தினங்களில் வீட்டில் தங்குவதும் இடையாது.

வெளியே நண்பர்களுக்குக் கூட அவன் போக்கு வியப்பை அளித்தது.

மன அமைதி குலைந்திருந்த முத்துகிருஷ்ணன், வெளியூர் எங்காவது போய்விட்டு வர விரும்பினான். உத்தியோக முறையில் அதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. ஒரு முக்கியமான விஷயமாகக் கோவை சென்று வரும்படி அவனுக்கு உத்தரவு கிடைத்தது.

சரஸாவுக்குத் துணையாய் வேலைக்காரக் கிழவியை இருக்கச் சொல்லி விட்டுக் கிளம்பினான் முத்துகிருஷ்ணன்.

கோவையில் முத்துகிருஷ்ணன் தன் நண்பன் ராஜசேகரன் என்பவன் வீட்டில் தங்கினான். ராஜசேகரனின் மனைவி ஊரில் இல்லை. எனவே இருவரும் ஓட்டல் சாப்பாட்டைத் தருவித்து உண்டார்கள். சுமார் பத்து நாட்கள் கோவையில் தங்கினான் அவன்.

அன்று ராஜசேகரனின் மனைவியின் பெயருக்கு ஒரு கவர் தபாலில் வந்தது. அதை உடைத்துப் பார்த்தான் ராஜசேகரன்.

"சேகர்! மனைவியாயினும் பிறர்க்கு வந்த கடிதத்தைப் படிப்பது முறையல்லவே!" என்று குறை கூறினான் முத்துகிருஷ்ணன்.

"நீ கூறுவது நியாயம். ஆனால் என் மனைவி தன் கடிதங்களை நான்பார்வையிட அனுமதித்திருக்கிறாள். முத்து! என்மனைவியின் சிநேகிதி யாரோ ஒருத்தி, சென்னையிலிருந்து எழுதியிருக்கிறாள். சரஸா என்று பெயர், அந்தப் பெண்ணுக்கு. அவள் ஒரு கிளியை வளர்த்தாளாம். அதன் மீது ரொம்பவும் பிரியம் வைத்திருந்தாளாம். அது அவள் கணவனுக்குப் பிடிக்கவில்லையாம். கிளியின் மீதிருந்த பிரியத்தில், தன் கணவன் மனம் நோகுமாறு நடந்து கொண்டு விட்டாளாம். சில தினங்களாக, அவள் கணவன் அவளுடன் சரியாகப் பழகுவதில்லையாம். எல்லாம் இந்தப் பாழும் கிளியால் வந்த வினை என்று கருதி, அதை வேறொரு சிநேகிதிக்குக் கொடுத்து விட்டாளாம். அவள் கடிதத்தின் முடிவில் எழுதிய வாசகத்தை அப்படியே படிக்கிறேன் கேள்" என்று கூறிவிட்டு, படிக்கலானான் ராஜசேகரன்.

"பானு! எந்தக் கிளி என்னை வசப்படுத்தி, அதன் பயனாக என் அன்புக் கணவர் என்மீது கோபமும் தாபமும் ஏற்படுமாறு செய்து, என் குடும்பத்தில் கலகம் விளைவித்ததோ....அதே கிளி இப்போது, கணவனின் அன்பை வேறு காரணங்களினால் இழந்து தவிக்கும் ஒரு பெண்ணுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் பயன்பட்டு வருகிறது. என் கிளி அவர்கள் வீட்டை அடைந்த வேளையின் பயன் அத் தம்பதிகளுக்குள் சௌஜன்யம் ஏற்பட்டு விட்டது......"

முத்துகிருஷ்ணன் தன் உணர்ச்சியை மிகுந்த பிரயாசையுடன் கட்டுப்படுத்திக் கொண்டான். தன் கோவை அலுவலை ஒரு நாள் முன்னதாகவே முடித்துக் கொண்டு, தன் அன்பு மனைவியைக் காணச் சென்னைக்கு ரயில் ஏறினான்.

# பொங்கிவரும் பெருநிலவு

### அத்தியாயம் 11

## பொறாமைத் தீ!

கி. ராஜேந்திரன்

அன்று விமானம் பழுதடைந்த போது பயந்துதான் போனான் நடராஜன். தனக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று அஞ்சினான். சாவைக் கண்டுதான் அவனுக்குப் பயமே ஒழிய, பிரேதங்களைக் கண்டு பயந்தவன் அல்ல அவன். அவன் டாக்டர். டாக்டர் பட்டத்தைப் பெறுவதற்கு முன் எத்தனையோ ,பிரேதங்களைப் பார்த்திருக்கிறான்.

சென்னை மருத்துவக் கலாசாலையில் முதல் நாள் அவன் சென்றதுமே ஒரு பேரதிர்ச்சியை அடைந்தான். உடற்கூறு சாஸ்திர வகுப்பில் அவன் போய் உட்கார்ந்ததும் ஒரு நீளமான வண்டியை ஒருவன் தள்ளிக் கொண்டு வந்தான். அதன்மீது ஒரு வெண்மையான துணி போர்த்தப்பட்டிருந்தது. அதன் பின்னாலேயே நடந்து வந்த பேராசிரியர் அலட்சியமாக அந்தத் துணியை அகற்றிக் கொண்டே ''இது ஒரு பிணம்'' என்றார்.

நடராஜனுடைய டாக்டர் படிப்பு இத்தகைய பயங்கரமான சூழ்நிலையிலே ஆரம்பமாயிற்று. நடராஜன் மட்டுமென்ன? டாக்டர் தொழில் புரிந்து வரும் ஒவ்வொருவருமே தமது பயிற்சிக் காலத்தை இந்த முறையிலேதான் ஆரம்பித்தாகவேண்டும். அருவருப்பான விஷயம்தான். ஆனால் அத்தியாவசியமானதும்கூட. அந்தப் பிரேதத்தை ஆராய்வதன் மூலம் எத்தனை டாக்டர்கள் உருவானார்கள்? எவ்வளவு உயிர்கள் பிற்காலத்தில் அவர்களால் காப்பாற்றப்படும்?

நடராஜனுக்கும் முதலில் அருவருப்பாகத்தான் இருந்தது. வயிற்றைக் குமட்டியது. கஷ்டப்பட்டு அந்த உணர்ச்சியை அடக்கிக்கொண்டான். இங்கு அருவருப்புக்கு இடம் தரக் கூடாது. முதலிலேயே அந்த உணர்ச்சிக்கு இடமளித்து விட்டால் முன்னேற முடியாது என்று உணர்ந்தான்.

அதற்குப் பின்னால் எத்தனை எத்தனையோ பிரேதங்களைப் பார்த்து விட்டான் நடராஜன். உடல் வேறு, தலை வேறாக, கை வேறு, கால் வேறாக; தனித் தனியே அறுத்து அறுத்து உடலின் அதிசயமான அமைப்பை ஆராய்ந்தான். மிக மிக நுட்பமான விஷயங்களைக்கூடச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் தெரிந்து கொண்டான். இன்னும் மருத்துவம், சுகாதாரம், கிருமிகள் பற்றிய விஞ்ஞானம், சஸ்திர சிகிச்சை முதலிய அனைத்தையும் ஐந்து வருஷங்கள் தவமிருப்பது போல் இருந்து கற்றுத் தேர்ந்தான்.

மருத்துவக் கலாசாலைக்குள் புகுந்து சென்ற வாலிபன் நடராஜனுக்கும் கற்றுத்தேர்ந்து வெளியேறிய டாக்டர் நடராஜனுக்கும் சம்பந்தமே இல்லை. வயதில் ஐந்து வருஷம் அதிகம் என்பது மட்டுமில்லை. ஐந்து வருஷ அனு



பவமும் சேர்ந்திருந்தது. உள்ளே நுழைந்தபோது வாலிப மிடுக்கோடு இருந்தான் அவன். வெளியே வந்த போது அவனிடம் அடக்கம் இருந்தது. கலாசாலையில் சேர்ந்த போது வாழ்க்கை ஒரே ஆனந்த மய மாக இருந்தது நடராஜனுக்கு. ஐந்து வருஷங்களுக்குள்ளாக வாழ்க்கையில் மேடு பள்ளங்கள் உண்டு. இன்பமும் துன்பமும் கலந்துதான் இருக்கும் என்பதை அறிந்திருந்தான். 'அறிவு இருக்கிறது. நம்மைக் கட்டிப்பிடிக்க ஒருவரும் இல்லை' என்ற செருக்கு இருந்தது நடராஜனுக்கு. அறிவு மட்டும் போதாது. அனுபவமும் வேண்டும் என்பதை விரைவிலேயே உணர்ந்து கொண்டான். ''நான் டாக்டர். மனித உயிர்களை எமனிட மிருந்து காப்பாற்றப் போகிறேன்'' என்று எண்ணியிருந்தான் நடராஜன். கலாசாலையில் சேர்ந்த சில நாட்களுக்குள்ளாகவே அந்த எண்ணம் அடியோடு மாறிப்போய் 'அவனின்றி ஒரு அணுவும் அசையாது' என்பதில் நம்பிக்கை கொண்டான். இப்படி டாக்டர்களை உருவாக்குவ





தோடு மனித உள்ளத்தையும் இயற்கையாகவே பண்படுத்துவது மருத்துவக் கலாசாலைதான்.

நடராஜனுடைய உள்ளம் இப்படியெல்லாம் பண்பட்டிருந்த போதிலும், எத்தனையோ பிரேதங்களை அவன் பார்த்திருந்த போதிலும் 'விமலாவின் தந்தை சிவசாமி இறந்து போய் விட்டார்' என்று அறிந்தபோது அவன் உள்ளம் துடிதுடிக்கத்தான் செய்தது. அவன் கண்களில் நீர்முட்டித் தேங்கத்தான் செய்தது. கால்கள் நிற்கச் சக்தியை இழந்து வெலவெலத்தன. கரங்கள் நடுங்கின. அவை பற்றியிருந்த தந்தியும் நடுங்கியது.

ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்த நடராஜனால் அவனுடைய கண்ணுக்குக் கண்ணான விமலாவுக்கு என்ன ஆறுதல் கூற முடி

யும்? அவனுக்கும் அத்தை மரகதத்துக்கும் ஆறுதல் சொல்லக் கூடியது ஒரே ஒரு விஷயம்தான். அதுதான் காலம். நாட்கள் மாதங்களாகவும், மாதங்கள் வருஷங்களாகவும் மாறிக் காலம் செல்லச் செல்லத்தான் அவர்களுடைய துயரம் குறையும். அது தான் இயற்கை நியதி. அந்தக் காலச் சக்கரம் பலமுறை உருண்டு ஓடும் வரையில் அவர்களுக்கு இந்தப் பேரதிர்ச்சியைத் தாங்க மனதிடத்தை இறைவன் தான் அளிக்க முடியும். அவளைச் சதா எண்ணிக் கொண்டிருப்பதிலேதான் மனம் சற்றேனும் அமைதி அடையும்.

தந்தி கிடைக்கு முன் இன்பத் தேனில் பேனாவைத் தோய்த்து விமலாவுக்குக் கடிதம் எழுதினான் நடராஜன். இரவோடு இரவாகப் பேனாவைத் துயரக் கண்ணீரில் தோய்த்து மற்றொரு கடிதம் எழுதினான். கடிதத்தை எழுதிக் கொண்டிருக்கும்போதே அவன் மனக் கண் முன்னால் விமலா கண்ணீரும் கம்பலையுமாகத் தோற்றமளித்தாள். ''அப்பா! அப்பா!'' என்று அவள் கதறினாள்.

* * *

திருச்சியில் உண்மையாகவே விமலா விம்மி விம்மி அழுதாள். ''அப்பா! அப்பா!'' என்று கதறினாள்.

அவள் அப்படி அலறியதை டாக்டர் ராமலிங்கம் பார்த்தார். வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்த அவருக்கே துக்கம் பீறிக் கொண்டு வந்தது. ''விமலா! என் அருமை மகளே!'' என்று கூக்குரலிட்டார். பின்னர், ஒருவாறு உணர்ச்சியைக் கட்டுப் படுத்திக் கொண்டு ''இதோ இருக்கிறேனம்மா நான். நான் தான் இனி உன் அப்பா! கவலைப் படாதே'' என்று நிதானமாக நாத் தழுதழுக்கக் கம்மிய குரலில் சொன்னார் டாக்டர் ராமலிங்கம்.

அதைக் கேட்டதுமே விமலாவின் அலறல் ஏதோ மாய மந்திர சக்தியால் கட்டுண்டதைப் போல் அடங்கி விட்டது. நீண்ட நேரம் டாக்டர் ராமலிங்கத்தின் முகத்தைக் கண்கொட்டாமல் உற்றுப்பார்த்தாள். பின்னர் ''அப்பா!'' என்று அன்போடு அழைத்துக்கொண்டே அவரைத் தஞ்சம் அடைந்தாள். அவரது பரந்த மார்பிலே தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு மௌனமாகக் கண்ணீர் உகுத்தாள். டாக்டர் ராமலிங்கத்துக்கும் கண்களில் கண்ணீர் ததும்பியது. விமலாவின் கேசத்தை மெள்ள வருடிக் கொண்டே, ''அழாதே அம்மா! உனக்குத்தான் அப்பாவாக நான் இருக்கிறேனே? இன்னும் எதற்காக அழுகிறாய்?'' என்று கேட்டு அவளைச் சமாதானப்படுத்தினார்.

சில நாட்களுக்குள்ளாகவே விமலாவின் துக்கம் குறைந்தது. அவள் சமாதானம் அடைந்து விட்டாள். எதிர்காலத்தைப் பற்றிய எண்ணங்கள் அவளுடைய துக்கத்தைக் குறைக்க உதவின.

எதிர்காலத்தில் அவள் நடராஜனுடன் நடத்தக் கூடிய இன்ப வாழ்க்கையும் அதில் அவளுக்கு இருந்த பற்றுதலும் துயரத்தைக் குறைத்தன. ஆனால் மரகதம்மாளுடைய நிலை வேறாக இருந்தது. அவளுக்கு எதிர்காலம் ஏது? கணவன் இல்லாத எதிர்காலம் அவளுக்கு எதற்கு? அவளுடைய துக்கம் ஆழங் காண முடியாதது. முடிவில்லாத துயரம்தான். இரண்டொரு நாட்களில் வெளிப்படையாகத் துக்கப்படுவதை நிறுத்தி விட்டாள். அழுவதை விட்டு விட்டாள். ஆனால் உள்ளத்தின் ஆழத்தில் குடிகொண்டிருந்த சோகத்தை யாரால் அகற்ற முடியும்?

* * *

விமலா நடராஜனுக்குக் கடிதம் எழுதிய இரண்டு நாட்களுக்குப் பின் சிவசாமிக்கு உடம்பு கவலைக்கிடமாகப் போய்விட்டது. அவருக்கு வழக்கமாக வைத்தியம் செய்து வந்த டாக்டரை அழைத்து வந்தார்கள். அவருக்குச் சிவசாமியின் குடும்பத்துடன் நீண்ட நாள் பழக்கம். அவர்கள் குடும்பத்தைப் பற்றி நன்கு அறிந்தவர். சிவசாமிக்கு ஒரு ஊசிபோட்டு விட்டு, டாக்டர் ராமலிங்கத்தை டெலிபோனில் கூப்பிட்டுப் பேசினார். ''நீங்கள் வந்து விடுவது நல்லது'' என்று தெரியப்படுத்தினார். மறுநாள் காலையில் விமானம் மூலமாகத் திருச்சி வந்து விட்டார் ராமலிங்கம். சிவசாமி இறந்து போகும் தறுவாயில் அவர் தலைமாட்டில் இருப்பதைத் தவிர அவரால் செய்யக் கூடியது வேறு ஒன்றும் இல்லை. அந்தச் சில நிமிஷங்களில் சிவசாமி டாக்டர் ராமலிங்கத்திடம் ஒரு வாக்குறுதி கேட்டார். அதைப் பெற்றுக் கொண்டபின்தான் அவர் மன நிம்மதியுடன் தமது கண்களை நிரந்தரமாக மூடினார்.

விஷயத்தை அறிந்ததும் டாக்டர் ராமலிங்கத்தின் மனைவி பொன்னம்மாளும் மறுநாளே வந்து சேர்ந்தாள். மரகதத்துக்கும் விமலாவுக்கும் ஆறுதல் வார்த்தைகள் சொன்னாள். ராமலிங்கம் தம் அலுவல்களைக் கவனிக்க வேண்டிச் சென்னைக்கு இரண்டொரு நாட்களில் திரும்பிவிட்ட போதிலும் பொன்னம்மாள் ஒரு மாதம் வரை திருச்சியிலேயே இருந்து வந்தாள். அதன் பிறகு விமலா

வையும் மரகதத்தையும் வற்புறுத்திச் சென்னைக்கே அழைத்து வந்து விட்டாள். இரண்டு குடும்பங்களாகப் பிரிந்து இருந்தவர்கள் ஒரே குடும்பமாக இணைந்து விட்டார்கள்.

* * *

"**மா**மா! மாமாவ்!" என்ற குரலைக் கேட்டு ராமலிங்கம் திகைத்தார். "இது என்ன வம்பு? யார் வாசலில் வந்து 'மாமா மாமா' என்று கத்துகிறது?" என்று முணுமுணுத்துக் கொண்டே வெளியே வந்தார்.

"யாரடா அது?"

"நான்தான் மாமா!"

"நான்தான் என்றால் யாரு?" என்று கேட்டுக்கொண்டே வாசலில் நின்றவனை மேலும் கீழுமாகக் கூர்ந்து பார்த்தார் டாக்டர் ராமலிங்கம்.

"சரியாய்ப் போச்சு, என்னைத் தெரியவில்லையா மாமா? அடியோடு அடியேனை மறந்துவிட்டீர்களா? என்னுடைய துர்ப்பாக்கியம்தான் என்னே! அந்தோ, பரிதாபம்!" என்றான் வாசலில் நின்றவன் முகத்தைப் பரிதாபமாக வைத்துக்கொண்டபடியே.

"அடே! நம்ப மணியா! அடையாளமே தெரியலேடா! உன் பேச்சைக் கேட்ட பிறகுதான் தெரிந்தது. ஆள் மாறி விட்டாலும் கோணங்கித்தனம் மட்டும் மாறவேயில்லே! பொன்னு! பொன்னு! சுருக்க இங்கே வாயேன்!" என்று உற்சாகமாகத் தம் மனைவியை அழைத்தார் டாக்டர் ராமலிங்கம்.

"இதோ வந்துவிட்டேன்" என்று கூவிக் கொண்டே என்னமோ ஏதோ என்று பயந்து போய் ஓடோடியும் வந்தாள் பொன்னம்மாள். கணவன் இப்படி அவசரமாகக் கூப்பிட்டு அவள் கேட்டதே இல்லை. வாசலில் வேற்று மனிதர் நிற்பதைக் கண்டதும் கதவோரத்தில் தயங்கி நின்றாள்.

"எதற்கடி ஒளியறே? வேறு யாருமில்லே நம்ப மணிதான். அடையாளம் தெரிகிறதா?" என்றார் ராமலிங்கம்.

பொன்னம்மாளின் முகம் மலர்ந்தது. "நம்ப மணியா? நிஜமாகவா? நம்பவே முடியலையே?"

"நம்புங்கள்! நம்புங்கள். நான் மணிதான் தைரியமாக நம்புங்கள். பரவாயில்லே" என்றான் மணி.

"ஏண்டா! இப்போ என்ன பண்ணிக் கொண்டிருக்கே?" என்று கேட்டாள் பொன்னம்மாள்.

"நின்றுகொண்டிருக்கேன், மாமி!"

"அது தெரியறதுடா! என்ன வேலையில் இருக்கேன்னு கேக்கறேன்?"

"வேலை தேடும் வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறேன்" என்றான் மணி.

மணிசேகரனின் இந்தப் பதிலைக் கேட்டு இருவருமே சிரித்தார்கள். "ஆளைப் பார்த்தால்தான் நம்முடைய மணி என்று நம்ப முடியவில்லையே ஒழிய, பேச்சைக் கேட்ட உடன் நம்ப வேண்டியதுதான். வேறு வழியே இல்லை" என்றாள் பொன்னம்மாள்.

"ஆமாம், ஆமாம்! பத்து வயதிலேயே நம்மைப் பதில் பேச முடியாமல் செய்துவிடுவானே, பொல்லாத பயல்" என்றார் ராமலிங்கம்.

"அது கிடக்கட்டும், வாசலிலேயே நிற்கவைத்துப் பேசிக்கொண்டிருக்கிறீர்களே? உள்ளே அழைத்து வாருங்கள்."



"சரியாய்ப் போச்சு. என் மேலேயே பழி முழுவதையும் போடுகிறாயே? நான் மட்டுமா பேசிக் கொண்டிருக்கிறேன்? நீயும்தான் பேசிக் கொண்டிருக்கிறாய்."

"நீங்கள் இருவரும் இப்போது அதற்காகச் சண்டை போட வேண்டாம். இதோ நானே உள்ளே வந்துவிடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தான் மணி.

"பொன்னு! மணிக்குக் காப்பிபோட்டு எடுத்துக் கொண்டு வா" என்றார் ராமலிங்கம். 'சரி' என்று தலையை ஆட்டிவிட்டு உள்ளே சென்றாள் பொன்னம்மாள். ராமலிங்கம் மணியின் முதுகில் அன்புடன் விரல்களை வைத்து அணைத்தபடியே வாசல் அறையில் போடப்பட்டிருந்த நாற்காலிகளுக்கு அழைத்துச் சென்றார். இருவரும் உட்கார்ந்தார்கள்.

"மாமா! நடராஜன் எங்கே காணோம்? இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறான்?"

"நடராஜன் லண்டனில் இருக்கிறான். எப். ஆர். ஸி. எஸ். பரீட்சை எழுதப் போகிறான். போய் ஒரு வருஷம் ஆகி விட்டது. சாதாரணமாக இன்னும் ஒரு வருஷம் கழித்துத்தான் திரும்ப வேண்டும். ஆனால் நேற்று அவனிடமிருந்து வந்திருக்கும் கடிதத்தைப் பார்த்தால் இன்னும் ஆறு மாதத்தில் திரும்பி விடுவான் என்று தோன்றுகிறது" என்று சொல்லிக் கொண்டு வருகையிலேயே ராமலிங்கத்தினுடைய முகம் பெருமிதத்தால் மலர்ந்தது.

"நடராஜனுக்கு என்ன மாமா? அவனுடைய சாமர்த்தியத்துக்கு இரண்டு வருஷப் படிப்பை இரண்டு நாட்களிலேயே முடித்து விடுவான்" என்றான் மணி.

இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே விமலா காப்பி எடுத்துக் கொண்டுவந்தாள். தன் காதலனைப்பற்றி மணிசேகரன் சொன்ன வார்த்தைகள் அவளை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தின. அவள் மார்பகம் சந்தோஷத்தால் விம்மிப் பூரித்தது. உடல் சிலிர்த்தது. இதழ்களில் புன்னகை மலர்ந்தது. நன்றியும் மகிழ்ச்சியும் கலந்த ஒரு பார்வையை அவள் மணிசேகரன் பக்கமாகச் செலுத்தினாள். அதே சமயத்தில் மணிசேகரனும் விமலாவைப் பார்த்தான். "யார் இந்தப் பெண்?" என்ற கேள்வி அவன் உள்ளத்தில் எழுந்தது. கூடவே "யாராக இருந்தால் என்ன? இந்த அழகுச்சொரூபத்தை அடையப் போகிறவன் அதிர்ஷ்டசாலி தான்" என்ற எண்ணமும் எழுந்தது!

விமலா தட்டை நடுவே இருந்த மேஜையின் மீது வைத்தாள். பின்னர் சற்றுத் தூரத்தில் இருந்த சிறிய முக்காலிகளை எடுத்து வந்து ராமலிங்கத்தின் எதிரிலும் மணிசேகரன் அருகிலும் வைத்தாள். பின்னர் தட்டின்மீது இருந்த இரு காப்பி டம்ளர்களையும் அந்த முக்காலிகளின் மீதுவைத்தாள். அவளுடைய ஒவ்வொரு அங்க அசைவையும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் மணி. தற்செயலாக அவன் பக்கம் திரும்பிய விமலா அவன் தன்னையே கவனிப்பதைக் கண்டு திடுக்கிட்டாள். 'இது என்ன கூத்து? இவர் என்னத்திற்காக என்னையே இப்படி முறைத்துப் பார்க்கிறார்?' என்று எண்ணியபடியே அவள் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

ராமலிங்கம் அந்த நடந்த அந்தச் சிறிய நாடகத்தைக் கவனித்ததாகவே தெரியவில்லை. அவருடைய மனமும் சிந்தனையும் தம் அருமை மகன் நடராஜன் மீது ஈடுபட்டிருந்தன.

"சாதாரணமாக இரண்டு வருஷங்களுக்கு முன்னால் யாரும் இந்தப் பரீட்சையை எழுதி முடிப்பதில்லை, மணி! டாக்டர் ஜாக்ஸன் கூட நடராஜனை 'எதற்காக அவசரப்படுகிறாய்? இன்னும் ஒரு வருஷம் கழித்துத்தான் எழுதேன்' என்றாராம். நடராஜன் பிடிவாதமாக 'எனக்கு இங்கு இருப்புக் கொள்ளவில்லை சென்னைக்குத் திரும்ப வேண்டும். எவ்வளவு சீக்கிரம் முடிக்க முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் முடித்து விட விரும்புகிறேன்' என்றானாம். முதல் ஆறு மாதத்திலேயே பூர்வாங்கப் பரீட்சையை முடித்து விட்டானாம். அதில் தேறிய பின் ஒரு வருஷம் கழித்துத் தான் இறுதிப் பரீட்சையை அவன் எழுத முடியும்......"

மணிசேகரன் அவர் சொன்னதைக் கவனிக்கவே யில்லை. அவன் விமலாவின் அற்புத அழகை அனுபவித்துக் கொண்டே, "மாமா! காப்பி ரொம்ப ஜோராக இருக்கிறது. ஆறிப்போவதற்கு முன்னால் சாப்பிடுங்கள்" என்றான்.

நடராஜன் பெருமையை ராமலிங்கம் எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்த போது அவன் குறுக்கிட்டு 'காப்பியைச் சாப்பிடுங்கள்' என்று சொன்னது விமலாவுக்குப் பிடிக்கவில்லை. அவள் காப்பி எடுத்து வந்த தட்டைச் சட்டென்று எடுத்துக் கொண்டு வேகமாகத் திரும்பினாள். தாம் சொல்லி வந்ததை மணி ரசிக்கவில்லை என்பதை ராமலிங்கம் உணர்ந்து கொண்டார். திரும்பிப் போக யத்தனித்த விமலாவைக் கூப்பிட்டு, "இது யார் தெரியுமா விமலா? நம்ப மணி சேகரன்" என்றார்.



"தெரியும், தெரியும்! மாமி உள்ளே சொல்லிக் கொண்டுதான் இருந்தார். அத்தான் தலையில் கல்லை விட்டெறிந்து காயப் படுத்தியவர் இவர்தானே? இவரை மறக்கமுடியுமா என்ன?" என்று கேட்டுத் தன் வெறுப்பைச் சற்று வெளிப் படையாகக் காட்டிக் கொண்டாள்.

"ஆமாம், ஆமாம்! அதே மணி சேகரன்தான் நான். அத்தானுக்கு அடிபட்டு விட்டது என்று ஒரு நாள் பூராவும் கண் சிவக்கக் கேவிக் கேவி அழுது ரகளை பண்ணினாயே? அந்த விமலா தானே நீ?" என்று கேட்டான் மணி.

ராமலிங்கம் விழுந்து விழுந்து சிரித்தார். அதற்கிடையே, "மணி! அன்று நடராஜனுக்கு அடிபட்டதை நான்

# தூய்மையான நறு மணத்திற்கு...



ஒரு பிரத்தியேக கலப்புள்ள, சருமத்திற்கு வன்மையூட்டும் தாவர எண்ணெயும், சுத்தமான மைசூர் சந்தன தைலமும் சேர்க்கப்பட்டு இருப்பதால் கடைகளில் சோப்புகளிலே மிகச் சிறந்தது கோத்ரெஜ் சந்தன சோப்பு என வழங்கப் படுகிறது.

அபரிமிதமான நுரையுடன் சருமத்திற்கு குளுமையான சுகமளிக்கிறது. இதன் தூய்மையான சுகந்தம் நாள் முழுவதும் உங்களை நறுமணம் கமழும் எழிலுடன் விளங்கச் செய்கிறது.

விலைக்கு விலை, எடைக்கு எடை, மற்றும் சிக்கனமானதும் கூட!

கோத்ரெஜ் சந்தன சோப்பில் மிருகக் கொழுப்பு **கிடையாது**




இப்போது புதிய கவர்ச்சி தரும் பெட்டிகளில் கிடைக்கின்றன

Godrej **கோத்ரெஜ்** உங்களுக்காக உயர்தர சோப்புகளை தயாரிக்கிறது டாய்லெட்டுக்கும் - சலவைக்கும் - ஷவரத்திற்கும் ஹேர்டானிக், டாய்லெட் பவுடர்...

THE INDIAN OVERSEAS BANK
MADRAS

# உற்சாகத்துடன் கால தாமதமின்றி மரியாதை யுடன் வாடிக்கையாளர் களின் சேவைக்காகவே இருக்கின்றது

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்

பிற்கால உதவிக்கும், குடும்ப பாதுகாப்பிற்கும், பிறரை நாட வேண்டியதை தவிர்க்க மக்களுக்கு நீண்டகாலமாக சேவை செய்துவரும் இந்தியன் ஓவர்சீஸ் பாங்கில் சிறு தொகையாக சேமியுங்கள்.

கீழ்கண்ட கிளைகளில் Safe Deposit Locker வசதிகள் இருக்கின்றன.

எஸ்பிளனேட் (மதராஸ்) மைலாப்பூர் (மதராஸ்), புரசைவாக்கம் (மதராஸ்), மத்துங்கா (பம்பாய்) திருச்சிராப்பள்ளி, கல்கத்தா

# தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிட். சென்னை

கிளைகள்: பம்பாய் (கோட்டை, மாண்டவி, மாதுங்கா), கல்கத்தா, மதுரை, புதுடெல்லி, ஹைதராபாத் மற்றும் தென்னிந்தியாவிலும் உள்ளன.

வெளிநாட்டு கிளைகள்: ரங்கூன், கொழும்பு, சைகோன், கோலாலம்பூர், பினாங், சிங்கப்பூர், மலாக்கா, பாங்காக், ஹாங்காங்.

சென்னை கிளைகள்: எஸ்பிளனேட், மவுண்ட் ரோடு, மைலாப்பூர், புரசைவாக்கம், தியாகராயநகர்.

மறந்து விட்டேன். மாமிக்கும் ஞாபகம் இல்லை. நடராஜன் அதைப்பற்றி நினைத்துக் கூடப் பார்க்க மாட்டான். ஆனால் விமலாவிடமிருந்து மட்டும் உன்னால் தப்பவே முடியாது. இந்த ஜன்மத்தில் அத்தானைக் காயப்படுத்திய உன்னை மறக்கவே மாட்டாள். ஏழேழு ஜன்மத்துக்கும் உன்னை மன்னிக்கவே மாட்டாள்! என்ன இருந்தாலும் தான் கல்யாணம் செய்துகொள்ளப் போகும் அருமை அத்தான் இல்லையா நடராஜன்?'' என்றார்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதுமே மணிசேகரனுடைய உள்ளத்தில் திடீரென்று பொறாமைத் தீ கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது.

## அத்தியாயம் 12

## "உயிரை விடவேண்டுமா?"

ஓட்டமாக ஓடிச் சென்ற மல்லிகா திரைப்படக் கோஷ்டி தங்கியிருந்த வீட்டை நெருங்கியதும் சற்றுத் தயங்கினாள். உள்ளே பிரகாசமாக 'பெட்ரோமாக்ஸ்' விளக்கு எரிந்து கொண்டிருந்தது. இரண்டு மூன்று பேர்கள் பேசும் குரல்களும் இடையிடையே சிரிப்பொலியும் கேட்டன. திடுதிப்பென்று எப்படி உள்ளே நுழைவது? சேகரைத் தவிர வேறு ஒருவரையும் நமக்குத் தெரியாதே? அவர் இங்கு இருக்கிறார் என்பது என்ன நிச்சயம்? அவரை இங்கு வந்து கூப்பிட்டால் பிடிக்குமோ பிடிக்காதோ? தவறாக எடுத்துக் கொண்டால் என்ன செய்வது? என்றெல்லாம் கேள்விகள் எழுந்தன.

"வந்தது வரட்டும்" என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு வாசல் கதவை நெருங்கினாள். உள்ளே பேச்சுக் குரல் தெளிவாகக் கேட்டது. சேகருடைய பெயரும் பேச்சில் அடிபடவே மல்லிகா மீண்டும் தயங்கினாள். அருகே இருந்த ஜன்னல் வழியாக அவள் மெதுவாக எட்டிப் பார்த்தாள்.

ஒரு மேஜையைச் சுற்றி மூன்றுபேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களை ஷூட்டிங்கின்போது பார்த்திருந்தாள் மல்லிகா. திரைப்படக் கதாநாயகர், கதாநாயகி, டைரக்டர் முதலானோர் தான் அவர்கள். மூவர் கையிலும் சீட்டுக்கள் விரிந்து இருந்தன.

"'ரம்மி' ஆடுவதற்கு மூன்று பேர்கள் சுகம் இல்லை. நாலாவது கையும் வேண்டும்" என்றார் நடிகர்.

"சேகர் எங்கே போய் விட்டார்? அவர் இருந்தால் நாலாவது கையாக இருக்குமே?" என்று வருத்தப்பட்டாள் நடிகை ஒரு ராஜாவை இறக்கிக் கொண்டே. "பத்து பாயிண்டையாவது குறைத்துக் கொள்கிறேன்" என்றாள்.

"இந்த நயா பைசா ஆட்டத்துக்கு பாயிண்டை வேறு குறைத்துக்கொள்ள வேண்டுமாக்கும்? வெட்கக்கேடுதான்" என்றார் டைரக்டர்.

"மியூஸிக்கை கூடக் காணுமே? எங்கே போய்விட்டார்?"

"அவர் நாட்டுப் பாடலைத் தேடிக் கொண்டு போயிருப்பார். சேகர் அந்தப் பட்டிக்காட்டைத் தேடிக் கொண்டு போயிருப்பார்!"

மூவரும் சிரித்தார்கள்.

"இருந்தாலும் இந்தப் பட்டிக்காட்டில் வந்து அவர் 'லவ்' பண்ண வேண்டாம்" என்றாள் நட்சத்திரம்.

"'லவ்' என்று யார் சொன்னது? சும்மா 'பிளிர்ட்' பண்ணிக் கொண்டிருந்தார் அவ்வளவுதான்!"

"இரண்டு வார்த்தைகளுக்கும் என்ன வித்தியாசமோ?"

"'லவ்' என்பது காதல். 'பிளிர்ட்' என்றால் காதல் புரிவது போன்ற பாவனைதான்!"

"எதற்கு பாவனை செய்ய வேண்டும்?"

"நல்ல கேள்வி கேட்டீர்கள்? பாவனையோடு நிற்கிறதே என்று நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நீங்கள் என்னடா வென்றால்......"

"ஐயய்யோ! என்னவோ ஞாபகத்தில் பேசிக்கொண்டே ஜோக்கரைக் கீழே போட்டு விட்டீர்களே?"

"அப்படி அடித்ததா உங்கள் அதிர்ஷ்டம். எடுத்துக் கொள்ளுங்கள்."

நடிகர் எடுத்துக் கொண்டார். "சேர்ந்து விட்டது" என்று சொல்லிக் கொண்டே கையில் இருந்த சீட்டுக்களையெல்லாம் விரித்தார்.

"சேகருக்குப் பொழுது போகவில்லையானால் சீட்டாடக் கூடாதோ? அந்தப் பெண்ணைச் சுற்றித் திரிவானேன்? ஏதாவது ரகளை நடக்கப் போகிறது என்று எனக்குப் பயமாகவே இருக்கிறது" என்றாள் நடிகை.

"அது எப்படியாவது போகட்டும். எண்ணிக்கை எத்தனை அதைச் சொல்லுங்கள்" என்றார் ஹீரோ.

மல்லிகாவினால் அதற்குமேல் அங்கு நிற்க முடியவில்லை. துக்கம் தொண்



டையை அடைக்க அவள் நிதானமாகத் திரும்பி நடந்தாள். அவள் கால்கள் ஆற்றங்கரையை நோக்கி நடந்தன. 'இவர்கள் சொல்வது உண்மையாக இருக்குமா? அது உண்மையானல் சேகர் என்னிடம் காட்டிய அன்பு பொய்யா? என் கரங்களைப் பற்றித் தேனெழுகப் பேசியது பொய்யா? என் காதில் ரகசியமாகக் காதல் வார்த்தைகளைப் பேசினரே, அது பொய்யா? எனக்காகக் காத்திருப்பாயா என்று ஏக்கத்துடன் கேட்டாரே, அது பொய்யா? யுகம் யுகமாகக் காத்திருப்பேன் என்று நான் சொன்னேனே, அதுதான் பொய்யா? அல்லது இந்த சினிமாக்காரர்கள் சொல்லுவதுதான் பொய்யா? ஐயோ, கடவுளே! ஒன்றுமே புரியவில்லையே?'

ஆற்றங்கரையோரமாக நடந்து சென்ற மல்லிகா தானும் சேகரும் வழக்கமாகச் சந்தித்துப் பேசும் இடத்தை அடைந்ததும் சற்று நின்றாள். செண்பக மரங்களுக்கிடையே நிலவொளி புகுந்து வந்தது. அண்ணாந்து பார்த்தாள் மல்லிகா. நீலவானத்திலே பிறைச் சந்திரன் அமுத நிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். அது மல்லிகாவுக்கு எரிச்சலை அளித்தது. எதற்காக இன்னும் நிலவு காய்கிறது? அது அழிந்து போகட்டும் என்று சபித்தாள். எதற்காகச் செண்பக மலர்கள் மணம் பரப்புகின்றன? அவை கருகட்டும். எதற்காக ஆறு குதூகல நடைபோட்டுத் துள்ளி ஓடுகிறது? அது வற்றிப் போகட்டும். எதற்காக நட்சத்திரங்கள் என்னைப் பார்த்துச் சிரிக்கின்றன? அவை வானத்திலிருந்து வழுக்கி விழுந்து நாசமாகட்டும். எதற்காக நான் இன்னும் நடமாடிக் கொண்டிருக்கிறேன்? நானும் இறந்து போகிறேன்!

இந்த எண்ணம் தோன்றியதும் திடுக்கிட்டு நின்றாள் மல்லிகா. கணக்கையா சொன்ன வார்த்தைகள் அவள் காதுகளில் 'கணீர் கணீர்' என்று இப்போதும் கேட்டன. **காதல் கல்யாணத்தில் முடியும் வரை தவறு இல்லை! ஆனால் அது குட்டிச்சுவரில் முடியலாம்! ஆற்று வெள்ளத்தில் முடியலாம்! விட்டத்திலிருந்து தொங்கும் கயிற்றில் முடியலாம்!** மீண்டும் பழைய எண்ணம்: 'எதற்காக நான் இன்னும் நடமாடிக் கொண்டிருக்கிறேன்? நானும் இறந்து போகிறேன்.'

காதுகளைப் பொத்திக் கொண்டாள் மல்லிகா. "முடியாது முடியாது; எதற்காக நான் இறக்க வேண்டும்? இப்போது என்னவாகிவிட்டது? கணக்கையாவும் அந்த சினிமாக்காரர்களும் சொன்னதைக் கொண்டு எப்படி உயிரை விடத் துணிவது? என் காதலரை இன்னும் பார்க்கவில்லை. அவரைக் கண்டு பேசவில்லை. பேசாதவரை எதற்கு உயிரை விட வேண்டும்?"

"சேகர் இப்போது இங்கே வரமாட்டாரா? நான் கேட்டதெல்லாம் பொய் என்று சொல்ல மாட்டாரா? உன்னை விட்டுப் பிரியவே மாட்டேன் என்று சத்தியம் செய்ய மாட்டாரா? என்று அவள் உள்ளம் ஏங்கியது. இன்னும் சிறிது தூரம் சென்றாள் மல்லிகா. தூரத்தில் சேகரின் உருவம் நிலவொளியில் தெரிந்தது. தன் நடையைத் துரிதப்படுத்தினாள். சேகருடைய உருவம் அவளுக்குப் புத்துணர்ச்சியையும் நம்பிக்கையையும் அளித்தது. 'இல்லை! அவர் சொன்னதெல்லாம் பொய்யில்லை. கணக்கையா சொன்னதுதான் பொய்! அந்த சினிமாக்காரர்கள் சொல்லிக் கொண்டிருந்ததுதான் பொய்!'

அவளைக் கண்டதும் சேகரும் வேகமாக நடந்து வந்தான். அவனை அணுகியதும் மல்லிகா அவன் கரங்களில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவற்றைத் தன் கண்ணீரால் நனைத்தபடியே, "'உன்னை விட்டுப் பிரியவே மாட்டேன்' என்று சத்தியம் செய்யுங்கள்" என்றாள்.

"முடியாத காரியத்துக்கு என்னைச் சத்தியம் செய்யச் சொல்கிறாயே?" என்றான் சேகர்.

ஆயிரமாயிரம் இடிகள் தன் தலையில் விழுந்தது போல் உணர்ந்தாள் மல்லிகா, "ஐயா! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். தயவுசெய்து இந்தப் பேதையைத் தவியே தவிக்க விட்டு விட்டுப் போய் விடாதீர்கள். எங்கு போனாலும் என்னையும் அழைத்துக் கொண்டு போய் விடுங்கள். பெண்ணைக் கொன்ற பாவத்தைத் தேடிக் கொள்ளாதீர்கள்!" என்று கதறினாள் மல்லிகா.

சேகருடைய நெற்றியில் சுருக்கங்கள் விழுந்தன. ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது என்பதை அவன் அப்போது தான் உணர்ந்துகொண்டான். 'சத்தியம் செய்ய முடியாது' என்று அவன் விளை

யாட்டாகத்தான் சொன்னான். மல்லிகாவின் இந்தக் கதறலை அவன் எதிர்பார்க்கவில்லை.

"மல்லிகா! அசடு! எதற்காக அழுகிறாய்? என்ன நடந்தது? விஷயத்தைச் சொல்லிவிட்டுப் பிறகு அழு!" என்றான் சேகர்.

வீரப்பன் அவர்களைப் பார்த்ததையும் கணக்கையா வந்து இரைந்ததையும் திரைப்படக் குழுவினரின் பேச்சைத் தான் ஒட்டுக் கேட்டதையும் மல்லிகா விவரமாகச் சொன்னான்.

எல்லாவற்றையும் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டுக் கலகலவென்று சிரித்தான் சேகர். அவன் சிரிப்பதை மல்லிகா வியப்புடன் பார்த்தான்.

"என் உள்ளம் துயரத்தில் ஆழ்ந்து போய்த் துடிதுடிக்கிறது. நீங்கள்அமைதியாகச் சிரிக்கிறீர்கள்" என்றான் மல்லிகா, சற்று! வெறுப்புடன் வேறுபக்கம் திரும்பிக் கொண்டு.

சேகர் மறுபடியும் சிரித்துக் கொண்டே மல்லிகாவின் முகத்தைத் தன் பக்கமாகத் திருப்பினான். நிலவொளியில் அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டே, "மல்லிகா! அன்று முழுமதியைப்பார்த்து அனுபவித்துக் கொண்டிருந்தோமே? ஞாபகம் இருக்கிறதா? இன்று பூரண சந்திரன் இல்லை. பிறைச் சந்திரனாக இருந்து நிலவைப் பொழிகிறான். அந்த நிலவு உன் முகத்தில் பட்டு நாலாபுறமும் சிதறு



கிறது. வானத்திலிருந்து முழுமதியே இறங்கி வந்து என்னிடம் கொஞ்சிக் குலாவுவது போல் தோன்றுகிறது!''

மல்லிகாவுக்கு இந்தப் பேச்சு எடுபடவில்லை. அவள் தன் முகத்தை விடுவித்துக் கொண்டு சலசலக்கும் ஆற்றைப் பார்த்துக் கொண்டே பேசினாள்:

''அழகு வர்ணனை கிடக்கட்டும். அதற்கு நேரம் இருக்கிறது. எப்போது வேண்டுமானாலும் வர்ணித்துக் கொள்ளலாம். அவசரமில்லை. தயவு செய்து நான் கேட்பதற்கு உடனே பதில் சொல்லுங்கள்'' என்றாள்.

''சரி, உனக்கு என்ன வேண்டுமோ கேள், சொல்கிறேன்.''

மல்லிகா சட்டென்று நிமிர்ந்தாள். அவன் முகத்தை நேருக்குநேர் பார்த்துக் கொண்டே, ''அந்த நடிகை கூறியது உண்மையா? பொழுது போக்குவதற்காகத்தான் என்னிடம் அளவளாவுகிறீர்களா?'' என்று கோபமாகக் கேட்டாள். அவள் கண்களில் இருந்த கண்ணீரில் நிலவொளி பட்டுச் சிதறியபோது தீப்பொறி பறப்பது போலவே தோன்றியது.

சேகர் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். ''என்ன சொல்வது என்று யோசிக்கிறீர்களா?'' என்று கேட்டாள் மல்லிகா ஏளனமாக.

''என்ன சொல்வது என்று யோசிக்கவில்லை, மல்லிகா! எப்படிச் சொல்வது என்று யோசிக்கிறேன். அவ்வளவுதான். காதல் என்ற வார்த்தைக்கு அர்த்தம் என்ன தெரியுமா மல்லிகா? எனக்கே தெரியாது, காதல் காதல்தான். அதனை எப்படி விளக்க முடியும்? வார்த்தைகளால் காதலைஎப்படி வர்ணிக்கமுடியும்? ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்லலாம், மல்லிகா! உண்மைக் காதல் அரைகுறையானது அல்ல. முழு மனத்துடன், நிறைந்த மனத்துடன் நேசிப்பதுதான் உண்மையான காதலாக முடியும். முழு மனத்துடன் நேசித்தால் அந்த மனத்தில் சந்தேகத்துக்கு இடம் இருக்காது. ஒருவர் உள்ளத்தை மற்றொருவர் நன்கு அறிந்துகொண்ட பிறகு மூன்றாவது மனிதருடைய பேச்சைப் பொருட்படுத்த முடியாது. அது தான் உண்மைக் காதல், மல்லிகா. நான் உன்னை முழு மனத்துடன் நேசிக்கிறேன். உன்னிடம் எனக்குச் சந்தேகம் கிடையாது. உன் உள்ளத்தைப் புரிந்து கொண்டு விட்டேன். மற்றவர்கள் பேச்சைப் பற்றி எனக்கு அக்கறை கிடையாது!'' என்று கூறி நிறுத்தினான் சேகர்.

மல்லிகாவுக்கு அவமானமாகப் போய் விட்டது. அவள் வெட்கித் தலை குனிந்தாள். நாத் தழுதழுக்க, ''தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள். உங்களைப் பற்றிச் சந்தேகப்பட்டது தவறு தான்'' என்றாள்.

''போனது போகட்டும், மல்லிகா. இப்போது நான் சொல்லப் போவதைத் தைரியமாகக் கேட்க வேண்டும். அழக் கூடாது!'' என்றான் சேகர்.

''வேண்டாம்! வேண்டாம்! நீங்கள் அதைச் சொல்லாதீர்கள். என்னால் தாங்கவே முடியாது!'' என்று கெஞ்சினாள் மல்லிகா. அவள் உடல் துவண்டது.

சேகர் அவளுடைய தோள்களைப் பற்றி ஒரு குலுக்குக் குலுக்கி நேராக நிறுத்தினான். அவள் கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டே, ''தாங்கித்தான் ஆகவேண்டும், மல்லிகா! நான் சொல்லப் போவதைக் கேட்டுத் தான் ஆகவேண்டும். வாயை மூடிக் கொண்டு கேட்காவிட்டால் என்ன நடக்கும் என்று எனக்கே தெரியாது!'' என்று இரைந்தான்.

மல்லிகா பிரமித்துப் போய் நின்றாள். சேகர் இப்படி ஆவேசமாகப் பேசி அவள் கேட்டதே இல்லை.

''நாளைக்கு நான் சென்னை திரும்புகிறேன், மல்லிகா. உன்னை விட்டுப் பிரிந்துதான் போகிறேன். ஆனால் என் உள்ளம் இங்குதான் இருக்கும். உன்னைச் சுற்றிச் சுற்றி வரும். சென்னைக்குப் போனபின் என் பெற்றோர்களைக் கலந்து கொண்டு திரும்பி இங்கு வருவேன். உன்னைத் திருமணம் செய்து கொள்வேன். உங்கள் எல்லோரையும் அழைத்துக் கொண்டு போவேன். புரிந்ததா? அப்படி நான் திரும்பும் வரையில் நீ இங்கேயேதான் இருக்க வேண்டும். அழக் கூடாது; வருத்தப் படக்கூடாது. தெரிந்ததா? இப்போது பேசாமல் வீட்டுக்குப் போய்ப் படுத்துத் தூங்கு. சந்தேகத்துக்கு மனத்தில் இடம் அளிக்காதே!'' என்று அதட்டும் தோரணையிலேயே சொன்னான் சேகர்.

மல்லிகா இக்பிரமை பிடித்தவளைப் போலத் திரும்பி நடந்தாள். அவள் மௌனமாகத் திரும்பி நடந்து செல்வதைப் பார்த்துக் கொண்டேயிருந்தான் சேகர். கல் நெஞ்சனான அவனுடைய கண்களிலும் இரண்டு கண்ணீர்த்துளிகள் அரும்பி நின்றன. அதை உணர்ந்ததும் அவனுக்கே வியப்பாக இருந்தது. தோள்களை ஒரு முறை குலுக்கி விட்டுக் கொண்டு ஒரு விரலால் அந்தக் கண்ணீர்த் துளிகளைச் சுண்டி விட்டான். 'இரக்க உணர்ச்சிக்கு இடம் தராதே. ஆபத்து!' என்று எச்சரித்தது அவன் உள்ளம். வேகமாக ஜாகைக்குத் திரும்பினான் அவன். (தொடரும்)

# இரு புதிய சிறந்த தயாரிப்புகள்!

## ரெமிடெக்ஸ் டிடர்ஜெண்ட் பவுடர்

பட்டாடைகளில் படும் கறையை நீக்க, பருத்தி ஆடைகள் சலவை செய்ய எவர்சில்வர் பாத்திரங்கள் பளபளவென்று இருக்க அவசியமானஒருசாதனம்!



## ரெமிடெக்ஸ் லிக்விட் கிளீனர்

கார், சைகிள் முதலிய வாகனங்கள் தூசிநீங்கி துல்யமாக இருக்க, பீங்கான்பாத்திரங்கள், பட்டாடைகள் அழுக்கை அறவே அகற்ற அவசியமானது.

**இவை இரண்டும் ரெமி ஸ்னோ, பவுடர் தயாரிப்பாளர்கள் அளிப்பவை**

ரேடியோ ஸிலோன்: 41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 வரை

---

பிரதி ஒன்று 30 நயா பைசா!

**கரிகால் வளவன் — கி. வா. ஜகந்நாதன்**
(பழைய 81 ந. பை. பிரதிகள்)
100 பக்கங்கள் - 20 - 5 - 58ல் வெளிவரும்

**பி. எஸ். ராமய்யாவின் நாடகங்கள் 3**
சுமார் 80 பக்கங்கள் கொண்டது

**தேரோட்டி மகன்** 25-5-58ல் வெளிவரும்

**பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்**
15 - 6 - 58ல் வெளிவரும்

**மல்லியம் மங்களம்** 1-7-58ல் வெளிவரும்

**பாரதியார் மொழிபெயர்த்த தாகூர் சிறுகதைகள்** பல ஆண்டுகளாக அச்சில் இல்லாதவை
சுமார் 80 பக்கங்கள் - 15-7-58ல் வெளிவரும்

வியாபாரிகளுக்குத் தக்க கழிவு உண்டு

**20 ரூபாய் லாபம்!**

**30 ரூ.புத்தகம் 10 ரூபாய்க்கு!**

விவரங்களுக்கு எழுதுக!

**அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்**
தபால் பெட்டி எண் 1457 - - சென்னை - 18

பாலர் மலர்

# குமரி முத்து

செந்தூர் கூத்தன்

## 6. மர்ம மலை

வெந்நீர்க் கடலில் பிரயாணம் செய்வதிலுள்ள கஷ்டத்தை உணர்ந்த வீராங்கன் மேலும் அதில் பிரயாணம் செய்ய விரும்பவில்லை. தெற்கு நோக்கிச் சென்று கொண்டிருந்த படகைக் குளிர்ந்த நீர் தெரிந்த மேற்குத் திசையில் செலுத்தினான்.

சில நாழிகையில் குளிர்ந்த நீர் நிறைந்திருந்த கடலை அடைந்தான். இப்பொழுது தான் அவன் படபடப்பு அடங்கி நல்ல மூச்சு வந்தது. இந்தக் குறுகிய நேரத்துக்குள் அவன் வெந்நீர்க்கடலில் பட்டபாடு அவனுக்குத் தான் தெரியும். அங்கு வீசிய தாங்க முடியாத உஷ்ணத்தால் அவன் உடல் சிறிது கறுத்துக் கூட விட்டது. நாலா பக்கங்களிலும் வெப்பம் நிறைந்த நீராவி என்றால் அதை யாரால் தான் தாங்கிக் கொள்ள முடியும் ?

அந்தக் கடல் ஏன் அப்படிக் கொதிக்கிறது என்பதை வீராங்கன் சற்று நேரம் யோசித்த பின் தெரிந்து கொண்டான். அந்தக் கடலில் பெரிய பெரிய எரிமலைகள் இருக்க வேண்டும், அம்மலைகள் கந்தக நெருப்பைக் கக்கியிருக்க வேண்டும், அதனால் நீர் சூடாகி எட்டிய வரைக்கும் வெந்நீர்க் கடலாக மாறி விட்டது. எரிமலைகள் நெருப்பைக் கக்கிக் கொண்டே இருப்பதால் கடல் சூடாகிச் சூடாகித் தளதளவென்று கொதிக்க ஆரம்பித்து விட்டது.

இயற்கையின் விந்தைச் செயலை வியந்த படியே படகை வெகு வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தான் வீராங்கன். இந்தத் திசையில் சென்றால் எங்கு போய்ச் சேரலாம் என்பதைப் பற்றி அவன் சிந்திக்கவே இல்லை. எப்படியாவது சுற்றித் திரிந்து குமரிக்கடலை அடைந்து விடலாம் என்ற ஒரு நம்பிக்கை மட்டும் அவன் மனத்தின் ஒரு மூலையில் இருந்தது.

இரண்டு நாட்கள் இடை விடாது பயணம் செய்த பிறகு எதிரே சிறிது தூரத்தில் சிவப்பும் பச்சையுமாகக் கடல் மட்டத்தின் மேல் ஏதோ தெரிந்தது. முதலில் என்னவோ ஏதோ என்று பயந்த வீராங்கன் பிறகு அது ஒரு சின்னஞ்சிறு மலையாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

இந்தத் தீர்மானத்தோடு படகைத் துரிதமாகச் செலுத்திக் கொண்டு மலையை நெருங்கினான். இப்பொழுது அது வெறும் மலையாக மட்டும் தோன்றவில்லை. அந்த மலையில் சிவப்பும் பச்சையுமான ஒரு வகை கடல் மீன்கள் நெருக்கமாகப் படுத்திருந்தன. அவை உருவத்தில் வெகு வேடிக்கையாக இருந்தன. முகம் மனித முகத்தைப் போலவும், உடல் மீனைப் போலவும் மனிதர்களுக்கு இருப்பதைப் போல் இரண்டு கைகளும் இருந்தன. கால்கள் மட்டும்தான் இல்லை.

வீராங்கன் பிரமித்துப் போய் விட்டான். இது போன்ற அதிசய மீன்களை அவன் இது வரையில் பார்த்ததே இல்லை. இப்படி ஒரு மீன் வகை இருக்குமென்று அவன் கனவில் கூட நினைத்ததில்லை.

வீராங்கன் இப்படிப் பலவாறாக எண்ணிக் கொண்டே வரும்பொழுது எதிரே தெரிந்த மலையில் ஒரு மாபெரும் அதிசயம் நடந்தது.

வீராங்கனின் படகு, மலையின் அருகில் போனதும் அந்த மலையின் மேல் இருந்த மீன்களில் ஒன்றைக் கூடக் காணவில்லை. அப்படி என்றால் அவை எங்குதான் போயிருக்கும்? என்னமாயமாய்மறைந்திருக்கும்?

வீராங்கன் குழம்பினான். எதிரே இருந்த மலை, மீன்கள் மறைந்து விட்டதால் அதன் சுய நிறத்தோடு வெண்மையாகத் தெரிந்தது. அதில் கறுப்பு கறுப்பாகச் சில பொந்துகளும் தெரிந்தன. வீராங்கன், மலையில் மீன்கள் இருப்பதைப் போல் தெரிந்தது வீண் பிரமையோ என்று கூட எண்ணினான். இப்படி எண்ணிய பொழுது அவன் எதிர்பாராத இன்னொரு அதிசயமும் நடந்தது.

இத்தனை நேரம் எதிரே தெரிந்த மலை, கண்ணிமைக்கும் நேரத்தில் நீரில் மூழ்கி மறைந்து விட்டது. வீராங்கனுக்கு உடல் 'வெட வெட' வென்று நடுங்கியது. கடல் மட்டத்துக்கு மேல் இருந்த மலை நீருக்குள் மூழ்கிப் போனால் அதைச் சாதாரணமாக நினைக்க முடியுமா ? எவ்வளவு பெரிய தைரியசாலியும் நடுங்கித்தான் போவான்.

வீராங்கனுக்கு எடுத்த வெடவெடப்பு இலேசில் அடங்கவில்லை. முதலில் என்னவென்றால் மலையில் தெரிந்த மீன்கள் மறைந்தன ; பிறகு என்னவென்றால் மலையே மறைந்து விட்டது. நிச்சயம் இதில் மாய மந்திரமோ, இந்திர ஜாலமோ இருக்கத்தான் வேண்டுமென்று அவன் நினைத்தான்.

இப்படி நினைத்ததும் அவனுக்குப் பல ஐயங்கள் எழுந்தன. மாயமும் மந்திரமும் நிறைந்த இடத்தில் வீரத்துக்கு வேலை கிடையாது அல்லவா ? எவ்வளவு பெரிய வீரனும் ஒரு கோழை மந்திரவாதியின் கை

ஆசைவுக்கு அடிபணியத்தானே வேண்டும்? இதைத் தவிர எந்த நேரத்திலும் உயிருக்கு ஆபத்து உண்டு என்பது நிச்சயம்.

உயிருக்கும் ஏதேனும் ஆபத்து நேரலாம் என்று எண்ணிய வீராங்கனுக்குப் பல காத தூரத்திலிருக்கும் தாயாரின் நினைப்பும், தாத்தாவின் நினைப்பும் வந்தன. 'தாய் என்ன நிலையில் இருக்கிறாளோ? தாத்தா தன்னைக் காணாது என்ன செய்தாரோ? ஊருக்குத் திரும்பிச் சென்று தன் மகளிடம் வீராங்கன் காணாமல் போனதைப் பற்றிச் சொன்னாரா? அல்லது 'அவன் குமரிக்கடலுக்குத்தான் போயிருக்க வேண்டும்' என்று எண்ணி அவனைத் தேடிக் கொண்டு புறப்பட்டாரா? அப்படிப் புறப்பட்டிருந்தால் ஏதாவது ஆபத்தில் அவர் அகப்பட்டிருப்பாரோ?'

இப்படிப் பலவித எண்ணங்கள் அவனை அலைக்கழித்தன. அம்மாவையும் தாத்தாவையும் பார்க்க வேண்டுமென்ற ஆவல் அவனுக்கு எழுந்தது. உடனே படகைக் கபாடபுரத்தை நோக்கித் திருப்புவதற்கு முனைந்தான்.

நல்லவேளையாக அந்தச் சமயத்தில் தங்கத்தீவுக் கிழவனின் முகம் அவன்முன் தோன்றியது. அவனைப் பார்த்துக் கடகட வென்று வாய்விட்டுச் சிரித்தது. பிறகு, "வீராங்கா! இவ்வளவுதானா உன் வீரம்? திரும்பினால் முத்தோடுதான் திரும்புவேன் என்று மார்தட்டினாயே! அவ்வளவும் நடிப்புத்தானா?..." என்று ஏளனம் செய்தது.

வீராங்கனுக்கு யாரோ செவியில் அறைவதுபோல் இருந்தது. கண்ணைக் கசக்கி விட்டுக் கொண்டான். எதிரே ஒருவரையும் காணவில்லை. வெறும் பிரமைதான் என்றாலும் அதில் உண்மை இருப்பதை உணர்ந்தான். உடனே தனக்குள்ளேயே ஒரு தீர்மானத்தைச் செய்து கொண்டான். அதாவது 'இனி எப்பேர்ப்பட்ட ஆபத்து வந்தாலும், தடை ஏற்பட்டாலும் அத்தனையையும் வென்று, தான் குமரிமுத்தோடு ஊர் திரும்புவது. இல்லையேல் உயிரை விட்டு விடுவது' என்பதுதான் அந்தத் தீர்மானம்.

இந்தத் தீர்மானப்படியே கடைசி வரையில் நடப்பது என்று உறுதி செய்துகொண்டான். எனவே அடுத்து என்ன செய்வது என்பதைக் குறித்து யோசித்தான்.

இப்பொழுது மூழ்கிப் போன மலையைப் பற்றியும் மறைந்த மீனைப் பற்றியும் அதில் அடங்கியுள்ள மர்மத்தையும் அறிய அவன் உள்ளம் விழைந்தது. இந்த மலையின் உண்மையைக் கண்டு பிடித்தால் அதனால் ஏதேனும் நன்மை கிடைக்கலாம். தீமை கிடைத்தா



லும் பரவாயில்லை. அதை எப்படியும் தீர்த்துக் கொள்ளலாம் அல்லவா?

வீராங்கன் இவ்வாறு துணிந்ததற்கு இன்னொரு காரணமும் இருந்தது. இந்த மலையின் மர்மத்தை ஆராயப் போய்க் குமரிமுத்து சம்பந்தமாக ஏதாவது சமாசாரங்கள் கிடைத்தாலும் கிடைக்கலாம். அல்லது வேறு புதிய செய்திகளும் விவரங்களும் தெரிந்து கொள்ளலாம் அல்லவா?



அதன்படியே சுறுசுறுப்பாகக் காரியத்தைச் செய்யத் துவங்கினான். முதலில் படகில் இருந்த பழ வகைகளையும் காய் கிழங்கு தேங்காய் முதலியவற்றையும் வயிறு புடைக்க ஒரு கைபார்த்தான்.

பிறகு தன் இடையில் வாள் உறையோடு கட்டித் தொங்கிய நான்கு தேங்காய் குடுவைகளையும் அவிழ்த்து எடுத்தான். அவை நான்கும் ஒரு கைக்குள் அடங்கும் அளவினதாகவே இருந்தன.

முதலில் சிவப்பு நிறக் குடுவையைத் திறந்து அதில் இருந்த சிவப்புப் பொடியைச் சிறிதளவு உள்ளங் கையில் கொட்டி மூக்கால் உறிஞ்சினான். அடுத்து வெள்ளை நிறக் குடுவையை எடுத்து அதில் இருந்த வெள்ளைப் பொடியைச் சிறிதளவு கையில் எடுத்து வாயில் போட்டு உள்ளுக்கு விழுங்கினான். கடைசியாக, பச்சை வர்ணக் குடுவையை எடுத்து அதில் இருந்த பச்சைப் பொடியை வேண்டிய அளவு கையில் கொட்டிக் கொண்டு உடல் முழுவதும் பூசிக் கொண்டான். தன்னுடைய கத்தியிலும் ஈட்டியிலும்கூட அந்தப் பச்சைப் பொடியைப் பூசிக் கொண்டான்.

இந்த வேலை முடிந்த பிறகு அந்தக் கறுப்புக் குடுவை அவன் பார்வையில் விழுந்தது. அதில் என்ன இருக்கும்? அதன் தன்மை என்ன? என்பதை யெல்லாம் அறிய அவனுக்கு ஆவல் உண்டாயிற்று.

ஆனால் தங்கத்தீவுக் கிழவன் எச்சரித்திருந்தது அவன் நினைவுக்கு வந்தது. அதைத் திறந்தால் ஏதாவது ஆபத்து நேர்ந்து விட்டால் என்ன செய்வது? ஆகவே, கபாடபுரத்துக்குச் சென்று திறந்து பார்த்துக் கொள்ளலாம் என்று பேசாமலிருந்தான்.

நான்கு குடுவைகளையும் ஒன்று சேர்த்துப் பழக்குலையைப் போல் உடைவாளுக்கு அருகில் இறுக்கமாகக் கட்டிக் கொண்டான். பிறகு படகிலிருந்து மெள்ள இறங்கி நீரில் மூழ்கினான். படகு தன் தோழன் கடலில் மூழ்கிப் போனதைக் கண்டு வாய்விட்டுக் கதறுவதைப் போல் அந்த இடத்திலேயே ஆடி அசைந்து கொண்டு மெல்லிய 'மர்மர்' என்ற ஒருவித சோக ஒலியை எழுப்பிக் கொண்டிருந்தது. (தொடரும்)

## மே மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. மே மாதப் போட்டிக்கு மே 1-ந் தேதியிலிருந்து 31-ந் தேதி வரை கதைகள் எழுதியனுப்பலாம். மே மாதப் போட்டிக்கு வந்த கதைகள் ஜூன் மாதம் முழுதும் பரிசீலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஜூலை மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடைவிட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

—ஆசிரியர், கல்கி

# சுகமான சவாரி ?

மெக்கானிக் :
ஆம், ஹிந்த் அம்பாஸடர் ஸைக்கிளில் ஏறி சவாரி செய்வதே ஒரு அலாதி இன்பம்

ஸைக்கிளிஸ்ட் :
எப்படி ?

மெக்கானிக் :
இதோப் பாருங்கள். புரட்சிகரமான மாறுதல் கொண்டுள்ள புதிய ஹப். இது அனாயாசமாக பெடல் செய்யவும், ஸைக்கிளை அதிகத் திறம்பட சுற்றவும் வைக்கிறது.

ஸைக்கிளிஸ்ட் :
வாஸ்தவமா ?

மெக்கானிக் :
இதுமட்டுமல்ல, ஹப்பை சுற்ற வேண்டுமென்றால் இப்பொழுது சக்கரத்தை வெளியே சுற்ற வேண்டுமென்பதில்லை. இந்த ஹப்-ஷாப்புகளை சிறிதே நேரத்தில் உள்புறமும் வெளிப்புறமும் தள்ளமுடியும்.

ஸைக்கிளிஸ்ட் :
ஆம். முதலீட்டிற்குத் தகுந்த பெறுமானம் இதுவே. நான் ஹிந்த் அம்பாஸடர் ஸைகிளையே வாங்கப்போகிறேன்





## ஹிந்த் அம்பாஸடர்

ஹிந்த் ஸைக்கிள்ஸ் லிமிடெட் 250 வொர்லி பம்பாய் 18.

---

ஆந்திரா, மைசூர், கேரளா மற்றும் சென்னைக்கு ஸோனல் ஆர்கனைசர்கள் :

ப்ரீமியர் ஸப்ளையர்ஸ் பிரைவேட் லிமிடெட், 9, ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, சென்னை-1

---

# பார்கோ

## டீசல்கள்





உங்கள் அருகாமையில்
உள்ள டீலர்களை
விசாரியுங்கள்

முன்னேற்றத்துடன் தயாரிப்பவர்கள்

தி
பிரீமியர் ஆட்டோமோ
பைல்ஸ் லிமிடெட்
பம்பாய்

ஒரு மணி நேரமாக என் மனம் வெள்ளைப் பானையில் கொதிக்கும் வெந்நீர் போல் பொங்கிக் கொண்டிருந்தது. என் எண்ணத்தில் இடி விழ, என் மனக்கோட்டை சரிந்து சாய, என் பாட்டனுர் உத்தண்டராமரிடமிருந்து வந்த அந்தக் கடிதம்தான், அப்படிப் பட்ட மனக்கொதிப்பை எனக்கு உண்டாக்கி விட்டது. அந்தப் பாழும் கிழம் அப்படி எழுதி விடும் என்று நான் உண்மையாகவே எதிர்பார்க்கவில்லை. என்னை விட்டால் அதற்கு வேறு சமீப உறவினருமில்லை; அதனை விட்டால் எனக்கு வேறு சமீப உறவினருமில்லை. சிறு வயதிலேயே என் பெற்றோர்கள் என்னைப் பெற்று அதன் கையில் போட்டு விட்டுச் சென்று விட்டார்கள். என்னை வளர்த்துப் படிக்க வைத்து ஆளாக்கியது அதுதான். உண்மை நிலை அப்படியிருக்கச் சற்றும் பற்றில்லாமல், அது அப்படிக் கடிதம் எழுத, நான், புதிதாக என்ன தவறு செய்து விட்டேன் என்று எனக்குப் புரியவில்லை. அந்தக் கிழத்தை இனிச் சும்மா விட்டு வைத்தல் கூடாது. 'மயிலே! மயிலே! இறகு போடு' என்றால் போடுமா? இதற்கு ஒரு முடிவு கட்டியாக வேண்டும். என்ன வகையில் என் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று நான் தீவிரமாகச் சிந்தித்துக்கொண்டிருந்த போதுதான் என் ஆப்த நண்பன் சுந்தரம் என் அறையினுள் நுழைந்து என் எதிரிலிருந்த நாற்காலியின்மீது உட்கார்ந்தான். என் சிந்தனைத் தொடர் அறுபட்டு விடாமல் இருக்கும் பொருட்டு, அவன் வருகையை ஆமோதிக்கும் பாவனையில் தலையை மட்டும் இலேசாக அசைத்து விட்டு, என் கருத்தை தோட்டத்திலேயே கவனம் செலுத்தினேன்.



"என்னப்பா! வாய் திறவா மௌனியாகி விட்டாய்! அத்துடன் எப்போதும் மந்தகாசம் மலர்ந்திருக்கும் உன் முகத்தில் இப்போது அந்தகாரம் குடியேறியிருக்கிறது. கண்கள் வேறு கலங்கிப் போயிருக்கின்றன. என்ன விசேஷம்?" என்று வியப்புடன் வினவினன் சுந்தரம்.

மேஜையின்மீது கிடந்த என் பாட்டனுரின் கடிதத்தைச் சுட்டிக் காட்டினேன் அவனுக்கு.

எங்கள் இருவருக்குள்ளும் ரகசியம் என்பதே யில்லையாதலால் சுந்தரம் நான் காட்டிய கடிதத்தை எடுத்துப் படித்து விட்டு, "அவர் அவ்வளவு வெறுக்கும்படி நீ நடந்து கொண்ட லாமா?" என்று கேட்டான்.

"நான் வாரத்துக் கொருமுறை அவரைப் பேட்டி கண்டு தண்டம் சமர்ப்பிக்க வேண்டுமா? எனக்கு வரும் சம்பளத்தை என் விருப்பப்படி செலவு செய்ய எனக்கு உரிமையில்லையோ? இந்தச் சிறு வயதில் கூட என் விருப்பப்படி செலவு செய்யச் சுதந்திரமில்லா விட்டால், பெரியவனுகிக் குடும்பத்தில் ஈடுபட்டு விட்ட பிறகு நினைத்ததை வாங்க முடியுமா? விரும்புமிடத்துக்குப் போக முடியுமா? இஷ்டப்பட்டதைத் தின்ன முடியுமா? நான் இப்போதே ஒரு பட்டினத்தடிகளாகவோ, தாயுமானவராகவோ மாறிவிட வேண்டுமென்பது அவரது ஆவல். இது நடக்குமாடா?"

"நீதானே அவருடைய நேரான வாரிசு? அப்படியிருக்கத் தம் சொத்தில் ஒரு பைசா கூட உனக்கு எழுதி வைக்கப் போவதில்லையென்று எழுதி யிருக்கிறாரே! அப்படி அவருக்கு எவ்வளவு ஆஸ்தி யிருக்கிறது?"

"முப்பதினுயிரமோ, நாற்பதினுயிரமோ பாங்கியில் போட்டிருப்பதாகக் கேள்வி. அவ்வளவும் அவர் உத்தியோகத்திலிருந்தபோது கொள்ளை யடித்த பணம், அப்பா! சுயார்ஜிதமல்லவா? அதனுல் இப்படி மிரட்டுகிறார்."

"அவருக்கு என்ன வயசிருக்கும்?" என்று கேட்டான்.

"எண்பதோ, தொண்ணூறோ ......யார் அவர் ஜாதகத்தைப் பார்த்தது?"

"ராகவா! அவர் இன்னும் உயிருடன் இருக்கப் போவது, ஆறு மாதமோ, அல்லது உயர்ந்தது ஒரு வருஷமோ! அதற்கு மேலிராது. அது வரையிலும் அவரிடம் கொஞ்சம் நயத்துடனும், பயத்துடனும் நீ நடந்து கொண்டால், அவர் மனம்மாறி உன்மீது உயிலை எழுதி வைத்து விடுவார். அவர் கண் மூடிய பிறகு உன் இஷ்டப்படி நடந்து கொள்ளலா மல்லவா?"

"அவ்வளவு எளிதில் ஏமாறுகிற ஆசாமியல்ல அவர். எமகாதகப் பேர்வழி."

"நண்பா! நீ அப்படி நினைப்பது தவறு. எப்படிப்பட்டவருடைய மனநிலையும், எல்லாச் சமயங்களிலும் ஒரேமாதிரி இருக்க முடியாது. 'தானுடாமற் போனுலும் தன் சதையாடும்' என்பது உலகம் கண்ட உண்மை. உடற் பந்தமும், ரத்த சம்பந்தமும், விலக்கினுல் கூட விலகாது; உன்னை எடுத்து வளர்த்த அந்தக் கரங்கள், உன்னையடிக்க விரும்பாது. அப்படி அடித்தாலும் அந்த அடிகள் மென்மையாகவே விழும்! நன்மையாகவே முடியும். உன் எழிலையும், வளர்ச்சியையும் கண்டு மகிழ்ந்த அந்தக் கண்கள் நீ வறியனுய் வாடுவதைக் காணச் சகியா. நீ அனுதையாய் அலைகின்றாய் என்பதைக் கேட்க அந்தக் காதுகள் இணங்கா. உன்னை இறுதியாக எச்சரிக்கவே அவர் இப்படி எழுதியிருக்கிறார் என்று நான் உண்மையாகவே நினைக்கிறேன். வாழ்க்கையில் திடீரென்று நிகழும் ஒரு சிறு சம்பவமும் ஒருவரது நெடுநாளையக் குறிக்கோளை மாற்றிவிடக்கூடும் என்பதற்கு எத்தனையோ உதாரணங்கள் காட்டுவேன்

ஏன்? என் கையிலிருக்கும் இந்த ஆங்கிலப் பத்திரிகையில் வெளிவந்திருக்கும் வியப்பான செய்தியினைப் படித்துக் காட்டுகிறேன் கேள்.

'' இங்கிலாந்தில், ஒரு ஹோட்டலில் ஓர் ஆங்கிலேய இளைஞனும், ஓர் ஆங்கிலேய மூது மகனும் ஒரு மேசையினருகில் அமர்ந்து சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தார்கள். இடையே அந்தக் கிழவர், அவ் வினைஞனைப் பார்த்து, ' அப்பா! அதோ இருக்கும் உப்புத் தட்டைத் தயவுசெய்து என்னருகில் எடுத்து வைப்பாயா?' என்று கேட்டான். ' தாயே! தாங்கள் விரும்புவது உவர்ப்புச் சுவையினைத் தரும் உப்புத் தட்டாயினும் அதனை இனிமைச் சுவைபட உங்கள் அருகில் எடுத்து வைக்க மகிழ்ச்சி கொள்கிறேன் ' என்று இன் முகத்துடன் மதுரம் ததும்பப் பேசி இளைஞன் அந்த உப்புத் தட்டினை அவனருகில் எடுத்து வைத்தான். சிற்றுண்டியினை முடித்துக் கொண்டு எழுந்து செல்லுவதற்கு முன் அக் கிழவர், முன் பின்னறியாத அவ்விளைஞனுக்கு ஐந்நூறு பவுனுக்கு ஒரு செக் எழுதிக் கொடுத்து விட்டுச் சென்றான். இந்தச் செய்தி நம்பத் தகாததைப்போல் விருப்பினும் உண்மையில் நிகழ்ந்ததுதானே. ஆதலால் நீ இன்னும் சிறிது காலம் உன் போக்கினை மாற்றிக் கொண்டு உன் பாட்டனார் எதிர்பார்க்கிறபடி நடந்து கொள். அப்புறம், தம் சொத்தினை உனக்கு எழுதி வைக்காமல் வேறு யாருக்கு எழுதி வைத்து விடுவாரென்று பார்க்கலாம். கரைத்தால் கல்லும் கரையும் என்பதை மறந்து விடாதே.''



'' சுந்தரம்! என் பாட்டனார் விஷயத்தில் எனக்கென்னவோ சிறிதும் நம்பிக்கையில்லை. அவர் ஒரு பிடிவாதக் குன்று; பிளாப் பிசின்; வளையாத எஃகு. இருந்தாலும் உன்னுடைய கருத்துப்படி என் பழைய வழியை மாற்றிக் கொண்டு புது மனிதனாகச் சிறிது காலம் நடித்துப் பார்க்கிறேன்!''

• • •

இது நடந்த அடுத்த வாரத்தில் மூன்றும் சனிக்கிழமை வந்தது. அன்று ஆபீசுக்கு விடுமுறை நாள். ஞாயிற்றுக் கிழமையும் கூடவே இரண்டு நாட்கள் ஓய்வில் என் பாட்டனாரைப் பார்க்கப் புறப்பட்டேன். நான் உத்தியோகம் பார்த்துவந்த ஊருக்கும் என் பாட்டனார் வசித்து வந்த ஊருக்கும் இடையில் இருபது கல் தூரம்தான். அடிக்கடி பஸ் போக்குவரத்து உண்டு. பாட்டனார் சந்தி தானத்துக்குச் செல்லுமுன், பழக்கடைக்குச் சென்று, அவருக்குப் பிடித்தமான கறுப்புத் திராட்சை இரண்டு சேரும், மலைவாழைப் பழம் இரண்டு டஜனும் வாங்கிக் கொண்டு அவர் வீட்டினுள் புகுந்தேன். தாத்தா கூடத்தில் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். உள்ளே சென்ற நான், முதல் வேலையாக, என் அங்கவஸ்திரத்தை இடுப்பில் வரித்து கட்டிக்கொண்டு இரண்டு முறைகள் அவரைக் காலில் விழுந்து வணங்கி, பின்னர் பையிலிருந்த பழங்களை எடுத்துக் கொடுத்துப் பணிவுடன் கைகட்டி நின்றேன்.

முதலில் சிறிது நேரம் மௌனம் சாதித்த பாட்டனார், ''என்னடா! ஆச்சரியமாயிருக்கிறது? வயது சென்ற பாட்டனார்மீது திடீரென்று பேரனுக்குக் கரிசனம் ஏற்பட்டு விட்டது! உம்...சரி...நீ வந்தாலே போதுமே; இவையெல்லாம் எதற்கு?'' என்று மெள்ளத் திருவாய்மலர்ந்தருளினார்.

தாத்தாவைக் கண்டு என் மனமும் இளகவில்லை; கண்களில் நீரும் வரவில்லை. இருந்தாலும் கண்களைக் கசக்கிக்கொண்டு, துக்கம் தொண்டையில் அடைத்துக் கொண்டு பேச மாட்டாது திணறுகிறவனைப் போல் விசித்து விசித்து, அழுது கொண்டேன். ''என் அறியாமையையும் அகங்காரத்தையும் மன்னித்து விடுங்கள். இனி நான் முன்பு போல் நடந்து கொள்ள மாட்டேன். எனக்குப் புத்தி வந்து விட்டது. எங்களூரில் ஒரு வரிடம் இரண்டுமாதகாலமாய் இராமாயணப் பிரசங்கத்தைக் கேட்டுதிலிருந்து நான் திருந்தி விட்டேன்'' என்று அழுகிற பாவனையில் கூசாமல் ஒரு பொய்யைச் சொன்னேன்.

''இத்தனை வருஷங்களாக நான் சொல்லி வந்த நல்ல வார்த்தைகளைக் கேட்டுத் திருந்தாத நீயா இரண்டு மாதங்களில் திருந்தியிருப்பாய்! நீ சொல்வது எனக்கு நம்பமுடியாததாகவல்லவா இருக்கிறது!''

'' தாத்தா! உலகில் பெரிய புரட்சிகளெல்லாம், ஒரு சிறிய நிகழ்ச்சியைக் காரணமாகக் கொண்டே நடைபெற்றிருக்கின்றன என்ற உண்மையை நான் உங்களுக்கு ஞாபகப் படுத்துவது பேதமை யல்லவா? நீண்ட காலமாக அரச போகத்தில் ஆழ்ந்து கிடந்த கௌதமனை ஒரு புத்தனாக மாற்றியதும், நாடு பிடிக்கும் வெறி கொண்டு கொடுமைகளில் திளைத்து வந்த அசோகனைச் சாந்தித் தூதனாக மாற்றியதும் அவரவர் வாழ்க்கையில் குறுக்கிட்ட ஒரு சிறு நிகழ்ச்சிதானே? பாறைக்கு நெக்கு விடாப் பாறை, பசுமரத்தின் சிறு வேருக்கு நெக்கு விடுகிறதல்லவா? மனத்தின் போக்கினை வரையறுத்துத் திட்டமாகக் கூறமுடியாது என்பதுதான் உங்களுக்கு நன்றாகத் தெரியுமே?''

'' உம்......மனோதத்துவம் கூடப் பயின்று விட்டாய் போலிருக்கிறது......ரொம்ப சரி!

'எதற்காகப் பணத்தைச் செலவு செய்து இந்தப் பழங்களை வாங்கி வந்தாய்? எனக்காகவோ, உனக்காகவோ இப்படி நீ வீண் செலவு செய்யக்கூடா தென்றுதானே உனக்கு அடிக்கடி எச்சரிக்கை செய்து வருகிறேன்? பணத்தினாலும் பழங்களினாலும் ஒருவர் அன்பினை விலை கொடுத்து வாங்கிவிட முடியுமாடா?'' என்றார் தாத்தா.

''இப்படி நீங்கள் பேசக் கூடாது தாத்தா! உங்கள் அன்பினை, உண்மையான என் மன மாற்றத்தினால் பெறுவேன். உங்களுக்காக நான் செலவு செய்வது வீண் செலவாகுமா? அது என் கடமையல்லவா? உங்களுக்கோ வயதாகி விட்டது. இன்னும் எத்தனை வருஷங்கள் நான் உங்களுக்கு வாங்கித் தந்துவிடப் போகிறேன்?''

''ஓஹோ! நான் எப்போது சாவேன்; என் சொத்துக்கள் உனக்கு எப்போது வரும் என்று சோதிடம் வேறு பார்த்து வைத்துக் கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது. அதனால் தான் இந்தப் புரட்சியோ?''

''என்ன தாத்தா! நான் எதனைச் சொன்னாலும் அதற்கு எதிராகவே சொல்லி என் வாயை அடக்குகிறீர்கள். நீங்கள் இன்னும் எத்தனை வருஷங்கள் வாழ்ந்தாலும் மறுப்பும், வெறுப்புமில்லாமல் இப்போது செய்வது போல் உங்கள் அருகிலிருந்துகொண்டே உங்களுக்குத் தொண்டு செய்வேன்...இது உறுதி! இனி என் போக்கினைப் பாருங்கள்!''

''பார்க்காமலா இருந்துவிடுவேன்......எண்பத்தைந்து வருஷங்களைக் கண்ட நான் ஓர் ஏமாளியல்ல!''

நீண்ட காலத்துக்குப் பிறகு எனக்கும் என் பாட்டனாருக்கும் ஏற்பட்ட சந்திப்பு இது.

அன்றிரவு நானே என் பாட்டனாரின் படுக்கையை விரித்துப் போட்டேன். சமையற்காரி கொடுத்த பாலையும் வெந்நீரையும் கொண்டு சென்று அவர் படுக்கையறையில் வைத்தேன். அவர் படுத்துக்கொண்ட பிறகு அவர் கால்களை, 'வேண்டாம்' 'வேண்டாம்' என்று அவர் தடுத்தபோதும், தூங்கும் வரையில் பிடித்தேன். அந்த இரண்டு நாட்களிலும் அவர் துணிகளை நானே துவைத்து வைத்தேன். அவர் வெளியில் கிளம்பும்போது, அவர் கைத்தடியினை எடுத்து வந்து அவர் கையில் கொடுத்தேன். அவர் நிழல் போல, அவர் சென்ற இடங்களுக்கெல்லாம், அவரை ஒட்டிக் கொண்டு சென்றேன்.

இப்படியாக ஒவ்வொரு வார முடிவிலும் ஞாயிற்றுக்கிழமையன்று வந்து என் பாட்டனாரின் எடுபிடியாக நான் வேலைகள் செய்து வந்ததால், சமையற்காரப் பாட்டிக்கு வீட்டில் பாதிக்கு மேல் வேலை குறைந்துவிட்டது. பாட்டனார் என் தொண்டுகளை ஒரு முறை கூடப் பாராட்டவில்லையானாலும், சமையற்காரப் பாட்டி என்னை வாயார, மனமார வாழ்த்தினாள். ஒவ்வொரு வாரமும் தாத்தாவுக்கு 'இது பிடிக்கும், அது பிடிக்கும்' என்று ஏதேனும் வாங்கிச் செல்வேன். அவர் என்னை 'உதவாக்கரை, ஊதாரி' என்று திட்டின போதும் அவற்றினை வாங்கிச்செல்லத் தவறுவதில்லை. 'கரைத்தால் கல்லும் கரையும்'

''என்ன ஸார்! வீடு தாண்டி விட்டது, எங்கேயோ ஞாபகமறதியா நடந்துவிட்டிருக்கீங்க?''



''ஆமாம்! எனக்கு அடிக்கடி ஞாபக மறதி வர்றது! டாக்டரைப் பார்த்து விட்டு வருகிறேன்!''

''அவர் என்ன செய்தார்?''

''முதலிலேயே அவர் என்னிடம் பீஸை வாங்கிக் கொண்டு விட்டார்!''

என்று சுந்தரம் சொன்ன வாசகத்தில் முழு நம்பிக்கை வைத்ததாலேயே இப்படியெல்லாம் செய்து வந்தேன்.

ஒரு ஞாயிற்றுக்கிழமை நான் என் பாட்டனாரைக் காணச் சென்றபோது, ஒரு காஷ்மீர் சால்வையொன்றினை முப்பது ரூபாய்க்கு வாங்கிச் சென்று அவர் முன்வைத்தேன்.

''ஏண்டா! உன்னை யாரடா இதனை வாங்கி வரச் சொன்னது? குளிரைத் தடுக்கச் சாதாரணத் துப்பட்டி போதாதோ! பணத்தை வீண் செலவு செய்து கொண்டு, ஒவ்வொரு வாரமும் நீ எதற்காக இங்கு வரவேண்டும்? இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை வந்தால் போதாதா? இப்படிப் பணத்தை வாரி இறைத்தால் நீ என்ன சேர்த்து வைக்கப் போகிறாய்! உனக்கோ ஒரு பைசா ஆஸ்தியில்லை. கலியாணம் வேறு நடந்தாக வேண்டும். உன் எதிர்காலமோ நீண்டு கிடக்கிறது. நீ எப்படித்தான் பிழைக்கப் போகிறாயோ?'' என்று ஓரே இரைச்சலாக இரைந்தார்.

''தாத்தா! உங்களுக்குச் செலவு செய்தா நான் ஏழையாகிவிடப் போகிறேன்? இந்தக் குளிரை உங்கள் உடல் தாங்க முடியாதே என்றுதான் காஷ்மீர் கம்பளி வாங்கிவந்தேன். என் கல்யாணத்தை நடத்துவதற்கும், என் எதிர்கால வாழ்வினைக் கவலையில்லாமல் செல்வதற்கும் நீங்கள்தாம் இருக்கிறீர்களே?'' என்று வெகு சாமர்த்தியமாகவும் நாகரிகமாகவும் என் அந்தரங்கக் கருத்தினைப் பேச்சினிடையே நுழைத்து வெளியிட்டேன்.

பாட்டனார் பதில் ஒன்றும் சொல்லாமல் தம் அறைக்குள் சென்று படுத்துக் கொண்டார். அதனால் நான் மனமுடைந்துவிடவுமில்லை; நடிப்பினைக் கைவிடவுமில்லை. என் பாட்டனாரை வழிக்குக் கொண்டு வருகிற முயற்சிகளில் மேலும் ஒரு படி ஏறி, அவரது வளர்ப்புப் பிள்ளையான ஜிப்பியை இரண்டு வயது நாயினை—அவர் வெளியே உலவச் செல்லும்போது அவருடன் பிடித்துக் கொண்டு செல்வேன். ராக்ஷஸ பலங்கொண்ட அந்த நாய், என்னை இழுத்துக் கொண்டு ஓடுமிடங்களுக்கெல்லாம் மூச்சு வாங்க ஓடுவேன்.



ரஸிகர்:—ஜலதரங்கம் கச்சேரி ஆரம்பிப்பதற்கு எவ்வளவு நேரம், ஐயா?......

மற்றவர்:—இதோ ஆயிடுத்து......ஆரம்பித்து விட வேண்டியதுதான்!

அதற்கு என் செலவிலே ரொட்டி வாங்கிப் போடுவேன். பாலூற்றித் தட்டின அதன் முன் கொண்டு வைப்பேன். அது படுப்பதற்கெனப் பாட்டனார் வாங்கி வைத்திருந்த பஞ்சு மெத்தையினைத் தட்டிப்போட்டு அதன் மீது அதனைப் படுக்கச் செய்வேன். அதன் பக்கத்தில் படுத்துக் கொண்டு அதனுடன் கொஞ்சி விளையாடுவேன். தாத்தாவின் எதிரில் அதற்கு முத்தங்கள் கொடுத்து, அகராதியிலிருந்து புதிதாகக் கற்று மனப்பாடம் செய்து வைத்துள்ள அன்பு மொழிகளால் அதனைச் சீராட்டுவேன்;

ஒருநாள் தாத்தா என்னைப் பார்த்து, "ராகவா! ஜிப்பிக்கு உன்னை ரொம்பவும் பிடித்திருக்கிறது. உனக்கும் அதன்மீது அபார ஆசை. நீ வந்து விட்டால் அதன்பாடு ஒரே கொண்டாட்டம்தான். உன்மேல் தாவுகிறது. உன்னைச் சுற்றிச் சுற்றி வந்து பல்லைக் காட்டுகிறது" என்று சிரித்துக்கொண்டே பேசினார்.

என் வலையில் தாத்தா இட்டமாக அகப்பட்டுக் கொண்டதைக் கண்ட நான், "இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது, தாத்தா! வாயில்லாப் பிராணியாயிருந்தாலும் அது அறிவுள்ளதல்லவா! நாயின் நன்றிதான் காவியப் புகழ் பெற்றதாயிற்றே. மேலும் உங்களுக்குப் பிரியமான ஜிப்பிக்குத் தொண்டு செய்வதன் மூலம் உங்களுடைய பிரியத்தைச் சம்பாதிக்க முடியுமானால் என் முயற்சிகள் நிச்சயமாக வெற்றி பெறும் என்பதில் ஐயமேயில்லை" என்று சொல்லிக் கொண்டே பல்லைக் காட்டினேன்.

"உன் எண்ணம் வெற்றி பெற நீ செய்யும் முயற்சிகள் விசித்திரமானவைகளடா" என்று சுருக்கென்று ஒரு சூடு கொடுத்து விட்டுத் தம் அறைக்குச் சென்று விட்டார் தாத்தா.

அவர் கொடுத்த சூட்டினைக் கண்டும் நான் மனம் ஒடிந்துவிடவில்லை. கரைத்தால் கல்லும் கரைந்துதானாக வேண்டும் என்பது என் ஆப்த நண்பரின் வாக்கியம் ஆயிற்றே.

கடந்த ஒரு வருஷகாலமாக—அதாவது என் நண்பன் சுந்தரம் எனக்கு நல்லுபதேசம் செய்த நாளிலிருந்து—ஒவ்வொரு வாரமும் தாத்தா இருந்து வந்த ஊருக்குச் செல்வதும், அவருக்கும் அவருடைய ஜிப்பிக்கும் பிடித்தமான பொருள்களை வாங்கிக் கொடுப்பதும், அவ்விருவருக்கும் தொண்டுகள் புரிவதும் என் வாராந்திர வேலைகளாகி விட்டன. என் தாத்தாவுடன் நான் ஒட்டத் தொடங்கிய ஆரம்ப கட்டத்தில் அவர் காட்டிய கடுமுகமும் விடுத்த சொல்லம்புகளும் வர வரக் குறைந்து முடிவில் மௌனத்தில் கரைந்து விட்டன. 'மௌனம் சம்மதத்துக்கு ஒப்பாகும்' என்பது சட்ட நூலின் விளக்கமாயிற்றே! ஆதலால், தாத்தாவுக்கு என்மீதிருந்த வெறுப்பு மாறி அவர் உள்ளத்தில் அன்பும் கருணையும் குடிபுகுந்திருக்க வேண்டுமென்று அவர் மௌனத்தை வியாக்கியானம் செய்து கொண்டதுடன், என் நடிப்புத் திறமையையும் என்னுள்ளே நானே பாராட்டிக் கொண்டேன்.

வரப்போகும் ஞாயிற்றுக்கிழமையன்று என் தாத்தாவிடம் சென்று, அவர் எப்போதுமே சிந்தித்திராத ஒரு அபாரமான செயலினால் அவரை அதிர்ச்சிக் கடலில் மூழ்கச் செய்து அவர் 'சபாஷ்'ஐ வெளிப்படையாகப் பெறத் திட்டமொன்று போட்டேன். அதன்படி நான் என் சம்பளத்தில் மீதம் பிடித்து வைத்திருந்த ஐந்நூறு ரூபாய்க்கும் என் பாட்டனார் பேரில் ஒரு 'செக்' எழுதிப் பாங்கியிலிருந்து வாங்கிக் கொண்டு ஞாயிற்றுக்கிழமையின் வருகையை எதிர் பார்த்துத் துடித்துக் கொண்டிருந்தேன்.

ஞாயிற்றுக்கிழமைக்கு முதல் நாள் சனிக்கிழமை காலை பத்தரை மணிக்கு நான் ஆபீசுக்குப் புறப்படத் தயாரித்துக்கொண்டிருந்த போது தபாற்காரன் வந்து என்னிடம் ஒரு ரிஜிஸ்தர் கவரினைக் கொடுத்து விட்டுச் சென்றான். அவசரத்துடனும், ஆவலுடனும் அதனைப் பிரித்துப் படித்தேன்.

"உமது பாட்டனார் உத்தண்டராமர் மூன்றும் நாள் இரவு காய்ச்சல் என்று படுத்தார். அவர் உடனே என்னை அழைத்து ஓர் உயில் எழுதுவித்தார். உயில் எழுதி முடிந்த சற்று நேரத்துக்கெல்லாம் மாரடைப்பினால் காலமாகி விட்டார். அந்த உயிலில் நீர் அவரது அன்புக்குரிய நாய் ஜிப்பியின்மீது அளவு கடந்த பிரியம் காட்டி வந்ததால், அதனை அவர் உமக்குச் சர்வ சம்மதத்துடனும், நல்ல நினைவுடனும் விற்பனைக்குரிய முழு உரிமையுடனும் கொடுத்திருப்பதாக எழுதி வைத்திருக்கிறார். கடந்த இரண்டு நாட்களாக, உமது ஜிப்பி உணவில்லாமல் வாடுவதுடன், பெருந் தொல்லைகளையும் கொடுத்து வருகிறது. ஆதலால் நீர் இந்த தோட்டீசு கண்ட இரு தினங்களுக்குள் வந்து அதனை ஏற்றுக் கொள்ளாவிடின், அதனைப் பகிரங்க ஏலத்தில் விற்று, உயிலில் கண்ட ஷரத்துப்படி, அப் பணம் சாரதா அனாதை விடுதிக்கு அவர் எழுதிவைத்துள்ள முழுத் தொகையுடன் சேர்த்து விடப்படும் என்பதை அறியவும்.

இப்படிக்கு,

மணிவண்ணன்,

உத்தண்டராமரின் வக்கீல்"

என்று கடிதத்தில் கண்டிருந்தது!

# என் சேலையைப் பார்!

அது
TRAYONS
"டிரேயான்ஸ்"
ரேயான் நூல்களில்
நெய்யப்பட்டது



உங்கள் ஆடைகளின் அழகுக்கும் உழைப்புக்கும் ஏற்றது "டிரேயான்ஸ்" ரேயான் நூல்களே.

நவீன முறையில் தயாரிக்கப்பட்ட இந்த "டிரேயான்ஸ்" ரேயான் நூல்கள் சிக்கன செலவில், பகட்டான ஆடைகள் அணிய உதவுகின்றது.

"டிரேயான்ஸ்" ரேயான் நூல்கள் 120, 150 டினியர்களில் தயாரிக்கப்பட்டு எங்களால் விநியோகிக்கப்படுகின்றன.



கிடைக்குமிடங்கள்:

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

27, பவழக்காரத் தெரு, சென்னை-1.
தந்தி: "CELYARN"

கிளைகள்

போன்: 255
தந்தி: "CELYARN"

போன்: 598.
தந்தி: "CELYARN"
114-A, தெற்கு மாசி வீதி
மதுரை.

தந்தி: "RAYONS"




## 57. நேயர்கள் கடிதம்

நேயர்களின் கடிதங்கள் — இல்லை, கடிதக் குவியல்—இல்லை, இல்லை; கடிதக் குன்றுகள் மனத்தில் பெருமிதத்தை உண்டாக்குகின்றன.

கட்டுரை 52 முடியும் நாள் வரையில், (ஒரு வருஷம் என்று கணக்கிட்டு) 851 கடிதங்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. அதன் பிறகு கிடைக்கப் பெற்ற கடிதங்களுக்குப் புதிய தொடரென எண்கள் கொடுத்து வருகிறேன். இந்த இரண்டாவது தொடரிலும் கிட்டத்தட்ட 60 கடிதங்களாகி விட்டன.

கடிதங்களில் — பதிலுக்குத் தபால் கூலியனுப்பிய வருக்கெல்லாம் பதில் எழுதியுள்ளேன். சில சமயங்களில் பதில் எழுதத் தாமதமாகி விடுகிறது. தவிர்க்க முடியாத தாமதத்துக்கு நண்பர்கள் மன்னிப்பார்களாக.

பொதுவாகக் கடிதங்களிலிருந்து இரண்டு விஷயங்கள் தெளிவாகின்றன. ஒன்று நாட்டு வைத்தியக் கட்டுரைகளை நண்பர்கள் ஆவலுடன் எதிர்பார்க்கின்றனர்; அன்புடன் ஏற்கின்றனர்; ஆற்றலுடன் பயன்படுத்துகின்றனர். மற்றொன்று நாட்டு வைத்திய முறைகளைப் பலரும் கையாண்டு அவரவருக்குத் தேவையான வைத்திய வசதிகளைச் செய்து கொள்கின்றனர்; சிலர் இவ்வகை உதவியைப் பிறருக்கும் செய்கின்றனர். இவ்வித பலனைத்தான் லக்ஷ்யமாக வைத்துக் கொண்டு இந்நாள் வரை இத்துறையில் பணியாற்றி வந்துள்ளேன். விரும்பிய விதம் பலன் கிடைப்பது கண்டு—லக்ஷ்யம் பூர்த்தியாகி வருவதைக் கண்டு—பெருமிதம் அடைகிறேன்.

கிராமங்களில் வாழ்வோருக்கு வைத்திய வசதி எட்டவில்லை. அதற்குத் தக்க திட்டம் வேண்டும். வைத்தியக் கலையைப் பயின்றவர் நாட்டின் நலனையும்—மக்களின் ஆரோக்கியத்தையும்எண்ணிக் கிராமாந்தரங்களில் சென்று வைத்தியத் தொழிலைப் பயின்று வரவேண்டும்.

தம் நலத்தை மட்டும் முக்கியமெனக் கருதாத தியாகமூர்த்திகளாய்—கிராமவாசிகளின் பிணியைத் துடைக்கும் திருப்பணியில் தம்மையே அர்ப்பணித்தவராய் — கிராமச் சீர்திருத்தம், கிராம முன்னேற்றம், கிராம அபிவிருத்தி என்னும் சமூக நல முன்னேற்றத் துறையில் வழிகாட்டிகளாய் இருக்க வேண்டுமென்று அளவற்ற ஆவேசத்துடன் அடுக்கு மொழிகளை அள்ளி வீசும் பரோபதேச பண்டிதர்கள்- மேடைப் பிரசங்கிகள்- இந் நாளில் மலிந்து வருகிறார்கள்.

இவ் வாய்வீச்சு வீரர்கள் உண்மையில் கிராம மக்களின் வாழ்க்கையை அறிவார்களா? கிராம மக்களின் நிலையைப் பற்றி இவர்கள் அறிந்து கொண்டிருப்பது என்ன தெரியுமா?

"உம்! நம்ம நாட்டிலே என்னங்க, மகராசா! ஒரு ஏழை பாழையானாலுஞ் சரி, ஒரு எலுமிச்சங்காயளவு பொன்னாவது இல்லாதவன் கிடையாது" என்றானாம் ஒரு ராஜ சேவகன். அவனே அதே ராசாவிடம் மறுநாள் இதற்கு நேர் விபரீதமாக நாட்டின் வளத்தைப் பற்றித் தெரிவித்தானாம். இப்படி ஒரு கதை உண்டல்லவா? மேற்சொன்ன மேடைப் பிரசங்கிகளும் கிராமாந்தரங்களைப் பற்றிப் பேசுவது இவ்வகையைச் சேர்ந்ததுதானோ என்று எண்ண வேண்டியிருக்கிறது.

மக்களை வாட்டும் பற்பல பிணிகளெல்லாம் பட்டணவாசிகளிடந்தான். பரிஷ்காரம் மலிந்த வட்டாரங்களில் தான் உண்டு. இதை மட்டுமே கண்ட மேடைப் பிரசங்கியார், கிராமவாசிகளும் இவ்விதமேதான் அல்லல்படுகின்றனரென்று நிச்சயித்தது, மேற்சொன்ன ராஜசேவகனின் தீர்மானத்தைப் போன்றதாகும்.

சொல்லப் போனால் கிராம மக்கள் பட்டணவாசிகளை விடப் பன்மடங்கு ஆரோக்கிய முன்னவர்கள் தான். பட்டணவாசத்தின் பகட்டும், பரிஷ்காரத்தின் கொடிய விளைவுகளும் எட்டாமல் கிராமவாசிகளைக் காப்பாற்றினால், அவர்கள் ஒரு குறைவும் இல்லாமல் நல் வாழ்க்கை வாழ்வர்.

கிராமவாசிகளில் நோய்வாய்ப் படுவோர் இல்லையென்றோ, அவர்களில் இறப்போரே கிடையாதென்றோ அவர்கள் எல்லோருமே அச்வத்தாமா, பலி, ஹனுமான், விபீஷணன் போன்ற சிரஞ்சீவிகளென்றோ சொல்ல வரவில்லை. அற்பக் காரணத்துக் கெல்லாம் நோய் வாய்ப்படுவதும், ஒன்றுபோனால் ஒன்று என்று நாளொரு வியாதியும் பொழுதொரு நோயுமாய் வைத்தியன் மாற்றி

வைத்தியன் - ஆஸ்பத்திரி மாற்றி ஆஸ்பத்திரி என்று நடந்தவண்ணம் இருக்கும் தொட்டால் சிணுங்கிகளைக் கிராம வாசிகளிடையே காண்பது அரிது.

மேலும், ஏதோ ஒரு அற்பமான சுகவீனம் ஏற்படினும், பரம்பரையாக நம் தாய்மார்களும் பாட்டிமார்களும் செய்து வந்த, அனுபவத்தால் பயனுள்ளதென்று தெளிந்த சில எளிய சிகிச்சைகளைத் தக்க சமயத்தில் திறம்படச் செய்து, சுகம் பெறும் அறிவாளிகள் சிலராவது இல்லாத கிராமமே இல்லை; இராது. இருக்க முடியாது! அதமபக்ஷம் இரண்டு மூன்று கிராமங்களுக்கு ஒருவராவது கட்டாயமாக இருக்கத்தான் செய்வார். அந்தந்த ஊரிலும் கிடைக்கும் மிகச் சாதாரண மூலிகைகளை உபயோகித்து அவ்வூரிலுள்ளோரின் அற்பப் பிணிகளையெல்லாம் இவர்கள் போக்கியும் வருகின்றனர். இவ் வினத்தைச் சேர்ந்தவர் இன்று ஏதாவதொரு அல்லது சில கிராமங்களில் இல்லாவிட்டால் அது அக் கிராமவாசிகளிடையே-நாகரிகத்தைத் திணித்துப் புகுத்தியதால் விளைந்த வினையேயாகும். அனுபவத்தால் சிறந்த, பயனளிக்க வல்லதெனத் தெளிந்த உபாயங்களை மேற்சொன்ன வகையில் கையாண்டு கிராமவாசிகளின் அற்பப் பிணிகளைத் துடைத்துதவும் தன்னலமற்ற தொண்டர்களுக்குச் சிறிது உதவி புரிந்தால் போதும்: அவர்கள் பெரும் ஊக்கத்துடன் தமது தொண்டைப் பன்மடங்கு திறமையாகச் செய்து பலனையும் அளிப்பர். இவ்வகையில் இக் கட்டுரைகள் நல்ல பலனையளித்துள்ளன என்பதற்கு நண்பர்களின் கடிதக் குன்றுகளில் எத்தனையோ சான்றுகள் உள்ளன.

'மாதத்தில் பத்து தினங்கள் வீதமாவது ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு சில கிராமங்களுக்கு விஜயம் செய்து' அந்தந்தக் கிராமங்களில் அதிகமான பேரைப் பீடிப்பதும், அடிக்கடி ஏற்படுவதுமான நோய்களை எப்படிச் சுலபமான கை வைத்திய முறைகளால் சிகிச்சிக்கலாம் என்பதை ஆங்காங்குள்ள, அனுபவத்தால் இந்நாள் வரையில் ஓரளவு 'சிட்கா' வைத்தியத்தைப் பயின்று வருவோருக்கு விளக்கிக் காட்டி, உதவுமாறு ஓர் சில நண்பர்கள் எழுதியுள்ளார்கள். இதைக் காணும்போது 'இவ்வளவு உற்சாகமா நமது நேயர்களுக்கு?' என்ற எண்ணம் உதிக்கிறது.

நேயர்களே! தங்களுடைய இக்கட்டளையை மறுக்கச் சக்தியற்றவனாயிருக்கிறேன். இவ்வித ஆலோசனையைத் தெரிவித்த நேயர்களும் இதை ஆமோதிக்கும் ஏனைய நேயர்களும், அவரவர் இடத்தையும் அடுத்துள்ள கிராமங்களையும் சுற்றிவரத் திட்டத்தை வகுத்தனுப்பவும். கூடிய சீக்கிரத்திலேயே இத் திட்டத்தை ஏற்றுச் செயலில் கொண்டு வர முயற்சி செய்கிறேன். அதற்குத் தக்கபடி இங்குள்ள வேலைகளிலிருந்து ஒழிவு பெறவும் வசதி செய்து கொள்கிறேன். எப்படியாயினும் கிராமாந்தரங்களில் தேவையான வைத்திய வசதிக்கு இக் கட்டுரைகளுக்கு ஒத்த துணையாக இச் சுற்றுப் பிரயாணங்கள் உதவுமானால், அதுவேபோதும். சுற்றுப் பிரயாணச் செலவுக்கான பொறுப்பை நேயர்கள் ஏற்க வேண்டிய அவசியமே இல்லை. அந்தப் பொறுப்பை நானே ஏற்றுக் கொள்கிறேன்.

"விட்டேனா, பார்!"



...பரிபூர்ண
மாக நம்புவ
தற்க்கும்...

...கவர்ச்சிகர
மான அமைப்
புக்கும்...

... உட்பூச்சு
க்கும், வெளிப்
பூச்சுக்கும்...







...நேர்த்தியான
வர்ணவேலைக
ளுக்கும்...

... அதைப்பற்றி சந்தேகமே
இல்லை அதுதான்
ஷாலிமார் ஸுபர்லாக்...
எல்லோரும் விரும்பும்
நேர்த்தியான ஸிந்தடிக்
எனமல்






பல தடவை அலம்பினாலும் அழியாதபடியும், நல்ல பாதுகாப்பாகவும், மிக்கப்பளபளப்புடனும் இருப்பதற்கு. இந்த எனாமலை பிரஷ்ஷினாலாவது, ஸ்ப்ரேயினாலாவது அல்லது டிப்பிங் முறையினாலாவது பூசலாம். கலர்கள் ஒன்றோடொன்று கலக்கக்கூடியவைகள்

**ஒரு காலனைக் கொண்டே அதிகமான இடத்திற்குப் பூசமுடியும்**
**உட்புறமோ, வெளிப்புறமோ, எந்தப்புறமானாலும் பூசலாம்**

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., PRIVATE LTD.**

CALCUTTA • BOMBAY • MADRAS • NEW DELHI • KANPUR




அமாவாசை இரவு.

வானத்திலிருந்து ஒன்றும் அல்லொன்றுமாகச் சிதறிக் கிடந்த விண்மீன்கள், கண்களைச் சிமிட்டிய வண்ணம் இருந்தன. தன்னுடைய பல்லாயிரக்கணக்கான கரங்களைப் புவிமீது போர்த்தியிருந்த கங்குலின் தனியாட்சி கோரமாக நடந்து கொண்டிருந்தது. எங்கும் இருள் — ஒரே இருள். எதிரில் வருவோர் போவோர் தெரியாதவண்ணம் சூழ்ந்திருந்த இருட்டு, மையிருட்டு.

தோல், உதிரம், எலும்புகள், நரம்புகள் எல்லாவற்றையும் ஊடுருவி, உள்ளே எங்கோ மூலையில் உறங்கிக் கொண்டிருக்கும் ஜீவனையும் நடுநடுங்க வைக்கும் அந்தக் கடும் குளிரிலும் அவனுக்குத் தாகம் ஏற்பட்டது ஆச்சரியம் தான். மேட்டிலிருந்து தட்டுத் தடுமாறிக் கொள்ளிடத்தில் இறங்கினான் அவன். தண்ணீரை உறிஞ்சிக் கொண்டு ஈரமாயிருந்த மணலில் பாதம் பட்டதுமே, உடம்பெல்லாம் சிலிர்த்தது. எப்படியோ இரண்டு கை அள்ளித் தண்ணீர் அருந்தியவன், பரபரப்புடன் கைகளை மேல் துண்டில் துடைத்துக் கொண்டு, மேடு ஏறினான். நடுச்சாலையில் வந்து நின்றவன், எதிரே நோக்கினான்.

இரண்டு பர்லாங்கு தூரத்தில் ஏழெட்டு 'லைட்' விளக்குகள் எரிந்துகொண்டிருக்கும் வெளிச்சம், அந்த இருட்டில் 'பளிச்'சென்று அவனுக்குத் தெரிந்தது.

'டோல் கேட்' அது. மூன்று சாலைகள் கூடுமிடம். சுற்று வட்டாரத்திலுள்ள கிராமங்களிலிருந்து திருச்சி செல்லும் பார வண்டிகளும், கை வண்டிகளும், காய்கறி விற்பவர்களும் சற்று நேரம் தங்கிச் சிரம பரிகாரம் செய்து கொள்ளும் இடம்.

துண்டால் உடம்பை இறுக்கிப் போர்த்திக் கொண்டு, மெதுவாக நடந்து செல்லத் தொடங்கினான் அவன்.

ஆறு மாதங்களுக்கு முன்பு.

வழக்கம்போல் காலையில் கழனியில் குளித்து விட்டு, இரண்டு குவளைகள் நீராகாரம் செய்தவன், ஐந்து மைல் தூரத்திலுள்ள திருச்சிக்கு வயிற்றுப் பாட்டைக் கவனிக்க வந்தான்.

அவனும்தான் இரண்டு மாதங்களாக வேலைக்காக அலையாத இடம் பாக்கியில்லை. ஒவ்வொரு கடையாக ஏறி இறங்கினான். எதிர்ப்பட்டவர்களிடமெல்லாம் பல்லைக் காட்டினான். வேலை கிடைத்தால்தானே!

வெறுப்பின் எல்லைக் கோட்டுக்கு அவநம்பிக்கையால் அழைத்துச் செல்லப்பட்டவன் அன்று மலைக்கோட்டை அடியில் வேறொருவரின் சட்டைப் பையில் கை வைத்து விட்டான். அதில் இருந்தது என்னவோ நாலணாதான் — இருபத்தைந்து நயா பைசா! ஆனால், இரக்கமற்ற சட்டம் அவனுக்குக் கொடுத்த பரிசு எட்டு மாதச் சிறைத் தண்டனை.

குடியரசு கொண்டாட்ட தினம் குறுக்கிட்டு இரண்டு மாதங்கள் கழித்து வெளியேற வேண்டியவனை இரண்டு மாதங்களுக்கு முன்பே சிறையிலிருந்து வெளியேற்றி விட்டது.

பகல் நேரமெல்லாம் சுற்றியாகி விட்டது. விளக்கு வைக்கும் நேரத்தில், திருச்சியை விட்டுக் கிளம்பினான். சிந்தாமணி, அம்மா மண்டபம், பழக்கடை, திருவானைக்காவல், கொள்ளிடப் பாலம் முதலிய இடங்களையெல்லாம் மெதுவாகக் கடந்து கொண்டு 'டோல் கேட்' நெருங்கும்போது, இரவு மணி ஒன்பது ஆகிவிட்டது......

இன்னும் இரண்டே மைல்கள்தான், அவன் போக வேண்டிய இடம். சாலையிலிருந்து வயலில் இறங்கி, தென்னந் தோப்பு ஒன்றைக் கடந்து விட்டால், அவன் வீடு வந்து விடும்.

இந்நேரம் அவள் தூங்கியிருப்பாள். பாவம், இந்த ஆறுமாத காலமாக அவள் எப்படியெல்லாம் கஷ்டப்பட்டாளோ? எத்தனை எத்தனை இன்னல்களுக்கு ஆளானாளோ? அவன் என்ன, அவளுக்குப் பொன்னும் பொருளுமாகச் சேர்த்து விட்டா சிறை புகுந்தான்? ஆறு மாதக் குழந்தையையும் அவளையும் நிர்க்கதியாக விட்டு விட்டுத்தானே அவன் சிறைக்குப் போய் விட்டான்?

திடீரென்று இப்போது அவன் போய் எதிரில் நின்றால், அவள் நிலை எப்படி இருக்கும்?

கண்ணீர் விடுவாள். கதறுவாள். அவன் கால்களில் விழுந்து புலம்புவாள். இரு கைகளாலும், தாங்கிக் கொண்டிருக்கும் அவன் குழந்தையை எடுத்து அவனிடம் ஆர்வமுடன் நீட்டமாட்டாளா? ''நடந்தது நடந்துவிட்டது; இனியாவது நல்லபடியாக இருங்கள், அத்தான்!'' என்று கண்ணீரும் கம்பலையுமாகக் கூறுவாள்.

சட்டென்று அவன் சிந்தனை கலைந்தது.

அவனுக்கு முன்னால் பத்தடி தூரத்தில் யாரோ நடந்து கொண்டிருக்கும் சத்தம் கேட்கிறதே! குடிகொண்டிருந்த கும்மிருட்டுக்குப் பக்க பலம் சேர்ப்பதுபோல, சாலை விளக்குகளும் ஏனோ எரியவில்லை. அவனைப்போல் நெஞ்சுறுதி உள்ளவர்களே நடமாட நடுங்கும் இந்த இரவு வேளையில் யார் அங்கு போவது?

மின்னல் வேக நேரத்தில் அவன் மூளையில் ஓர் எண்ணம் தோன்றியது. அது யாராயிருந்தால் என்ன? கொஞ்சம் மிரட்டி, அதவிடம் இருப்பதைப் பறிக்கலாமே! அதுவும், இன்னும் சற்று நேரத்தில் பார்க்கப்போகும் மனைவியையும் குழந்தையையும் வெறுங் கையுடனா பார்ப்பது? அப்படி அந்த ஆசாமி எதிர்த்தால், கைபலம் இருக்கவே இருக்கிறது. இப்படி ஒருவர் முகம் மற்றொருவருக்குத் தெரியாமல் இருக்கும் இருளில், இம்மாதிரி சந்தர்ப்பத்தை நழுவ விடுவது முட்டாள்தனம் அல்லவா?

''ஏய்! அப்படியே நில்!''

பிறவியிலேயே கட்டைக்குரல் அவனுக்கு. அதிலும் இரண்டு மூன்று நாட்களாகத் தொண்டை வேறு கட்டிப் போயிருந்தது. போதாக்குறைக்கு, சற்றுநேரம் முன்புதான் பச்சைத் தண்ணீரைக் குடித்திருக்கிறான். அவனுக்கே அவன் குரலை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

முன்னே செல்லும் நபரின் காலடி ஓசை நின்றது. முஷ்டியை மடக்கிக் கொண்டு, மெதுவாக நடந்தான் அவன்.

இருட்டில் ஆள் முகம் தெரியவில்லை. ஆனால் அவன் உள்ளுணர்வு மாத்திரம் கண்டுபிடித்து விட்டது: எதிரே நிற்பது ஒரு பெண் என்று! அவள் குமரியோ அல்லது கிழவியோ, யார் கண்டார்கள்?

''உயிர்மேலே ஆசை யிருந்தால் இருக்கிறதை மரியாதையாகக் கழற்றிக் கொடுத்துடு!'' மெதுவான குரலில்—ஆனால் வெகு அழுத்தமாகக் கூறினான் அவன்.

சில விநாடிகள் அவ்வுருவம் அசையவில்லை.

''உம் !'' உறுமினான் அவன்.

சற்றைக்கெல்லாம், மெல்லிய காகிதம் சுற்றப்பட்ட சின்ன வளையங்கள் போன்ற ஏதோ இரண்டு அவன் கைகளில் உதறப்பட்டன. அந்த வேகத்தில், அவன் கைகளும் அவள் கைகளும் உரசின.

இடீரென்று உடல் முழுமையும் மின்சாரம் பாய்ந்து விட்டது போன்றதொரு உணர்வு ஏற்பட்டது அவனுக்கு. அவன் கைகால்கள் நடுநடுங்கின. ஆறுமாத காலமாக அவன் உடலில் எங்கோ மூடி மறைக்கப்பட்டிருந்த உணர்ச்சி ஒன்று அவனைத் தகித்தது.

சடேரென்று அவன் கைகளை இறுகப் பற்றினான் அவன். அசுர வேகத்துடன் கையை உதறியவள், அவன் காலடியில் விழுந்தாள்.

''உன்னைக் கையெடுத்துக் கும்பிடறேன். அப்பா! கூடப் பிறந்த பொறப்பா என்னை நினைச்சுக்க! பொருள் கேட்டே, கையிலிருந்ததை யெல்லாம் உதறினேன்! ஆனால்...... ஆனால் அது மாத்திரம் வேண்டாமப்பா...! என்னை விட்டு விடு!...''

வார்த்தைகளைக் கண்ணீரில் நனைத்துக் கம்மிய குரலில் கெஞ்சினாள் அவள்.

அவனுக்கு இருந்த வெறியில்—உணர்விழந்த அந்த நிலையில்—அவள் குரல் காதில் ஏறவில்லை. ஆனால் என்ன தோன்றியதோ, அவள் கரங்களைப் பிடித்திருந்த தன் பிடியைத் தளர்த்தினான்.

''போ! பிழைச்சுப்போ...!'' என்று வெறுப்புடன் கூறினான். அவள் வேகமாக நடக்க ஆரம்பித்தாள்.

சிலநிமிஷநேரம், இருளில் நடந்து செல்லும் அவ்வுருவத்தின் பக்கமே பார்த்தபடியிருந்தவன், அலட்சியமாகச் சிரித்தான்.

தூரத்தில் 'மினுக் மினுக்'கென்று எரிந்து கொண்டிருந்த லாந்தர் கம்பத்தின் வெளிச்சம் அவன் கண்ணில் பட்டுவிட்டது. அவனுடைய கிராமம்தான் அது. தெருக்கோடியில் வழக்கமாக எரியும் லாந்தர் விளக்குத்தான்.

அவன் உடம்பில் பரபரப்பு உண்டாயிற்று. இனிமேல் இங்கேயே நின்று கொண்டிருந்தாலோ, அல்லது அப்பெண்ணின் பின்னால் சென்றாலோ ஆபத்துத்தான். கிராம மக்கள் எவரிடமாவது அவள் சொல்லிவிட்டாள், அவன் உடம்பு அவனுக்குச் சொந்தம் இல்லை என்றாகிவிடும்! அப்பாதையிலே தொடர்ந்து போவது உசிதமல்ல. அருகிலுள்ள வயற்காட்டில் இறங்கி, வேறொரு கரடுமுரடான பாதை வழியாகத்தான் செல்ல வேண்டும். வழக்கமாக ஆகும் நேரத்தை விட, ஒரு மணி அதிகம் ஆகும். அவ்வளவுதானே?

கிராமத்திலே அவன் கால் வைக்கும் போது, மணி பதினொன்று இருக்கும்.

வீட்டு வாசலிலே சற்று நேரம் தயங்கினான் அவன். பிறகு, சாய்வாக வேயப்பட்டிருந்த கூரையில் இடித்துக் கொள்ளாமல், குனிந்தபடியே படியேறிக் கதவருகே வந்தான்.

''டக்......டக்'' இலேசாகத் தட்டினான் கதவை. பதில் வரவில்லை.

''டக் டக் டக்...'' கொஞ்சம் பலமாகத் தட்டினான். பலன் கிடைத்தது. உள்ளே யாரோ நடந்துவரும் ஓசை கேட்டது. ஆனால் கதவு உடனே திறக்கப்படவில்லை.

''ஏய்! கதவைத் திற!'' என்று குரல் கொடுத்தான்.

''யாரது? இந்த வேளையில்?'' பதில் ஒரு கேள்வியாக வந்தது.

''நான்தான்! கதவைத் திற!''

''யார் என்று தெரியாமல் கதவைத் திறக்க முடியாது'' என்று மறுத்தது அந்தக் குரல்.

அவள் உறுதியைக் கண்டு அவன் சற்றுப் பெருமிதம் கொண்டான். இந்தப் பாழும் தொண்டைக் கட்டினால், அவன் குரல் அவன் மனைவிக்குக்கூடத் தெரியவில்லையே! ''நான் தான்! நான்தான்! என்

னைப் புரியல்லே?'' என்று கத்தினுன். கதவு படீரென்று திறந்து கொண்டது.

அவள் எதிரே நின்று கொண்டிருந்தாள். உள்ளே நுழைந்தான் அவன். மங்கலாக எரிந்து கொண்டிருந்த சிம்னி விளக்கின் ஒளியில் அவனை அவள் புரிந்துகொண்டுவிட்டாள்.

''அத்தான்! அத்தான்!'' இந்த வார்த்தைகள்தான் திரும்பத் திரும்ப அவள் வாயிலிருந்து உதிர்ந்தன. அவள் கைகால்கள் உணர்ச்சி வசத்தால் ஆடின. கண்கள் தாரை தாரையாக நீர் சொரிந்தன.

"சே! எப்படி இருந்தவள் என்னமாக மாறி விட்டாள்? உருண்டு திரண்டிருந்த அவள் கைகள்தான் எப்படி சர்க்குச்சிகளாக மாறிப் போய் விட்டன?'

அவள் கைகளைத் தன் முகத்தில் பதித்துக் கொண்டு, அழுதபடியே நின்று கொண்டிருந்தாள். அவன் எவ்வளவு தைரியசாலியாக இருந்தும் என்ன பிரயோஜனம்? அவன் கண்களும் நனையத்தான் செய்தன.

திடீரென்று அவள் அழுவதை நிறுத்தினுள். அவன் முகத்தை நேருக்கு நேர் நோக்கினுள்.



அதன் அர்த்தத்தை அவன் எப்படியோ புரிந்து கொண்டு விட்டான். அவன் மெதுவாகச் சிரித்தான்.

''ஜெயிலிருந்து தப்பி ஓடி வந்து விட்டேன் என்று பயப்படுகிருயா?...... அதெல்லாம் ஒன்னுமில்லே......! குடியரசு தினத்துக்காக என்னை வெளியிலே அனுப்பிச்சுட்டாங்க! மாரியாத்தா சாட்சியாகச் சொல்றேன்!...''

அவள் நம்பினுள். அவள் முகம் சற்றே மலர்ந்தது.

''அது சரி! ...... இத்தனை நாள் நீ என்ன பண்ணினே? எப்படிக் காலம் கழிச்சே?......'' கேட்கும்போதே, அவனை வெட்கம் கவ்வியது.

''நாலு வீடு கூட்டினேன்!......கூலி வேலை செய்தேன்! எப்படியோ காலம் தள்ளினேன்!''—அவள் கண்களில் நீர் நிறைந்தது.

திடீரென்று அவனுக்குக் குழந்தையின் நினைவு வந்தது. இத்தனை நேரம் அதைப் பார்க்காமல் என்னவெல்லாமோ பேசி விட்டோமே என்ற உணர்வு உண்டாகியது.

சுற்று முற்றும் பார்த்தான். அவன் உள்ளத்தை அவள் அறிந்து கொண்டு விட்டாள். தூளியிலே தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை எடுத்து வந்து, அவனிடம் நீட்டினுள்.

தன் பலம் கொண்ட மட்டும் குழந்தையை மார்போடு கெட்டியாக அணைத்துக் கொண்டான். அதன் மேனியெல்லாம் வெறி பிடித்தவன்போல் முத்தமிட்டான். அவனுடைய கண்கள் அருவியாக மாறின.

''குழந்தைக்கு என்ன வயசு இருக்கும்?...... பாவி, அதைக்கூட நான் மறந்துட்டேனே!''

''நாளையோடே ஒரு வயது ஆகிறது!''

''அப்போ நாளைக்குப் பிறந்த நாளுன்னு சொல்லு! ...... சரியான சமயத்திலேதான் நானும் வந்திருக்கேன்!''

ஓய்ந்திருந்த அழுகை, பழையபடி அவளிடம் பிறித் தெறித்தது. விம்மினுள். புலம்பினுள்.

''அடேடே!...என்ன இது பழையபடியும்? நான்தான் வந்துட்டேனே! இனிமேல் என்ன கவலை உனக்கு?''

''அத்தான்!......என்னை நீங்க மன்னிக்கணும்! நான் ஒரு தப்பு......''

''என்ன செய்துட்டே?......''

''நம்ம கஷ்டத்திலே, குழந்தையின் பிறந்த நாளை விடக்கூடாதுன்னு தோணிச்சு! வேலை செய்யற இடத்திலே கெஞ்சி, அஞ்சு ரூபாய் பணம் வாங்கினேன்!' இன்னிக்கு விளக்கு வைக்கும் நேரத்திலே கொடுத்தாங்க! திருவாளைக்காவல் கடையிலே குழந்தைக்குக் காலுக்கு வெள்ளிக் காப்பாவது வாங்கலாம்னு கிளம்பினேன்! சரியா, காப்பின் கிரயம் அஞ்சு ரூபாய் ஆயிடுச்சு! திரும்பிவர, பஸ்ஸுக்குக்கூடச் சில்லறை இல்லே. 'பழகின ஊர்தானே? என்ன பயம்? அப்படி நாழிகையும் அதிகம் ஆகல்லையே!'ன்னு நடந்தே வந்து விட்டேன்!''

அவன் மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. அவள் தொடர்ந்தாள்.

''வருகிற வழியிலே சாலையிலே யாரோ ஒரு பாவி வழி மறித்தான். கையிலிருந்ததைப் பிடுங்கிக் கொண்டான்! அதோடு விட்டானு? பாவி, என்னுடைய கையை வேறு பிடிச்சு... அத்தான்! ...... அத்தான் ..... என்னை மன்னித்து விடுங்க! தெய்வத்தின்மேலே ஆணையாகச் சொல்றேன்! உங்களுக்கு நான் ஒரு துரோகமும் செய்யல்லே!''

குழி பாய்ந்திருந்த அவள் கண்களிலிருந்து கிளம்பிய நீர் ஊற்று, ஒட்டிப் போயிருந்த அவள் கன்னங்களில் வழிந்தோடியது.

சிலையெனப் பிரமித்து நின்று விட்டான் அவன். அவன், அவள், குழந்தை, அவ்வீடு எல்லாமே அவன் கண் முன்பு சுற்றின.

''செ...ல்...வி!...''

உடம்பிலுள்ள சக்தியை யெல்லாம் தொண்டையிலே தேக்கி, அவன் எழுப்பிய அலறலின் சத்தத்திலே, அந்த வீடு மாத்திரமல்ல, அப்பிராந்தியமே கிடு கிடுத்தது.

அவன் இடுப்பிலிருந்த வெள்ளிக் காப்பு அவனுக்கு இரும்புக் காப்பாகத் தோற்றமளித்தது. சிறைச்சாலையும், தண்டனையும் அளிக்காத மாற்றம் அந்தக் கணத்திலேயே அவனுக்கு ஏற்பட்டு விட்டது. அவன் அன்றே திருந்தி விட்டான்.

# வேர்க்குருவிலிருந்து

# 2

## வழி நிவாரணம்!

சுகமளிப்பதும், கிருமிகளை ஒழிப்பதுமான ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் சோப்பு எரிச்சலூட்டும் வேர்க்குருவிற்குக் காரணமான அடைபட்ட சரும துவாரங்களை சுத்தம் செய்கிறது.

இதமளிப்பதும் புத்துணர்ச்சியூட்டுவதுமான ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரை குளித்துத் திரும்பின் உபயோகித்தால், உடனுக்கு சுகமும் குளுமையும் அனுபவமாகும்.




**ஜான்ஸன்ஸ்** ப்ரிக்லி ஹீட் சோப்

மற்றும் பவுடர் ஒன்றுக்கொன்று இணங்கி வேலை செய்து

வேர்க்குருவிலிருந்து நிவாரணமளிக்கின்றன

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்

## 1. தென்னாட்டுக் கோயில்கள் (2-ம் பாகம்)
## 2. வடநாட்டுத் தலங்கள்

மூர்த்தி தரிசனம், தல யாத்திரை, தீர்த்த ஸ்நானம் ஆகியவை பக்தர்களுக்கு இன்றியமையாதவை. நம் பாரத நாட்டில் மூர்த்தி வழிபாடும், தலப் பெருமையும், தீர்த்த மகிமையும் கொண்ட திருப்பதிகள் எத்தனை எத்தனையோ உள்ளன. மேற்படி தலங்களில் உள்ள விசேஷங்களைத் 'தென்னாட்டுக் கோயில்கள்' புத்தகம் விரிவாகக் கூறுகிறது. தேவாரம், திருவாய்மொழி முதலிய மேற்கோள்களுடன் தல வரலாறுகளை ஆசிரியர் மிகவும் சுவையுடன் எழுதியிருக்கிறார். தமிழ் நாட்டுத் தலங்களின் பெயர்கள் பலருக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால் அவைகளைப் பற்றிப் புராண வாயிலாக அறியக் கிடக்கும் வரலாறுகள் தெரிந்திருக்க மாட்டா. "தென்னாட்டுக் கோயில்கள்" என்ற நூல் மேற்படி வரலாறுகளைச் சாங்கோபாங்கமாகக் கூறுகிறது. விலை: ரூ. 4-00.

வடநாட்டுத் தலங்களைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆவல் எல்லோருக்கும் இருக்கும். ஆனால் நேரில் அங்கெல்லாம் போய் அறிந்து கொள்ளுவதென்பது சற்றும் இயலாதது. விஜயநகரம், அஜந்தா, எல்லோரா, பண்டரிபுரம், எலிபெண்டா, நாசிகை, துவாரகை முதலிய ஊர்களைப் பற்றிய சரித்திரச் சான்றுகள் பொதிந்த, சுவை மிகுந்த விவரங்களை இந்நூல் சுவாரஸ்யமாகக் கூறுகிறது.

ஆசிரியரின் தமிழ் நடை எளிய முறையில் தல வரலாறுகளைச் சுலபமாகப் படிக்கும் விதத்தில் அமைந்திருக்கிறது. விலை: ரூ. 3. 50

இரு நூல்களையும் எழுதியவர்: ம. ராதா கிருஷ்ண பிள்ளை; பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, தபால் பெட்டி எண். 617, மயிலாப்பூர், சென்னை - 4.

## சிவராமன்

வளரும் தமிழுக்கு எளிய நடையில் வசன நூல்களைப் புனைந்து அழகு செய்தவர் எஸ். வி. வி. அவர்கள். அவர் எழுத்தில் எளிமையும், ஹாஸ்யமும் இயல்பாகப் பிணைந்திருக்கும். குடும்ப வாழ்வில் எத்தனையோ சுவையுள்ள நிகழ்ச்சிகள் நிகழுகின்றன. ஆனால் அவைகளை நாம் சரியாய்க் கவனித்துப் பார்ப்பதில்லை. எஸ். வி. வி. அவர்கள் மேற்படி சுவையுள்ள பல நிகழ்ச்சிகளைச் சுவைத்துப் பார்த்து ரஸித்தவர். அவைகளையெல்லாம் தம்முடைய கதாபாத்திரங்களின் மூலம் அற்புதமாக வெளிப்படுத்தி நம்மையெல்லாம் ரஸிக்க வைக்கிறார்.

ஆசிரியர் எஸ். வி. வி.யின் எழுத்துக்களிலே எதார்த்த வாதமும் ஆதரிசவாதமும் இணைந்து ஒன்றுபட்டு உலகுக்கு நல்லது செய்யும் அதிசயத்தைக் காண்கிறோம். படிக்கப் படிக்கப் படித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்ற ஆசையைக் கிளறிவிட்டுச் சுவாரஸ்யம் குன்றாமல் பார்த்துக் கொள்ளும் திறன் ஸ்ரீ எஸ். வி. வி. அவர்களுக்கு இயல்பாகவே அமைந்துள்ளது. அவரது அநுபவமும் ஆற்றலும் அதற்கு அணியாகப் பணி புரிகின்றன.

'சிவராமன்' என்னும் இந்த நவீனத்திலே 'சிவராமன்' என்னும் சிறுவன்தான் கதாநாயகன். அவன் மீது திருட்டுக் குற்றம் சுமத்தப்படுகிறது. அதன் பலனாக மானியான அவன் தாய் தற்கொலை புரிந்து கொள்கிறாள். அந்தத் தற்கொலை, தற்கொலையாகக் கருதப்படாமல் கொலையாகக் கருதப்படுகிறது. சப் மாஜிஸ்திரேட் நாராயணய்யரும் அவர் மனைவியும் கைது செய்யப்படுகிறார்கள். கதை சிக்கலாகிறது.

சிறுவன் சிவராமனுக்குப் பக்கபலமாக இருக்கிறார் தலைமை ஆசிரியர் குருசாமி சர்மா. பக்கபலம் என்றால் அவரது மகள் அவனிடம் உள்ளத்தைப் பறி கொடுத்து உறுதுணையாக விளங்குகிறாள்.

வழக்கறிஞரான எஸ். வி. வி. கதையிலே ஒருபுறம் வழக்கு சம்பந்தமான சிக்கல்களை உண்டு பண்ணுகிறார். இன்னொருபுறம் சிவராமனின் வாழ்க்கையிலே வத்ஸலாவைக் குறுக்கிடச் செய்து காதல் சுழலை உண்டு பண்ணுகிறார். சிக்கல் நீராச் சிக்கலாகி விடுகிறது. கதையும் களை கட்டிவிடுகிறது. சிக்கல் விடுபடாது என்று எண்ணும் தருணத்தில், ஒரு சிறு முடிச்சுகூடப் போட்டுக் கொள்ளாமல், சிக்கல் பிரிந்து சுமுகமான முடிவைக் காண்கிறோம்.

வாழ்க்கையிலே இன்பமும் துன்பமும் நெல்லும் கல்லுமாக, மலரும் முள்ளுமாக இணைந்து வரும். நீரத்துடன் எதிர்த்து நீந்துபவனே வாழ்வென்னும் கடலை ஆனந்தமாகக் கடக்க முடியும் என்னும் பேருண்மையை ஆதரிசமாகக் கொண்டு பின்னப்பட்ட இந்த நவீனத்தைப் படித்து முடித்தபின்தான் கீழே வைக்கத் தோன்றும்.

ஆசிரியர் எஸ். வி. வி. பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை—4. விலை: ரூ. 6.

## சென்னை ராஜ்ய இரண்டாவது கால்நடைக் காட்சி மலர்

நம் நாடு விவசாய நாடு; விவசாயம் வளருவதற்குக் கால்நடைகளின் அபிவிருத்தி இன்றியமையாததல்லவா? ஆகவே கால்நடை அபிவிருத்தி விஷயத்தில் சர்க்கார் மிகுந்த கவனம் செலுத்தி வருகிறார்கள். சென்னை ராஜ்யத்தில் சர்க்கார் நான்கு கால்நடைப் பண்ணைகளை நடத்தி வருகிறது. இந்த ராஜ்யத்திலுள்ள 230 லட்சம் கால்நடைகளின் அபிவிருத்திக்கான பல விசேஷக் கட்டுரைகள் இந்த மலரில் இடம் பெற்றிருக்கின்றன. சிந்தி, கிர், காங்கேயம், ஹல்லிக்கார், உம்பளச்சேரி மாடுகளைப் பற்றிய படத்தோடு விரிவான விவரங்கள் கால்நடைகளைப் பற்றித் தெரிந்துகொள்ளப் பெரிதும் உதவுகின்றன.

வெளியீடு: கால் நடை இலாகா, சென்னை.




மழையைப் பொழிந்துவிட்டு ஆவணி மாதம் ஒரே இரவில் போனது தெரியாமல் போய் விட்டது. வானில் சிதறிப் போன முகிலின் ஒரு சிறு கீற்றேனும் இல்லை.

இன்று இளங்காலை எனக்கு எப்படியோ பொழுது போவது தான் விந்தையாக இருக்கிறது. மருதாணிச் செடி வேலியின் ஓரமாக உள்ள வாகை மரத்தின் இளம் தளிரின் தள தளப்பில் என் பார்வை நிலைகொள்கிறது. நட்டாற்றுள் இறங்கியவன் போல் நான் அழிவுக்குக் கிட்டத் தட்ட வந்தாயிற்று. அது என்னை நெருங்காமல் தொலைவில் இருந்தபோது அந்நிலை என்றைக்கு வந்து விடுமோ என்ற அச்சத்தால் குளிர் ஒடுக்கும் எத்தனை இரவுகளில் எனக்கு வியர்க்கும் தெரியுமா? கோடைகாலமாக இருந்தும் என் காலும் கையும் சில்லிட்டுப் போகும். ஆனால் இன்று அச்சமோ, கிலியோ சற்றும் எனக்குத் தோன்றவில்லை. அதோ அந்தச் சீதாப்பழச் செடியின் கிளையில் ஒரு ஓந்தி எதையோ விழுங்கக் காத்திருக்கும் காட்சி என் மனத்துள் பதிந்து விடுகிறது.

எல்லாவற்றையும் இழந்து நடுத்தெருவில் வந்து நிற்பது அவ்வளவு வேதனை தரும் விஷயமன்று. ஆனால் மூன்று தலைமுறையாக நேர்மைக்கும் உண்மைக்கும் பெயர்போன எங்கள் குடும்பம் என் வாழ்நாளில் அப்புகழை இழந்து குலையும் ஓர் அவமானமே என் மன அமைதியைத் தொலைத்து விட்டது. இது தாளாமல் நான் தற்கொலை புரிந்து கொள்ளப் பல தடவை நினைத்ததுண்டு. ஆனால் இன்றே என்னுடைய மானத்தை மூடி மறைத்த திரை விலகிவிட்டது. நான் செய்துள்ள காரியம் காகிதத்தில் காணும் அக்காட்சியுடன் நீதி ஸ்தலத்தினின்று வெளிப்பட்டு இன்று நாடறிந்த விஷயமாயிற்று. என் உள்ளத்தை அழுத்திய ஒரு சுமை இப்போதுதான் இறங்கியது. என் பெரியோர்களின் நல்லபெயரை இழுத்து அவர்களை மாசுபடுத்தும் சங்கடத்திலிருந்து தப்பினேன். வெட்ட வெளிச்சமாகிவிட்டது. நான் மோசடி செய்தவனென்று. நான் பிழைத்தேன். நீதி மன்றத்தில் என்னுடைய வழக்கு விசாரணைக்கு வரும்போது துருவித் துருவி என்னைப் பற்றிய விஷயங்களை அம்பலப் படுத்தி விடலாம். ஆனால் இவற்றையெல்லாம் விடப் பெரியதொரு களங்கத்தைப் பற்றிய செய்தி எந்த நீதி மன்றத்திலும் வெளியாவதற்கு வழியே இல்லை. இந்த உலகில் அதைப்பற்றி அறிந்தவர்கள் யார் இருக்கிறார்கள்? தர்மத்தைக் காக்கும் அந்தக் கடவுள் மட்டும் அதை அறிவார். அதை நிரூபிக்க யாராலும் முடியாது. ஆகவே அதையும் உடைத்துச் சொல்லி விடுவதென்ற உறுதியுடன் பேனாவைக் கையில் எடுத்துக் கொண்டேன்.

*தமிழாக்கம்:*

**த. நா. குமாரசாமி**



என்னுடைய பாட்டனார் உத்தவ் தத் தம்மைப் போஷித்து வந்த பிரபுவுக்குச் சறுக்கும் காலம் வந்த போது தம் பொருளையெல்லாம் தந்து காத்தாராம்! அது முதற்கொண்டே மற்றவர்கள் செல்வத்தில் ஓங்கி இருப்பினும், முன்னால் புகழைத் தந்த தம் வறுமையுடன் என் பெரியவர்கள் தலை நிமிர்ந்து நின்றனர். என் தந்தை ஸநாதன தத் டிரோஜியாவின் மாணாக்கர். நேர்மைக்காக உயிரையும் தரக்கூடிய பெருந்தகைமை அவருக்கு இருந்தது. அம்மா எங்களுக்கு ஒருநாள்பாட்டிக் கதை சொல்லுவதை அவர் காதால் கேட்டு விட்டார். மறுநாளே எங்களை அது போன்ற கதைகளைக் கேட்க உட்புறமே அனுப்புவதைத் தடுத்து விட்டார். வெளியறையில் இருந்து படிக்க வேண்டியதாயிற்று. அவ்வறையில் சுவரெங்கும் தொங்கும் தேசப் படங்கள் எங்களுக்கு வறட்டு விஷயங்களை எடுத்துச் சொல்லும். அரசகுமாரி, மந்திரக்கோல், பூதம்காத்த புதையல் இவை போன்ற நெஞ்சையள்ளும் விசித்திரக் கதைகளுக்குச் சீட்டுக் கொடுத்தாகி விட்டது. உண்மை நிரம்பியதும், நேர்மை மிக்கதுமான விஷயங்களையே பிள்ளைகளுக்குப் புகட்ட வேண்டுமென்ற ஒரு கடுமையான கொள்கையே ஆட்சி புரிந்தது.

உயர்ந்த பண்பாடென்னும் சிறைக்குள் அடைபட்டு, அதைப் பயில நேர்மை என்னும் தளை பூண்ட மனிதரானேனும், மனிதர் என்று சொல்வது நேரான விளக்கமாகாது. எங்களைத் தவிர எல்லோரும் மனிதர்கள்தாம். ஆனால் மனிதப் பண்பாட்டின் வெறு உதாரணங்கள் நாங்கள். எங்கள் விளையாட்டில் கடினம் தென்படும். குதூகலமான பேச்சு எங்கள் எல்லைக்கே வரக்கூடாது. நாங்கள் சொல்லிக் கொள்ளும் கதைகள் சுவையற்று இருக்கும். பேச்சும் மட்டு; சிரிப்பதுகூட அடக்கமாகவே இருக்கும். முறைகளில் துளியேனும் பிழை ஏற்படாது. இளம் வயதில் காணும் இன்ப விளையாட்டில் ஏற்பட்ட இந்த ஏமாற்றத்தைப் போக்க வெளியார் எங்களை மெச்சிக் கூறும் புகழுரைகள் ஓரளவு நிறையக் கிடைத்தன. எங்களுக்குக் கல்வி புகட்டும் ஆசிரியர் முதல் மளிகைக்கடைக்காரர் வரையில், 'ஆகா! தத் வீட்டுப் பிள்ளைகள் சத்திய யுகத்தில் இருக்க வேண்டியவர்கள், தப்பி இன்றைய உலகில்வந்துவிட்டார்கள்' என்பார்கள்.

கருங்கற்கள் பாவிய ரஸ்தாவில் துளி இடைவெளி ஏற்பட்டாலும் உயிர் தரும் இயற்கை தன் வலிமையைக் காட்ட வெற்றிக்கொடியெனப் பச்சிளம் செடியைத் தோற்றுவிக்கும்' என் புதிய வாழ்வில் எல்லா நாட்களும் ஏகாதசியாகவே இருந்தன. ஆனால் இந்தப் பட்டினிக்கு இடையே எல்லோரும் ஏமாந்து இருந்த சமயம், ஒரு துளி அமுதின் சுவையைப் பெற்றேன்.

இரண்டொருவர் வீடுகளுக்கு மட்டும் போய்வர எங்களைத் தடுக்கவில்லை. அதில் பாபுவின் வீடு அவற்றுள் ஒன்று. அவர் பிரும்ம சமாஜத்தைச் சேர்ந்தவர். தந்தைக்கு அவரிடத்தில் அளவற்ற நம்பிக்கை. அவருடைய மகன் அநுகயா என்னைவிட ஆறு வயது சிறியவன். அவனை ஆட்டி வைக்கும் உரிமையை நான் பெற்றிருந்தேன். இளமை கொழிக்கும் அவன் முகத்தில் கருவிழிகளைக் காக்கும் இதழ் போன்ற இமைகள் என் நினைவுக்கு வருகின்றன. அவ்விழியின் தண்ணிய நிழலில் இவ்வுலகின் வன்மை யெல்லாம் மென்மை தோய மாறி விடும். குளிர்ந்த




பார்வையால் என்னை அவள் நோக்குவாள். பின்புறம் முழந்தாள் வரை புரளும் அவளுடைய அலைக் கூந்தல்; மென்மை மிக்க அந்தக் கைகள் இன்னும் என் நெஞ்சம் விட்டு அகலவில்லை. வழியில் போகும்போது யாருடைய கையுடனோ கோத்துக் கொள்ள அவள் கை துடிக்கும். அந்த நீண்ட விரல்கள், அவள் முழுவதும் நம்பி இருக்கும் ஒருவனுடைய 'பிடிக்குள்' அடைக்கலம் புகத் தவிக்கும்.

அன்று நான் அந்த நோக்கிலிருந்து அவளைக் கண்டது என்பதுடன் நிறுத்திக் கொள்ளலாம். ஆனால் நாம் பூர்ணமாக எதையும் புரிந்து கொள்வதற்கு முன்னமே சில விஷயங்கள் தெளிவாகப் புலப்படுகின்றன.

அநுவின் உள்ளத்தைக் கட்டிக் காக்கக் கடினமான காவல் எதுவுமே இல்லை. அவன் எதையும் நம்பி விடுவான். அவனை எடுத்து வளர்த்த அந்தக் கிழச் செவிலி அவனுக்குச் சொன்ன, இந்த உலகம் தோன்றிய கதை, அதிலிருந்து அவன் தெரிந்து கொண்ட விஷயம், அறிவுக் களஞ்சியமான நாங்கள் கற்றதற்கு எதிரே நிற்கத் தகுதியற்றவை. அநு சுய கற்பனையினால் புதுப்புது விஷயங்களைப் படைத்துக்கொள்வான். இந்த இடத்தில்தான் நான் அவனைத் திருத்தும் பொறுப்பை ஏற்றேன்.

'அநு! நீ சொல்வதெல்லாம் துளிக்கூட உண்மையேயல்ல, தெரியுமா? இதனால் பெரிய பாபமே உண்டாகும்' என்பேன். அதைக் கேட்டு அநுவின் கண்களில் மருட்சி தோன்றும். தன் சிறிய தங்கை அழும்போது அநு அதன் வாயை மூடுவதற்கு ஏதாவது இல்லாததைக் கற்பித்து ஆற்றுவான். பால் குடிக்காமல் குழந்தை பிடிவாதம் பிடிக்கும்போது, எதுவுமே அங்கே இருக்காது. 'அதோ பார், பஞ்சவர்ணக் கிளி..சீக்கிரம் பாலைக் குடிச்சுடு' என்று 'உளுவாக்காட்டிக்காக'ச் சொல்லுவான். அப்போது நான் வெறுப்புற்று, 'சே, ஏன் பொய் சொல்லிக் குழந்தையை ஏமாற்றுகிறாய்? பகவான் இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறார். அவரிடம் இதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும்'' என்று அவனுக்குப் புத்திமதி சொல்லுவேன்.

இவ்வாறு நான் அடக்கி ஆளுவேன். அவனும் எனக்கு அடங்கிப் போவான். கண்கள் கலங்கத் தன் குற்றத்தை அவன் ஒப்புக் கொள்ளும்போது என்ன பெருமை அடைவேன் நான்! அநு இந்த உலகத்தில் எல்லாவற்றையும் விட, தன்னையும் விட, என்னை மேலானவனாக, மிகவும் யோக்கியனாகக் கருதி வந்தான்.

வயது ஏறத் தொடங்கியது. பள்ளிக்கூடத்திலிருந்து கலாசாலைக்குச் சென்றேன். அகில் பாபுவின் மனைவிக்கு மட்டும் உள்ளுக்குள் ஆசைதான், என்னைப்போல ஒரு நல்ல பையனுக்கு அநுவை மணம் செய்து கொடுத்துவிட வேண்டுமென்று. பெண்ணைப் பெற்ற எவரும் ஒரு கண் வைப்பதற்குத் தகுதியுடையவன் நான் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் ஒருநாள் அநுவை, பி. எல். தேறிய முன்சிப் உத்தியோகம் பார்க்கும் ஒரு புண்ணியவானுக்குக் கட்டிக் கொடுத்து விட்டார்களென்ற சமாசாரத்தைக் கேள்விப்பட்டேன். நாங்கள் ஏழைகள். ஆனால் அந்த ஏழைமையினால் அல்லவோ எங்கள் குலத்துக்குக்

கௌரவப் பெயர் வந்தது! பெண்ணைப்பெற்ற மகானுபாவன் இந்தக் கணக்கில் என்னைப் பார்க்கவில்லையே! நான் மனத்துள் வரித்த அந்த தங்கப் பதுமை நீருள் மூழ்கியது. என் வாழ்க்கையிலிருந்து நழுவி அவள் எங்கோ மறைவில் கிடந்தாள்.

இளமைதொட்டு எல்லாரையும் விட என்னுடன் மிகவும் பழகிய அவள் ஒரே நாளில் அறிமுகமிராத மனித வெள்ளத்தில் ஒரு துளியெனக் கலந்து போனாள். அன்று என் உள்ளத்தை இடித்துத் துன்புறுத்திய வேதனையை நான்தான் அறிவேன். அவளை நழுவ விட்ட பிறகு, என் இதயக் கோவிலில் அவளை வைத்து வழிபட்டேனா? இல்லை. எனக்கு மூண்ட ஓர் வெறுப்பின் அதிர்ச்சியால் அலைக்கு மேல் அலையாக எழுந்து அப் பொற்பாவையை மறதியின் ஆழத்துள் கிடத்தி விட்டது. அதுவை என்றென்றும் அவ்விளமை உருவிலேயே நான் பாவித்து வருகிறேன். அன்று எனக்கு இருந்த தகுதியோடு ஒப்பிடும்போது அவள் சிறுமையைத்தான் நான் கண்டேன். என் தகுதிக்கு ஏற்ற மரியாதையைத் தராத ஒரு விஷயம் வாழ்வில் எந்த நன்மையையும் பயக்காதென நான் தெளிந்தேன். போகட்டும். வாழ்வில் சத்தாக இருப்பதனால் யாதொரு பயனுமில்லை என்பதை உணரலானேன். பணம் குவிக்க வேண்டும். இந்த அகில்பாபுவிடம், 'ஐயா! இப்போது பாரும் என்னை' என்று சொல்லி அவர் வயிற்றெரிச்சலைக் கிளப்ப வேண்டும். இந்த உறுதியுடன் என் வேலையில் மும்முரமாக இறங்கினேன்.

வேலையில் திறமை மிக்கவனாவதற்கு. ஒருவன் தன்னிடத்தில் அசையாத நம்பிக்கை வைத்தால்தான் முடியும். இந்த அம்சம் என்னிடம் ஏராளமாக இருந்தது. இது ஒரு தொற்று நோய் மாதிரி. தன்னையே தான் நம்பியிருப்பவனிடந்தான் பெரும்பாலானோர் நம்பிக்கையும் மதிப்பும் வைக்கின்றனர். வேலையில் ஈடுபடும் புத்தி, எனக்கு இயல்பாகவே அமைந்தது. மற்றவர்கள் இதையே என்ன அசாதாரணமான ஆற்றல் என நினைத்தனர்.

காரியத்தில் வெற்றி காணும் முறைகளை விளக்கும் நூல்கள் என் அலமாரியில் நிரம்பி விட்டன. வீடு கட்டுதல், மராமத்து செய்தல், மின்சார வசதிகள் அமைத்தல், அரும் பொருள்களை வரவழைத்து விநியோகித்தல், மார்க்கெட் விலைவாசிகளைப் பற்றியும் எக்ஸ்சேஞ்சு விகிதம் குறித்தும் நக்கனுனுவிலான ரகசியங்கள், சொத்து விற்பனை, மதிப்பீடு தருதல் இவை போன்ற வாணிபத் திணையின் பல துறைகளில் திறமை வளர்ந்து பெரிய ஆளாகும் வழியைக் கண்டு கொண்டேன்.

ஒவ்வொரு நாளும் நான் ஏதாவது காரியத்தைச் சாதித்ததைப் பற்றிப் பேசவேனே தவிர, எந்தக் காரியத்தையும் செய்தது இல்லை. ஒரு சுதேசி கார்பாரில் சேரும்படி என்னைச் சிலர் தூண்டினர். இந்தமாதிரி விவகாரங்களில் நேர்மையை எதிர்பார்க்கவே முடியாது. எத்தனையோ சங்கடங்கள் இருக்கின்றன. நேர்மையுடன் நடக்க வேண்டுமானால் ஒருவன் இந்தப் பக்கம் திரும்பவே கூடாது என்பது என் கொள்கை. 'ஆனால் வியாபாரத்தில் இதையெல்லாம் பார்த்தால் முடியுமா? அப்படி இப்படித்தான் இருக்கும்' என்று ஒரு நண்பர் உபதேசம் செய்தார். இதனால் அவருக்கும் எனக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டது.

சாகும்வரை, அழகு அழகான 'பிளான்' 'எஸ்டிமேட்' 'ப்ராஸ்பெக்டஸ்' எழுதி எனக்கு இருந்த நல்ல பெயரை நான் காத்து வந்திருக்கலாம். ஆனால் விதியின் சுழற்சியில் சிக்கி, 'பிளான்' தயாரிப்பதை விட்டு வியாபாரம் செய்ய இறங்கினேன். இதற்கிடையில் தந்தையும் காலமாகிவிடவே குடும்பத்தை நடத்தும் பொறுப்பும் என்மீது விழுந்தது. பின்னர் வேறொரு தொல்லையும் வந்து சேர்ந்தது. அதைப் பற்றியும் சொல்லுகிறேன்.

பிரஸன்னன் என்பவன் என்னுடன் படித்தவன். அவன் எப்படி வளவளவென்று பேசுவானோ, அப்படியே யாரையும் தூற்றுவான். நான் பரம்பரையாகப் பெற்ற நேர்மையைக் குறித்து அடிக்கடி குத்திக்காட்ட அவனுக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. தந்தை எனக்கு ஸத்யதனன் என்ற பெயரை வைத்திருந்தார். பிரஸன்னன் எங்கள் வறுமை நிலைமையைச் சுட்டி, ''அப்பா என்னவோ பெற்றெடுக்கும் போது உன்னை மித்யாதனனாகப் பெற்றார் (செல்வம் பொய்யானவன்); பெயர் வைக்கும் போது மட்டும் ஸத்யதனன் (உண்மைச் செல்வன்) என்று வைத்தார். இதை விடச் செல்வத்தை உண்மையாக்கி, பெயரைப் பொய்யாக வைத்திருந்தால் ஒன்றும் கெட்டுப் போயிருக்காது'' என்பான். இந்தப் பிரஸன்னன் வாய்க்கு நான் பயந்தவன். வெகுநாட்கள் வரை அவனைக் காணவில்லை. பர்மா, ஹாதியானா, ஸ்ரீரங்கப்பட்டணம் ஆகிய இடங்களில் பல வியாபாரம் நடத்தி விட்டு வந்திருக்கிறான். அவன் திடீரெனக் கல்கத்தாவில் என்னைப் பிடித்தான். அவனுடைய வாய்க்கு நடுங்கும் நான், அவன் இப்படி என்னை மதித்து வந்ததைக் குறித்து அடைந்த மகிழ்ச்சியோ கொஞ்ச நஞ்சமன்று. 'நான் சொல்வதை நம்பு. ஒரு மதிலைப் போலவோ, தூர்க்காசரண் லாஹாவைப் போலவோ நீ ஆகாது போனால், இதோ சொல்லுகிறேன், பவுபஜார் முனையிலிருந்து பாக்பஜார் முனைவரைக்கும் நான் மூக்கை அறுத்துக் கொள்வதாகச் சபதம் செய்கிறேன்' என்று கூறினான்.

பிரஸன்னன் வாயில் இவ்வளவு பெரிய வார்த்தை வருவது இலேசான விஷயமன்று. அவனைப் படைத்தவனுக்குத்தான் அது புரியும். மேலும் அவன் உலகத்தை நன்றாக அறிந்தவன். அவன் சொல்லுக்கு மதிப்பு உண்டுதான்!

''வியாபாரத்தைப் பற்றி என்னென்னவோ புரிந்து கொண்டதாகச் சொல்பவர் பலரை நான் பார்த்திருக்கிறேன் அண்ணா. அவர்கள் தான் எல்லாரையும்விடத் தெரியாமல் சங்கடத்தில் மாட்டிக் கொள்பவர்கள். அவர்கள் தம் புத்தி பலத்தால் எல்லாவற்றையும் அளந்து பார்க்கிறார்களே தவிர மேலானதோர் நேர்மை, தர்மம் என்று இருப்பதை மறந்து விடுகின்றனர். ஆனால் உன்னிடம் இந்த இரண்டு அரிய அம்சங்கள் மணியும் பவளமும் போல் இணைந்திருக்கின்றன. தரும வழியில்

## உங்கள் வீட்டு அழகுக்குப் பொருத்த மானது

ஓரியண்ட் விசிறிகளின் புதிய அமைப்பு தோன்றுவதற்கு முன், உற்பத்திப்பொருள்களின் அழகில் கைத்தொழில் டிஸைனர்கள் அவ்வளவு அறிவு ஆற்றல் காட்டவில்லை.

உபயோகிப்பாளரைத் திருப்தி செய்யவேண்டும் என்று சிரத்தை மிக்க ஓரியண்ட் டிஸைனர்கள் உங்கள் அறையின் அழகுக்கு ஏற்ற நேர்த்தியான விசிறியைத் தயாரித்துத் தருகின்றனர்கள். சிருங்காரக் கோடுகள் வழவழப்பான அச்சுப்பெட்டியின் எல்லைப் புறங்கள் அமைந்த கேஸிங் என்றும் நிலைத்திருப்பதுமான முத்துப்போன்ற ஸ்டோவ் எனமல் பினிஷ் இவைகள் ஒவ்வொரு வீட்டிலும் அழகான சிற்பச்சித்திர மாக அமைந்திருக்கிறது. மகிழ்ச் சியைத் தரும் வஸ்து. வேலைத் திறனில் உத்தமமானது




**ஓரியண்ட் விசிறி-தோற்றத்திலும் சேவையிலும் பல வருடங்கள் முன்னதாக நிற்கிறது.**

**ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்,**
**6 கோர் பீபி லேன், கல்கத்தா-11**

டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
ஹிந்துஸ்தான் மலர்ஸ் லிட்., 4, ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, சென்னை - போன் : 2658

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளிலிருந்து

நிவாரணமளிப்பதில் **சிறந்தது**

ஏனெனில் அதில் **நான்கு மருந்துகள்** சேர்ந்துள்ள



வைத்திய விஞ்ஞானிகள், 'அனஸின்' என்பது வலியை அகற்றும் தீவிர சக்திவாய்ந்த அநேக மருந்துகளின் சரியான விகிதாச்சார கலவை என்று கூறுகிறார்கள். அது வேறெந்த ஒரே மருந்து கலவையைவிட அதிதுரிதமாயும், அபாயமின்றியும், நிச்சயமாயும் நிவாரணமளிக்கிறது என்று ஞாபகத்தில் வையுங்கள்! 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலவையாகும். ஆகவே 'அனஸின்', தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து துரிதமாயும், முற்றிலும் குணமளிப்பதில் சிறந்தது. எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER

ட 67 (R) TAM.

செல்லும் உறுதியும், காரியத்தில் ஊக்கமும் உன்னிடம் விசேஷமாக இருக்கின்றன.''

ஏதாவது ஒரு வியாபாரத்தில் யாருமே தீவிரமாக இறங்கும் காலம் அது. வாணிபத்தைத் தவிர நாடு உன்னத நிலை அடைவதற்கு வேறு துறை இல்லை என்றெல்லாம் பேசுவார்கள்.

பிரஸன்னனைப் பார்த்துச் சொன்னேன்: ''என் கையில் ஜுவேஜ் இல்லையேயப்பா?''

''நீ ஒண்ணு, உன்னுடைய பிதிரார்ஜிதச் சொத்துக்கு என்ன அண்ணா குறைவு?'' என்றான் அவன்.

அப்போது எனக்குச் சட்டெனத் தோன்றியது; பாழாய்ப் போனவன் பழையபடி என்னை ஏளனம் செய்கிறானென்று.

''நான் உன்னை ஏளனம் செய்யவில்லை. நேர்மையே திருமகள் வீற்றிருக்கும் பொன் தாமரை. நம்பிக்கையின் மீதுதான் எந்த வியாபாரமும் நடக்கிறதே தவிர வெறும் பணத்தைக் கொண்டல்ல'' என்றான் அவன்.

தந்தை நாள் முதற்கொண்டே விதவையான பெண்கள் தம் பணத்தைப் பத்திரத்துக்கு எங்கள் வீட்டில்தான் வைப்பார்கள். அவர்கள் வட்டிக்கு ஆசைப்படாதவர்கள். பெண்களை ஏமாற்றுவது எளிதான காரியம். ஆனால் அந்தப் பயம் எங்களிடம் இல்லை.

இப்படிச் சேர்ந்திருந்த பணத்தை வைத்து ஒரு சுதேசி கார்பாரைத் தொடங்கினேன். துணி, காகிதம், மசி, பித்தான், சோப்பு, எல்லாம் விற்பனைக்காகத் தருவித்தேன். ஜனங்கள் கூட்டம் கூட்டமாக வந்து வாங்கினர் கடையில்.

ஒரு விஷயம் கூற வேண்டும். கல்வியில் முன்னேற முன்னேற நாம் காண்பது என்ன? கற்றது கைம்மண் அளவு என்ற உண்மையைத்தான். பண விஷயமும் இப்படித்தான். பணம் பெருகப் பெருக, பணம் போதாது போலவே தோன்றும். இப்படி ஒரு நிலை ஏற்படும் போது பிரஸன்னன் சொன்னான். அவன் இதை வாயால் சொல்லவில்லை, என் மூலமாகவே இதைச் சொல்ல வைத்தான். 'வெறும் சில்லறைக் கடை வைத்து நடத்துவது வாழ்க்கையின் வீண் பிரயாசைதான். உலகெங்கிலும் பரவியதான ஒரு வியாபாரம்செய்வதல்லவோ உண்மையான வாணிபம்? நம் நாட்டுப் பணம் நம் நாட்டிலேயே சுழன்று கொண்டிருந்தால் செல்வம் செக்கு மாட்டைப்போல ஒரே இடத்தில் வட்டமிடுமே தவிர, முன்னுக்குச் சென்று விருத்தியடையாது.'

இவ்வளவு அழுத்தமாகவும், ஆர்வத்தால் குரல் தழுதழுக்கவும் பிரஸன்னன் வெளியிட்ட உண்மையைக் கவனிக்கும் போது அதைப் போன்று புதுமையானதும், ஆழ்ந்ததுமான அறிவுரையை எவருமே தம் வாழ்வில் கேட்டிருக்க முடியாதென்றே தோன்றியது. அப்புறம் நான் அவனிடம், காகிதத்தின் உற்பத்தி, அது மலிவாகக் கிடைக்குமிடங்கள், அதில் சேதாரம் எவ்வளவு நேரிடும், வெளிநாட்டில் எங்கெங்கே அதற்குக் கிராக்கி, எவ்வளவு லாபம் கிட்டும், இவை பற்றி நுட்பமான புள்ளி விவரங்களைக் கூட்டிக் கழித்துப் பெருக்கி வகுத்து, சிவப்பும் கறுப்புமான மசியில் நூறு காகிதத் தாள்களில் குறித்துக் கொடுத்தேன். அவன் அதைப் பெற்று என் பாதத்தூளியைச் சிரமேற் கொண்டான். ''நான் கர்வப்பட்டேன், எனக்குத்தான் எல்லாம் தெரியுமென்று. அண்ணா, உன்னிடம் எவ்வளவோ கற்றுக் கொள்ள வேண்டும்'' என்றான். ஒரு குறுக்குக் கேள்வி போட்டான்: ''இத்தனையும் இருக்க, உன் கணக்கில் ஏதாவது பிசகு இருந்தால்?...''

மந்திரவாதி: இதோ இந்தப் பாத்திரம் காலியாக இருக்கிறது! இதில் தண்ணீர் வரவழைக்கிறேன், பாருங்கள்.



கூட்டத்தில் ஒருவர்: இந்த மந்திர வாதியை எங்கோ பார்த்தமாதிரி இல்லை?
மற்றவர்:—ஆ. தெரியலையா. அவர் நம்ம வீட்டுப் பால்காரராக இருந்தவராச்சே?

எனக்கு ரோஷம் தலைக்கேறியது. ''எப்படிப் பிசகு ஏற்படும்? காகிதத்தில் நான் புள்ளி விவரங்கள் தந்திருக்கிறேன். இதில் நஷ்டம் ஏற்படக் கூடியதை ஒருபுறமாகக் காட்டியிருக்கிறேன். வெறு நிகர லாபம் என்ன கிட்டுமென்றும், அது இருபது சத விகிதத்திலும், மேலே போகாதென்றும் விவரித்திருக்கிறேன்.''

இவ்வாறு சில்லறை வியாபாரமென்னும் கால்வாயிலிருந்து கார்பாரின் கடலுள் புகுந்தேன். இது என் விடாமுயற்சியின் விளைவு. அதற்கான பொறுப்பை நானே ஏற்றேன்.

நம் குடும்பத்தாரின் நேர்மையில் நம்பிக்கை ஒருபுறம் இருக்க, இப்போது பணத்துக்கு நல்ல வட்டியும் உண்டு என்று அறிவித்ததுடன் பணம் வந்து குவிந்தது. பெண்கள் கெட்டித் தங்க நகைகளை விற்றுப் போட்ட பணம் சில வருஷங்களிலேயே இரட்டிக்க, என்னிடம் கொட்டினர். பெரிய வியாபாரத்தில் இறங்கியதும் எந்தத் திசை நான் செல்கிறேனென்பதே தெரியவில்லை. என்னுடைய திட்டத்தில் தனித்தனியாக வகுத்துச் சிவப்பு கறுப்பு மசியில் போட்டிருக்கும் கணக்குப்படி நடைமுறையான வியாபாரத்தைப் பார்க்கும் போது எதுவுமே விளங்கவில்லை. என்னுடைய திட்டங்கள் எல்லாம் தாறுமாறாயின. அதனால் வியாபாரம் சுகமாக நடக்கவில்லை. என் அந்தராத்மாவுக்கு மட்டும் நன்கு புரிந்து விட்டது, வியாபாரம் நடத்துவதில் எனக்குத் திறமை போதாது என்பதை. அதை இழுத்துப் பிடிக்கவும் வழியில்லை என்பதும் தெளிவாயிற்று. பிரஸன்னன் கையிலேயே அதை நம்பி விட்டு விட்டேன், நான் பெயரளவுக்குத்தான் நிர்வாகி, பெரும் பங்குதாரன். நடத்துவதெல்லாம் பிரஸன்னன். கையெழுத்திடுபவன் நான். சாமர்த்தியம் அவனுடையது. நானே

யாம் என் பெயர் மீது நிற்பது. இப்படி இருவர் கூட்டான இந்தக் கார்பார் எந்தக் கதிக்குக் கொண்டு விடுமென்பதை நான் அறிந்து கொள்ளவே இல்லை.

கடைசியில் நான் வந்து நின்ற நிலை, அதன் கரையோ, அதன் ஆழமோ எனக்குப் புலப் படவில்லை. அச்சமயம் வேறு வழியில்லாமல் உண்மை நிலவரத்தை வெளிப்படுத்தி விடு வதே நேர்மையெனத் தோன்றியது. ஆனால் நேர்மையினால் எடுத்த புகழைக் காப்பது அரிதாயிற்று. என்னை நம்பித் தந்த பணத் துக்கு வட்டியாவது கொடுத்து விடப் பார்த் தேன். ஆனால் எனக்குக் கிடைத்த லாபத்தி லிருந்து இதைச் சரிக்கட்ட முடியவில்லை. ஆகவே வட்டியின் விகிதத்தை அதிகமாக்கி மேலும் பணம் திரட்டினேன்.

எனக்கு மணமாகிச் சில வருடங்கள் ஆயின. வீட்டு வேலைகளைத் தவிர என் மனைவிக்கு வேறு எதிலும் அக்கறை கிடையாது என்பது எனக்குத் தெரியும். திடுமென இப்பேர்ப்பட்ட வளுக்குப் பணத்தின் மீது ஒரே ஆசை வந்து விட்டது. ஒரு வேளை எனக்கு அடித்த இந்தக் காற்று என் குடும்பத்திலும் வீசத் தொடங்கி விட்டதோ என்னவோ! என்னிடமிருந்த வேலையாள், பணிப்பெண் ஆகியோரும் இந்தக் கார்பாரில் பணத்தைப் போட்டனர். என் மனைவி தன் நகைகளை விற்று வியாபாரத்தில் போடச் சொல்லி என்னை வற்புறுத்திய போது நான் அவளுக்கு நன்மதி கூறினேன். 'பேராசை போன்ற பகைவன் வேறில்லை' என்று. என் மனைவியின் பணத்தை நான் ஏற்கவில்லை. மற்றோர் ஆளின் பணத்தையும் என் தொல்லையில் போட இசையவில்லை.

* * *

அநு மகளைப் பெற்றுக் கைம்பெண்ணாகி விட்டாள். அவளுடைய கணவன் எவ்வளவு பணக்காரனோ, அவ்வளவு கஞ்சனெனப் பெயர் வாங்கியவன்.

சிலர், இரண்டு லட்சத்துக்குமேல் வைத்துச் சென்றானென்றும், சிலர், இன்னும் அதிக மாக இருக்குமென்றும் கூறினர். கஞ்சத் தனத்தில் அவனுக்கு ஜோடி போனவள் அவன் மனைவி அநு என்றும் சொல்லிக் கொள் கின்றனர். அப்படித்தான் இருக்க முடியும். அநு தகுந்த இடத்தில் கல்வி பயின்று இருந் தால், நல்ல இணக்கம் இருந்தால் இப்படி ஆகியே இருக்க மாட்டாளென நினைத்தேன்.

தன் பணத்தில் கொஞ்சம் என் வியாபாரத் தில் போடுவதாக அவள் எனக்கு வேண்டு கோள் அனுப்பி யிருந்தாள். எனக்கோ பணம் தேவைதான்; ஆனால் இது விஷயமாக அவளைச் சந்தித்துக் கேட்கத் துணிவு வரவில்லை.

ஒரு சமயம் பெரிய தொகையான உண்டி யலைச் செலுத்தும் கெடுவுநாள் வந்துவிட்டது. பிரஸன்னன் ஓடி வந்து, "அண்ணா! அநில் பாபுவின் பெண் பணம் தருவதாகச் சொன் னாளே, அதை வாங்கிக் கொண்டு புரட்ட லாமே...?" என்றான்.

"நான் வேறு எங்காவது, கன்னம் வைத் தாவது பணம் கொண்டு வருவதைப் பார்ப் பேனே தவிர அவளுடைய பணத்தைக் கையாள மாட்டேன்" என்றேன்.

"உன்னிடத்தில் உனக்கு எப்போது நம் பிக்கை குறைந்து வந்ததோ அன்றே இந்த வியாபாரம் உருப்படவில்லை. நஷ்டத்துக்கு மேல் நஷ்டம் வருகிறது. மண்டையை இடித் துக் கொள்ளக் கொள்ளத்தான் மண்டை உறுதியாகும்" என்றான் பிரஸன்னன். நான் அவன் யோசனைக்கு இணங்கவே இல்லை. மறு நாள் பிரஸன்னன் என்னிடம் வந்து, "தெற்கே யிருந்து பிரபலமான மராட்டி ஜோசியன் வந்திருக்கிறான். உன் ஜாதகத்தைக் காட்ட லாம் வா" என்றான்.

ஸநாதன தத் வம்சத்தவர் ஜாதகம் பார்த் துத் தம் பாக்கியதசையைப் பரீட்சைசெய்யும் காலம் வந்து விட்டதா? சறுக்கும் காலம் வந்து விட்டால், மனித இயல்பில் பதுங்கி யிருக்கும் பழைமையான காட்டுமிராண்டி வீறுகொண்டு எழுந்து விடுகிறான். அதிர்ஷ்டத் தைக் கடைசியில் நம்பவேண்டி யிருக்கிறதே! அறிவைக் கொண்டு அமைதியுறாமல், குருட்டு நம்பிக்கைக்கு அடைக்கலம் புகவேண்டி யிருக் கிறது. பிறந்த நாள் குறிப்பை எடுத்துக் கொண்டு ஜோதிடனிடம் ஓடினேன். சர்வ நாசம் உண்டாக்கும் தசைக்கு நான் வந்து விட்டதை அறிந்தேன். ஆனால் குரு நல்ல இடத்தில் இருப்பதால் யாரோ ஒரு பெண் ணின் சொத்து கிடைத்து அதிலிருந்து ஐசு வரியம் பெருகுமாம்.

ஜோசியனுடன் பிரஸன்னன் செய்த சூழ்ச்சி யாக இருக்குமோ என்று ஐயம் பிறந்தது எனக்கு. நான் வீட்டுக்குத் திரும்பியதும் பிரஸன்னன் என் கையில் ஒரு புத்தகத்தைக் கொடுத்து, "திறந்து பார்" என்றான். திடு மென ஒரு பக்கத்தைப் புரட்டியபோது ஒரு சீட்டு விழுந்தது. அதில் ஆங்கிலத்தில் வரைந் திருந்தது. 'வியாபாரத்தில் திகைப்புறச் செய்யும் வெற்றி.'

அன்றே அநுவைக் காணச் சென்றேன். கணவனுடன் ஒவ்வொரு ஊராக மாறும் போது மலேரியாக் காய்ச்சல் அவளைப் பற்றி யது. இப்போது அவளுக்கு க்ஷயரோகம் கண் டிருப்பதாக டாக்டர்கள் அஞ்சுகின்றனர். ஏதாவது நல்ல ஆரோக்கியமான இடத்துக் குப் போகச் சொன்னால் அவள், 'இன்னும் ரொம்ப நாட்கள் நான் இருக்கப்போவதில்லை. என் குழந்தை ஸுபோவின் பணத்தை நான் ஏன் வீணாக்க வேண்டும்?' என்று கூறி, ஸுபோவையும் அவளுடைய பணத்தையும் தன் உயிரைப் போக்கிக் கொண்டு காத்து வருகிறாள்.

அநுவைப் பீடிக்கும் நோய் அவள் உருவை அடியோடு மாற்றிவிட்டது. அவளைத் தொலை வில் இருந்து பார்ப்பது போலவே மெலிந்து தோற்றினாள். சுடர்விடும் ஜீவவொளி மட்டும் தேய்ந்த அவள் உடல் பளிங்கின் மூலம் தென் பட்டது. மெல்ல மெல்லக் கரைந்து வந்தாள். அவளுடைய பிராணன் மரண வாயிலில் வந்து சொர்க்க ஒளியை நோக்கி நிற்பது போலவே இருந்தது. கருமை மலரும் அவள் கண்களின் கீழே கருவளையம் இட்டிருந்தது. அவள் வாழ் வில் விரைந்து படரும் மாலை மங்குலை ஒத்து இருந்தது அது. என் உள்ளம் திடுக்கிட்டது. உலகை வெறுத்துச் செல்லும் ஒரு தெய்வ அணங்காகவே எனக்குத் தோன்றினாள்.

(அடுத்த இதழில் முடியும்)

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publication Private Limited Managing Editor: T. Sadasivam**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

## ஆரோக்கியத்தை விரும்புவோர் எப்பொழுதும் லைப்பாய் உபயோகித்தே நீராடுவார்

விளையாடும்போதும் சரி, வேலை செய்யும்போதும் சரி, அழுக்கிலிருந்து நாம் தப்ப முடியாது. நம் ஆரோக்கியத்திற்கு நிரந்தரமாக ஆபத்து விளைவிக்கும் நோய்க் கிருமிகள் அழுக்கில் இருக்கின்றன. அக் கிருமிகளைக் கழுவிக் களைந்து உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பது லைப்பாய் சோப்.

அன்றாடம் லைப்பாய் சோப் தேய்த்துக் குளித்து உங்கள் ஆரோக்கியத்தைக் காத்துக்கொள்ளுங்கள். லைப்பாய் ஸ்நானம் புது மலர்ச்சியூட்டுவது.




ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

L 278-50 TM